# இலக்கணத் தெளிவு

உயர்தர வகுப்புக்களுக்குரியது

★

வித்துவான் க. சொக்கலிங்கம் எம். ஏ., (இலங்கை)
(சொக்கன்)

வெளியீடு:
ஸ்ரீ சுப்பிரமணிய புத்தகசாலை
235, காங்கேசன்துறை வீதி,
யாழ்ப்பாணம்.

விலை ரூபா 14-00

# இலக்கணத் தெளிவு

க. பொ. த. ப. உயர்தர மாணவர்க்கான இலக்கண விடயங்களை உள்ளடக்கிய இந் நூல், க. பொ. த. ப. சாதாரணதர மாணவரின் அடிப்படை இலக்கணத் தேவைகளையும் நிறைவு செய்வதோடு, பொதுக்கலைத் தகுதிகாண் தேர்வு (G. A. Q.) நாடிகளுக்கு உசாத்துணை நூலாகவும் உதவும்.

எழுதியவர் :

வித்துவான் க. சொக்கலிங்கம், எம். ஏ., (இலங்கை)

(சொக்கன்)

வெளியீடு :

ஸ்ரீ சுப்பிரமணிய புத்தகசாலை,

235, காங்கேசன்துறை வீதி,

யாழ்ப்பாணம்.

முதற்பதிப்பு 1981

Printed by Mr. Arumugam Subramaniam at Sri Subramania
Printing Works, 63, B. A. Thamby Lane, Jaffna
& Published by Mr. Arumugam Subramaniam
Sri Subramania Book Depot, 235, K. K. S. Road, Jaffna.

யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்தின்
சிரேட்ட தமிழ், மொழியியல் விரிவுரையாளர்

**கலாநிதி அ. சண்முகதாஸ் அவர்கள்**

வழங்கிய

# அணிந்துரை

தமிழ் மொழியிலே ஆறுமுகநாவலருடைய இலக்கணச் சுருக்கத்துக்குப் பின்னர் முறையான இலக்கண நூல் எழுதப்படவில்லையென்றே கூறவேண்டும். ஆனால், தமிழ் இலக்கண இயல்புகளை விளக்கி எழுதும் நூல்கள் பல தோன்றியுள்ளன. அவ்வரிசையிலே சொக்கன் அவர்களுடைய இலக்கணத் தெளிவு என்னும் இந்நூல் வெளிவருகின்றது. தமிழ் இலக்கணகாரர் எழுதியனவெல்லாம் இயன்முறை இலக்கணங்களே. தமிழுக்குச் செயன்முறை இலக்கணம் முழுமையாக இன்னும் எவராலுமே எழுதப்படவில்லை. ஆனால், இயன்முறை இலக்கணத்தையும் செயன்முறை இலக்கணத்தையும் இணைக்கும் முயற்சிகள் பல காலமாக மேற்கொள்ளப்பட்டு வந்துள்ளன. மரபுவழித் தமிழ் இலக்கணத்திலும் நவீன மொழியியல் விஞ்ஞானத்திலும் ஆட்சியுள்ளவர்களே இம்முயற்சிகளிற் பங்குகொண்டுள்ளனர். நவீன மொழியியலிலே பயிற்சி பெறாதபோதிலும், சொக்கன் இந்நூலிலே இயன்முறை இலக்கணத்தையும் செயன்முறை இலக்கணத்தையும் இணைக்கும் முயற்சியிலே ஈடுபட்டுள்ளார்.

இலக்கணச் சுருக்கம், க. பொ. த. ப: உயர்தர மாணவர்களுக்குப் பாடநூலாக அமைகின்றது. அந்நூல் கூறும் இலக்கண விதிகளை விளங்கிக்கொள்வதிலே பல மாணவர்கள் அவதியுறுகின்றனர். அவர்களுக்கு அவ்விதிகளை இலகு முறையிலே இக்கால நடைமுறையிலிருக்கும் உரைநடையிலே விளக்கங் கூறும் ஒரு நூல் பயனளிப்பதாகும். அத்தகைய பயன்பாடுடைய நூலாக இலக்கணத் தெளிவு அமையுமென்பது திண்ணம். இலக்கண விதிகளைத் தெளிவுறுத்த ஆசிரியர் எடுத்தாளும் உதாரணங்கள் பற்றி இங்குச் சிறப்பாகக் குறிப்பிடுதல் வேண்டும். 'ஆகுபெயர்' பற்றி ஆசிரியர் விளக்குமிடத்துப் பின்வரும் உதாரணங்கள் சிலவற்றை எடுத்தாளுகின்றார் :

குணவாகுபெயர் : வெள்ளை அடித்தான்.
எண்ணலளவையாகுபெயர் : ஐந்தும்கெட்டு அறிவும்கெட்டது.
நீட்டலளவையாகுபெயர் : இரண்டு மீற்றர் சட்டைக்குப்போதும்

காரியவாகுபெயர் : எழுத்தாளர் தரமான இலக்கியம் படைத்தல் வேண்டும்.

மேற்காட்டிய எடுத்துக்காட்டுகள் யாவும் இன்று நாம் நடைமுறையிலே உபயோகிப்பனவாகும். அத்தகைய உதாரணங்களை எடுத்தாளுவதன்மூலம் மாணவர்களுக்குத் தெளிவினையும் விளக்கத்தினையும் அளிக்கலாம்.

தமிழ் இலக்கணகாரர் மேற்கொண்டுள்ள இலக்கணப் பாகுபாடுகளின் தேவையினையும், அவற்றுக்கான அடிப்படைகளையும் மாணவர்களுக்கு விளக்குவதன் மூலம் அவர்களுக்கு மேலும் தெளிவினை ஊட்டலாம். உதாரணமாகத் தெரிநிலை — குறிப்பு என்னும் பாகுபாட்டினைத் தமிழ் இலக்கணகாரர் ஏன் மேற்கொண்டனர் என்பதனை விளக்கிய பின்னர் அவை பற்றிக் கூறுதல் நன்றாயிருக்கும். இந்நூலிலே சொக்கன் அம்முயற்சியிலே ஈடுபடவில்லை. எனினும் அத்தகைய விளக்கம் கொடுக்க வேண்டும் என்னும் ஆவல் நூலாசிரியருக்கு ஏற்பட்டுள்ளமையை ஓரிரு இடங்களிலே அவதானிக்கக் கூடியதாயுள்ளது. 'செய்யும்' என்னும் வினைமுற்றுப் பற்றிச் சிறப்பாக இலக்கண ஆசிரியர்கள் ஏன் கூறினர், அத்தகைய பாகுபாட்டின் தேவை என்ன, என்பனபற்றிச் சொக்கன் சிந்திக்க முயன்றுள்ளார். அதன் விளைவே,

''வினைமுற்றுப் பால்காட்டும் விகுதி பெறாது வழங்கிய நிலையும் ஒருகாலத்தில் இருந்திருத்தல் வேண்டும். அக்காலத்தில் வழங்கிய வினைமுற்றுக்களுக்குச் சான்றாகக் கிடைக்கும் வினைமுற்று இதுவாகலாம்'' என்னும் அடைப்புக் குறியிடப்பட்ட கூற்றாகும்.

மொத்தத்தில், க. பொ. த. ப, உயர்தர மாணவர்கள் தமிழ் இலக்கண விதிகளை இலகுவான முறையிலே கற்பதற்கு உதவக்கூடிய நூல் இதுவாகும். இத்தகைய விளக்க நூலை அளித்துள்ள திரு க. சொக்கலிங்கத்துக்குத் தமிழ் இலக்கண மாணவர் உலகம் கடமைப்பட்டுள்ளது. அவருடைய இப்பணி பயனுடைய பணி. தமிழிலக்கிய இலக்கணக் கல்வி சோர்வுநிலையிலிருந்து உரம்பெறும் சாத்தியக்கூறுகள் தென்படும். இக்காலகட்டத்திலே, தமிழிலக்கணக் கல்விக்கு உதவக்கூடிய இந்நூலை அளித்துள்ள சொக்கன் காலத்துக்கேற்ற தொண்டாற்றியுள்ளார். அவருடைய நூல் சிறந்தமுறையிலே அமைந்து மாணவர்க்குப் பயனளிக்கவேண்டுமென நான் அன்புடன் வாழ்த்துகிறேன்.

அ. சண்முகதாஸ்

திருநெல்வேலி.
1981-7-10.

# முகவுரை

''பேசும்பொழுதும் எழுதும்பொழுதும் இலக்கணப்பிழையறப் பேசவும் எழுதவும் பழகல்வேண்டும். பிழைபடப் பேசினும் எழுதினும், இலக்கணக் கல்வியாற் பயன் ஒருசிறிதும் இல்லை. பேசும்பொழுதும் எழுதும்பொழுதும் எல்லாருக்கும் பொருள் விளங்கத்தக்க இயற்சொற்களை வழங்கல் வேண்டும்.''.

— ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்

(நன்னூற்காண்டிகையுரையின் இறுதியிலே மாணாக்கர்களுக்கு அறிவித்தல் என்ற பகுதியிற் கூறியது.)

மேற்குறித்த அறிவுரை பொருள் பொதிந்தது. இந்த அறிவுரை இன்று பலராலும் கவனிக்கப்படுவதில்லை. பேச்சிலே பிழைபடச் சொற்களைக் கையாளினும் இலக்கணவிதி புறக்கணிக்கப்படினும் அவை உடன் திருத்தப்படும். ஆயின் எழுத்தில் உள்ளதோ அவ்வகைப் பிழைகளோடு ஆவணமாய் நிலைத்து நிற்கும். எழுதியவரின் அறியாமை புலனாவதோடு இது முடிவதில்லை. அவரைப் பின்பற்றி எழுதுவோரும் அப்பிழைகளையே சரியெனக் கையாளும் நிலையும் உருவாகும். இது விரும்பத்தக்கதன்று. அறிஞரும் எழுத்தாளரும் பெரும்பான்மையரான சாமானிய மக்களும் மொழியிற் புதுமையான பிரயோகங்களை அறிமுகஞ் செய்வதால் இலக்கண விதிகள் அவ்வப்போது மாற்றத்திற்குள்ளாவது இயல்பே. எனினும் இம்மாற்றங்கள் அடிக்கடி நிகழும் சூழ்நிலை உருவாதல் கூடாது; அது மொழியின் தனித்தன்மையையும் திறனையும் பெரிதும் பாதித்துவிடும்.

எனவே, ஒருமொழியை எழுத்துவடிவிலே திறம்படக் கையாள்வதற்கு அதன் இலக்கண முறைமையினை ஓரளவாவது தெரிந்துகொள்ளவேண்டியது அவசியமே. சிறப்பாக மொழியினூடாகக் கல்வி பெறும் மாணவர் தமது ஊடகத்தின் விதிமுறைகளைத் தெரிந்துகொள்வது கட்டாயமான ஒன்று. கடந்த சில காலமாய் இலக்கணக்கல்வி புறக்கணிக்கப்பட்டதாலே தமிழ் மொழியைக் கற்போர் பிழையின்றியும் ஆற்றலுடனும் அதனைக் கையாள முடியாது இடர்ப்படுவதைத் தமிழாசிரியனான நான் மிகவும் கவலையோடு அவதானித்து வருகின்றேன்.

இன்று மூன்றாம் வகுப்புத் தொடக்கம் சிறிதுசிறிதாக இலக்கணக் கல்வியும் மொழியூடாக நிகழ்ந்து வருவது வரவேற்கத்தக்கதே. எனினும் அதனை வெறுப்புடனும் சலிப்புடனும் அறிந்து கொள்வோரே பெரும்பான்மையராய் உள்ளனர். இப்புறக்கணிப்பு ஒன்பதாம் வகுப்பிலே தனது பாதிப்பினை மெல்லக்காட்டிப் பத்தாம், பதினோராம் வகுப்புக்களிலே மிகுதியும்

புலப்படுத்தி மாணவர், பல்கலைச்கழகத்திலே கலைத்துறைப் பாடங்களிலொன்ருய் விளங்கும் தமிழைப் புறக்கணிக்குமளவிற்குத் தீமை பயப்பதனை நாம் கண்கூடாகக் கண்டு வருகின்ருேம்.

இந்நிலை ஏற்பட்டமைக்கு இலக்கணக் கல்வியினைக் கற்பித்த முறைமையும் ஒரு காரணம் என்பதை மறுத்தல் இயலாது. மொழித்திறனை முட்டின்றிப் பெறுதற்கு இலக்கணம் ஒரு கருவி மட்டுமே என்ற கருத்தின்றி இலக்கணநூற் சூத்திரங்களைப் பாடமாக்குவதும் ஆங்காங்குத் தரப்படும் காலத்தோடொட்டாதனவான பழந்தமிழ்ச் செய்யுளுதாரணங்களை நினைவிற் சுமைகளாய் இருத்துவதுமே இலக்கணக் கல்வியென்ற உளப்பாங்கோடு தமிழாசிரியர் கற்பித்து வந்தமையும் 'தெனலிராமன் வளர்த்த பூனை'யாய் மாணவரை மாற்றி இலக்கணம் என்ருலே அஞ்சியோடும் நிலையினை அவர்களுக்கு ஏற்படுத்திவிட்டது.

உதாரணமாக, இரண்டு சொல்கிறேன். நானும் இதனை வாசிக்கும் நீங்களும் அன்மொழித்தொகைக்கு உதாரணங்களாக ஆயிழை, பொற்ருெடி. தகரஞாழல், தாழ்குழல் முதலான செய்யுளுதாரணச் சொற்ருெடர்களையே தெரிந்து கொண்டிருக்கிருேம். 'மாறுகண், வந்தான் என்பதில் 'மாறுகண்' என்ற தொடரும் அன்மொழித்தொகைதான் என்ருல் எங்களுக்கு வியப்புத்தான் உண்டாகும். செயப்பாட்டுவினைமுற்றினைச் செய்வினை முற்ருகவும் பயன்படுத்தலாம் என்பதற்குச் சேனுவரையர் 'திண்ணை மெழுகிற்று' என்று உதாரணங் காட்டியிருக்கிருர். அதனைத் தெரிந்துள்ள தமிழ் மரபுணர்ந்த அறிஞருக்கு 'இந்தப் பேனை நான் எழுதியது' என்பதும் அத்தகையதே என்ருல் வியப்புத்தான் உண்டாகும். இது நான் அநுபவவாயிலாகக் கண்டது. 'இலக்கணம் என்பது பரம்பொருள் போல இருந்தபடி இருப்பதன்று' என்னும் உண்மையை விளங்கிக்கொண்டு மாற்றங்களின் தன்மைகளையும் உணர்ந்துகொண்டு இலக்கண விதிகளுக்குக் காலத்துக்கேற்ற உதாரணங்களைக் கையாள அறிந்துகொண்டு அவற்றைக் கற்றுப் பயன்படுத்திஞல் அவை பகுத்தறிவிற்கு உகந்தனவாயிருக்கும் என்பது என் தாழ்மையான கருத்து

இக்கருத்தின் அடிப்படையிலேயே 'இலக்கணத் தெளிவு' என்ற இந்நூலினை எழுதியுள்ளேன். நான் தமிழிலக்கணத்தினை எழுத்தெண்ணிக் கற்று இந்நூலை எழுதவில்லை. இளம்பூரணர், சேனுவரையர், நச்சிஞர்க்கினியர் முதலான உரையாசிரியர்களின் உரைகளையெல்லாம் ஒப்பிட்டாராய்ந்து உண்மைகளை உணர்ந்து எனது ஆற்றலையும் காட்ட எண்ணி இதனை ஆக்கவுமில்லை. சங்கர நமசிவாயர், மயிலைநாதர், சிவஞான முனிவர் முதலான நன்னூலுரையாசிரியர்களின் வாதங்களையும் முடிவுகளையும் உய்த்துணர்ந்த பாண்டித்தியமும் எனக்கில்லை: பிறமொழிகளோடு தமிழ்மொழியினை ஒப்பிட்டாராய்ந்து மொழியியலடிப்படையிலே தமிழிலக்கணத்தினை அணுகுந் தகுதியும் நான் பெருததொன்று.



இவ்வளவு குறைபாடுகளுமுடைய நான் 'இலக்கணத்தெளிவு' என்ற இச்சிறு நூலையாக்குவதற்கு எனது அசட்டுத் துணிச்சலிலும் மிகுதியாய் என்னை உறுத்தி ஊக்குவித்த காரணி என் ஆசை ஒன்றே. ஒன்பதாம் வகுப்புத் தொடக்கம் க. பொ. த. ப. உயர்தர வகுப்புவரை தமிழ்மொழியினைக் கற்கும் மாணவர்க்கு எளிதான முறையிலே, நான் அறிந்துள்ள சில அடிப்படை இலக்கணக் கருத்துக்களை எடுத்துரைத்து அவர்களை ஆற்றுப்படுத்தல் வேண்டும் என்ற பேராசைதான் இதனை நான் எழுதக் காரணமாகும். இந்தப் பேராசை நியாயமெனஉணரும் ஆசிரியர்களும் மாணவரும் இந்நூலினைப் பயன்படுத்தி இதிற் காணப்படும் குறைகளை எனக்கெடுத்துரைப்பார்களாயின் அவர்களுக்கு நான் மிகவும் நன்றியுடையேன்.

பெரும் பசியுடன் வரும் ஒருவருக்குச் சோறுங் கறியுந்தாம் பெரிதும் வேண்டப்படும். ஆனுற் பானையிலே கொதித்துக்கொண்டிருக்கும் சோற்றின் தெளிவை — அவ்வேளையில் அதுமட்டுமே கிடைக்கக்கூடிய நிலையில் — அவர் வேண்டாம் என்று மறுக்கார்! அதனையருந்தித் தற்காலிகமாக அவர் தமது பசியுபாதையைக் குறைத்துக்கொள்வார். நான் என் அன்புக்குரிய இளமாணவருக்கும் அவர்களைக் கற்பிக்கின்ற ஆசிரியருக்கும் வழங்கும் இலக்கணத் தெளிவு இது. இஃது உங்கள் பெரும் பசிக்குப் போதாது என்பதை நான் அறிவேன். ஆயினும் பசிக்களை தெளியவாவது இத்தெளிவு உதவலாமன்ருே ?

இந்நூலினை விரைந்து அச்சிற் பதிப்பிக்க நேர்ந்தமையால் எழுத்துப்பிழைகள் சில தவிர்க்கமுடியாதனவாய் விட்டன. இவற்றின் திருத்தம் நூலின் இறுதியில் உள்ளது. நூலைப் படிக்கமுன் பிழைகளைத் திருத்திக் கொள்வது நன்று.

இந்நூலாக்கததின்போது கையெழுத்துப்படிகளை வாசித்துப் பல திருத்தங்களும் ஆலோசனைகளும் வழங்கிய என் தெழுதகை நண்பர் க. சின்னையா அவர்களுக்கும், ஆலோசனையோடு சரவை பார்த்தலிலும் உதவிபுரிந்த அன்பர் மயிலங்கூடலூர் பி நடராசன் அவர்களுக்கும், அரிய அணிந்துரை வழங்கிய கலாநிதி அ. சண்முகதாஸ் அவர்களுக்கும் எனது உளங்கனிந்த நன்றி உரியதாகுக.

'வாணி'
நாயன்மார்கட்டு,
யாழ்ப்பாணம்'
15-07-81.

க. சொக்கலிங்கம்
('சொக்கன்')

# பொருளடக்கம்

பக்கம்



# 1. எழுத்தியல்

ஆக்கப்படும் எப்பொருளும் மூன்று காரணங்களின் சேர்க்கையால் ஆவதே. நிமித்த காரணம், முதற்காரணம், துணைக்காரணம் என அவை பெயர்பெறும்.

1. நிமித்த காரணம் - பொருளை இயற்றும் கருத்தா (செய்பவன்)
2. முதற்காரணம் - மூலப்பொருள்
3. துணைக்காரணம் - பொருளை ஆக்க உதவும் கருவிகள்.

மொழி மனிதரால் ஆக்கப்படுவது. எனவே அதனைப் பேசுபவன் நிமித்த காரணன். அவன் அவ்வாறு பேசுவதற்கு எழுத்து முதற்காரணம் அவனது சிந்தனை, உணர்வு, நா, நாவால் உண்டாகும் ஒலி என்பன துணைக்காரணங்கள்.

ஆகவே, எழுத்தாவது மொழிக்கு முதற்காரணமாய் அமைவது.

எழுத்துக்கு இரு வடிவங்கள் உள்ளன. அவையாவன:-

1. ஒலி வடிவம் — எழுத்தை ஒலிக்கும்போது உண்டாவது.
2. வரி வடிவம் — ஒலிக்கும் எழுத்திற்கு அறிகுறியாக எழுது கருவியாலே குறிக்கப்படுவது.

எழுத்தியல் என்னும் இந்த அதிகாரத்திலே தமிழ்மொழியிலுள்ள எழுத்தின் இரு வடிவங்களும் விளக்கப்படும்.

## தமிழ்மொழியின் மூல ஒலி வடிவங்கள்

தமிழ் மொழிக்கு மூலமான ஒலிகள் முப்பது. இந்த மூல ஒலி வடிவங்கள் முதலெழுத்துக்கள் எனப் பெயர்பெறும். இவை இரு பிரிவுகளாய் உள்ளன.

முதற்பிரிவு — உயிரெழுத்து
இரண்டாம் பிரிவு — மெய்யெழுத்து

1. உயிரெழுத்து — தமிழ் மொழிக்கு உயிர்போல்வது. இதன் தொகை பன்னிரண்டு. அவையாவன :
அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ.

உயிரெழுத்தை 'உயிர்' எனவும், 'ஆவி' எனவும் அழைப்பர்.

2. மெய்யெழுத்து — தமிழுக்கு உடல் போல்வது. இதன் தொகை பதினெட்டு. 'இதனை' 'ஒற்று' 'உடல்' என்ற பெயர்களாலும் வழங்குவர். மெய்யெழுத்துக்களாவன:

க், ங், ச், ஞ், ட், ண், த், ந, ப், ம, ய், ர், ல், வ், ழ், ள, ற், ன்

## மூல ஒலிகளின் கால அளவு

மூல ஒலிகளான (ஒலி வடிவங்களான) உயிரெழுத்தையும் மெய்யெழுத்தையும் ஒலிப்பதற்கான கால அளவு உண்டு. இந்தக் கால அளவு 'மாத்திரை' எனவும் 'அளபு' எனவும் வழங்கும்.

மாத்திரையாவது கண்ணிமைப்பொழுது அல்லது கைந் நொடிப்பொழுது.

(அ) உயிரெழுத்துக்களுக்கான மாத்திரை :

1. ஒரு மாத்திரைக்கு உரியவை : அ, இ, உ, எ, ஒ (5)
2. இரு மாத்திரைகளுக்கு உரியவை : ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ (7)

ஒரு மாத்திரை, இரு மாத்திரைகளோடு ஒப்பிடப்படும் பொழுது குறுகிய கால அளவு கொண்டது எனவே அ, இ, உ, எ, ஒ ஆகிய ஐந்தும் குறில் அல்லது குறநெழுத்து என வழங்கும். மற்றைய ஏழும் நெடில் அல்லது நெட்டெழுத்து எனப்படும்.

(ஆ) மெய்யெழுத்துக்களுக்கான மாத்திரை :

மெய்யெழுத்துக்கள் யாவிற்கும் தனித்தனி மாத்திரை அரை. அஃதாவது, 'அ' என்ற எழுத்தை ஒலிக்கும் கால அளவுக்குள் க், ங் என்ற இரண்டு எழுத்துக்களையும் ஒலிக்கலாம்.

மெய்யெழுத்துக்கள், அவை ஒலிக்கின்ற இயல்பிற்கு ஏற்ப மூன்று வகைப்படும்.

1. வலிய ஓசை உடையவை வல்லினம், அவையாவன:
   க், ச், ட், த், ப், ற்.
2. மெலிய (மென்மையான) ஓசை உடையவை மெல்லினம். அவையாவன :
   ங், ஞ், ண், ந், ம், ன்



3. வலியனவும் அல்லாமல் மெலியனவுமல்லாமல் இடைப் பட்ட ஒலியியல்பு உடையவை இடையினமாம். அவை யாவன :
   ய், ர், ல், வ், ழ், ள்

## ஒலிவேறுபாடுகளுக்கேற்ப எழுத்துக்களைக் குறிக்கும் சாரியைகள்

எழுத்துக்களை அவற்றின் ஒலிவேறுபாட்டிற்கு அமையக் கரம், காரம், கான் என்னும் சாரியைகளைக் கொடுத்து வழங்குவர்.

உ — ம் : 'அ' — அகரம்
'ஆ' — ஆகாரம்
'ஃ' — அஃகான்
'ம்' — மஃகான் ஒற்று
'க்' — ககர ஒற்று

## துணை ஒலிகள் (சார்பெழுத்துக்கள்)

தமிழ்மொழியின் மூல ஒலிவடிவங்களுக்குத் துணையாக மூன்று துணையொலிகள் உள்ளன. இவையும் 'எழுத்து' எனவே பெயர்பெறும். இவை குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆய்தம் என்பன. (குற்றியலுகரம் திரிந்தே பெரும்பான்மை குற்றிய லிகரம் ஆகின்றது. எனவே, அது முதற்கண்வைக்கப்பட்டது.) இம்மூன்றையும் சார்பெழுத்துக்கள் என அழைப்பது மரபு.

(i) குற்றியலுகரம்

[அ, க, ச முதலான குற்றெழுத்துக்கள் ஒரு சொல்லின் தொடக்கத்திலே தனித்தனி அமைந்து அவற்றை வேறோர் எழுத்து மட்டும் தொடர்ந்து வருமானால் முதல் எழுத்தைத் தனிக்குற் றெழுத்து என்பர். கடி, பல என இரண்டெழுத்துக்கள் வரின் அவை குறிலிணை எனப்படும். இறுதி எழுத்தின் முன்பு இரண் டிற்கு மேற்பட்ட எழுத்துக்களும் வரலாம். இந்த விளக்கத்தை அறிந்துகொண்டு பின்வரும் வரைவிலக்கணத்தை நோக்குக.]

தனிக்குற்றெழுத்தல்லாத மற்றைய எழுத்துக்களுடன் சொல் லின் இறுதியிலே வல்லின மெய்யின் மேல் ஏறிவரும் உகரம் குற்றியலுகரமாகும்.

(க் + உ, ச் + உ, ட்+உ, த்+உ, ப்+உ, ற்+உ)

இவை முறையே கு, சு, டு, து, பு, று என அமையும். (இவ்வாறு உயிரும் மெய்யும் இணைந்து வரும் எழுத்துக்கள்பற்றிப் பின்னர் உரைக்கப்படும்.)

குறுகி ஒலிப்பதற்கு உதாரணங்கள் :

1. கட்டு — 'ட்' என்ற வல்லின எழுத்தைத் தொடர்ந்து வந்தமையால் இது, வன்றொடர்க்குற்றியலுகரம்.
2. பந்து — 'ந்' என்ற மெல்லின எழுத்தைத் தொடர்ந்து வந்தமையால் இது, மென்றொடர்க் குற்றியலுகரம்.
3. பெய்து — 'ய்' என்ற இடையின எழுத்தைத் தொடர்ந்து வந்தமையால் இஃது, இடைதொடர்க்குறறியலுகரம.
4. நாடு — 'நா' என்ற நெட்டெழுத்தைத் தொடர்ந்து வந்தமையால் இது, நெடிற்றொடர்க்குற்றியலுகரம.
5. சிறகு — 'ற' என்ற எழுத்து 'ற்+அ' என்ற இரண்டு எழுத்துக்களின் சேர்க்கை. இவற்றில் இறுதியில் உள்ள 'அ' வைத் தொடர்ந்து வந்தமையால் இஃது, உயிர்த்தொடர்க்குற்றியலுகரம்.
6. எஃகு — ஃ என்ற ஆய்த எழுத்தைத் தொடர்ந்து வந்தமையால் இஃது, ஆய்தத்தொடர்க்குற்றியலுகரம்.

குற்றியலுகரம் துணை ஒலியா ?

சொல்லில் அமையும் எழுத்துக்கள் அந்தச்சொல் தரும் பொருளுக்கு உறுப்புக்களாய் அமைதல் வேண்டும். ஆனால், குற்றியலுகரமோ சொல்லிறுதியில் வல்லின எழுத்தின்மேல் ஏறி வருகின்றது; தன்னை இறுதியாக உடைய நிலைமொழிக்கு (நிற்கும்சொல்) முன்னால் வருமொழித் (வந்து சேரும் சொல்) தொடக்கத்தில் உயிரெழுந்து வந்தால் மறைந்து விடுகின்றது.

உ — ம் : பாக்கு + உடைத்தான்<br>
(உ) } பாக்குடைத்தான்.<br>
பாக்க் + உடைத்தான்

மெய்யெழுத்து வருமொழித் தொடக்கத்தில் வந்தால் மட்டுமே நிலையாய் நிற்கின்றது.

பத்து + காசு<br>
க் } பத்துக்காசு<br>
பத்து + காசு



இவ்வாறு சில இடங்களில் நிலைத்து நின்றும் சில இடங்களிலே மறைந்தும் வருவதால், குற்றியலுகரம் துணையொலி (ஒலித்துணை) மட்டுமே. அது சொல்லின் பொருளுக்கு உறுப்பன்று.

முழுமையான ஓசையினையுடைய உகரம் (முற்றியலுகரம்) எவ்விடத்திலும் மறையாமல் நிலைத்து நிற்பதை இதனோடு ஒப்பிட்டால் முன்னது முதலெழுத்தாவதன் உண்மையையும் குற்றியலுகரம் சார்பெழுத்தாவதன் உண்மையையும் நாம் உணர்ந்து கொள்ளலாம்.

உ — ம் : மடு + உடைந்தது = மடுவுடைந்தது.

(ii) குற்றியலிகரம :

குற்றியலிகரம் என்பது குற்றியலுகரத்தின் திரிந்த வடிவமே. நிலைமொழியீற்றிலே குற்றியலுகரம் வந்து வருமொழித் தொடக்கத்திலே 'யா' என்ற எழுத்து வருமாயின் குற்றியலுகரம் குற்றியலிகரமாக மாறும்.

உ — ம் : நாடு + யாது<br>
நாடி + யாது<br>
நாடியாது. (ட் + உ, ட் + இ, ஆகிறது.

(குற்றியலிகரத்திற்கும் ஒலிக்குங்கால அளவு அரைமாத்திரையேயாம்)

இவ்வாறு இருசொற்களின் சேர்க்கையிடத்தில் மட்டுமன்றிக் 'கேண்மியா' (கேள் + மியா) என்பதன் ஈற்றிலுள்ள மியா என்ற அசைச் சொல்லில் வரும் 'மி' யின் இகரமும் குறுகியே ஒலிக்கின்றது.

ஆக, ஒலித்திரிபாகவும் குறிப்பிட்ட இடங்களில் மட்டுமே வருவதாகவும் உள்ளதால் குற்றியலிகரமும் சார்பெழுத்தேயாகும்.

(iii) ஆய்தம் :

ஃ என்ற மூன்று புள்ளிகளாலாகி உயிரெழுத்துக்களின் முடிவிலே அமையும் ஓர் எழுத்தாக வழங்கி வருவதே ஆய்தமாகும்.

1. தனிக்குற்றெழுத்துக்கும் ஈற்றில் வரும் குற்றியலுகரத்துக்குமிடையே ஆய்தம் வருவதுண்டு.

உ — ம் : அஃது,

இவ்வாறு வருவதனாலே எவ்விதமான பொருள் வேறுபாட்டையும் 'ஃ' ஏற்படுத்துவதில்லை.

உ — ம் : அஃது = அது, (அவ் + து = அஃது)

ஆனால் 'அது' என்ற சொல்லிலே 'து' எழுத்தின் ஒலியில் மாற்றம் நிகழ்வதில்லை; 'ஃ' வரும்போது 'து' உரசும் எழுத்தாகி ஒலியில் மாற்றத்தை அடைகின்றது. குற்றியலுகரமல்லாத வேறு உயிர் எழுத்து ஈற்றில் வரினும் அஃது ஏதி நிற்கும் வல்லின மும் உரசெழுத்தாகும். உ — ம : பஃறி (= பன்றி)

2. 'ள், ல்' என்னும் எழுத்துக்களை ஈற்றில் உடைய சொற்களின் முன்பு (நிலைமொழி முன்பு) வல்லின எழுத்தை முதலாயுடைய சொற்கள் (வருமொழி) வருமாயின் அவற்றின் முதலெழுத்தாகிய வல்லினமும் வேறுகி 'ள்' உம் 'ல்' உம் 'ஃ' ஆகின்றன.

உ — ம் : முள் + தீது = முஃடீது
கல் + தீது = கஃறீது

எனவே, ஆய்த எழுத்தானது தனித்துப் பொருள் உணர்த்தாது சார்ந்து வந்து தனது ஈற்றயல் எழுத்தின் ஒலியில் மாற்றத்தையும் வேறெழுத்துச் சேர்க்கையையும் ஆக்குவதால் இஃது ஒரு துணையொலி மட்டுமே. ஆகவே இதுவும் சார்பெழுத்தாகின்றது. (குற்றியலிகரமும் ஆய்தப்புணர்ச்சியும் இன்று இல்லை)

### சார்பெழுத்துக்களின் இயல்புகள்

1. மூலஒலியின் திரிபாக அமைதல். (குற்றியலிகரம்)
2. பிற எழுத்துக்களைச் சார்ந்து குறிப்பிட்ட இடங்களில் மட்டும் வருதல் (குற்றியலுகரம்)
3. தொடரும் வல்லினத்தை உரசெழுத்தாக்கலும் வேற்றெழுத்துச் சேர்க்கைக்கு இடமளித்தலும் (ஆய்தம்).
4. தாம் சொல்லில் இடம்பெறுவதனால் பொருள் மாற்றத்தினை ஏற்படுத்தாமை. (மூன்று சார்பெழுத்துக்களும்)

### சார்பெழுத்துக்களின் வரிவடிவம்

உயிரெழுத்து, மெய்யெழுத்து, குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆய்தமாகிய எழுத்துக்களிலே முன்னைய இரண்டிற்கும் திட்டவட்டமான வரிவடிவம் உண்டு குற்றியலுகரத்திற்கு அடையாளமாக அதன் பின்னே புள்ளி ஒன்று இடும் வழக்கம் முன்பு இருந்ததாகக் கூறுவர். உ — ம் : பந்து. ஆனால் இன்று இவ் வழக்கு இல்லை. குற்றியலிகரத்திற்கு அதன் வேறுபாடு உணர்த்த எவ்வித அடையாளமும் இடப்பட்டதாகத் தெரியவில்லை. ஆய்தம் மூன்று புள்ளிகள் கொண்டு அடுப்புப்போல அமைவது. எனினும் புள்ளிகளை எழுத்தின் வரிவடிவம் எனல் பொருந்தாது.

## பிற எழுத்துக்கள்

மூல ஒலி வடிவங்களாகிய உயிர், மெய் ஆகியனவும் துணை ஒலி வடிவங்களாகிய குற்றியலுகரமும் குற்றியலிகரமும் ஆய்தமும் தவிர்ந்த வேறு எழு வகையான எழுத்துக்களும் தமிழில் வழங்குகின்றன. * இவற்றையும் நன்னூலார் சார்பெழுத்துக்கள் எனவே உரைப்பர். ஆனால், தொல்காப்பியத்திலே கூறப்பட்டபடி மேலே குறித்த மூன்றுவகை எழுத்துக்களுமே சார்பெழுத்துக்கள் எனத் தக்கவை. மற்றைய ஏழுவகையான எழுத்துக்களும் துணையொலிகள் ஆகா. எனவே அவை சார்பெழுத்துக்களாகா. இவற்றை நாம் பின்வரும் பகுப்புக்களில் அடக்கலாம்.

**(i) உயிர்மெய்யெழுத்து :**

உயிர், மெய் ஆகிய இரண்டு எழுத்துக்களதும் ஒலிச் சேர்க்கையால் உண்டாகும் புதிய ஒலி வடிவங்களான எழுத்துக்கள் உயிர்மெய்யெழுத்துக்கள் எனப்படும்.

உ—ம் : க்+அ, = க, க்+ஆ = கா ......... க் +ஔ = கௌ
ஆக — 12.

இவ்வாறே ஒவ்வொரு மெய்யெழுத்தின் வரிசையிலும் பன்னிரண்டு உயிர் எழுத்துக்களின் சேர்க்கையாலே பன்னிரண்டு உயிர்மெய்யெழுத்துக்கள் உண்டாகும்.

18 மெய் × 12 உயிர் = 216 உயிர்மெய்.

**(ii) ஆய்தக்குறுக்கம் :**

ஆய்த எழுத்து, சொல்லில் அமையும்பொழுது தனக்குரிய மாத்திரையிலே குறுகியோலிக்கும். அஃது ஆய்தக்குறுக்கம் எனப்படும்.

உ — ம் : இஃது. பஃறி (பன்றி)

**(iii) உயிரளபெடை :**

உணர்ச்சிகளைத் தாக்கமாக வெளிப்படுத்தும்போதும். இசையிலே இராகம் முதலியவற்றை ஆலாபனை செய்யும்போதும்,

---

* நன்னூலார் உயிர்மெய், ஆய்தம், உயிரளபு, ஒற்றளபு, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தக்குறுக்கம், ஐகாரக்குறுக்கம், ஔகாரக்குறுக்கம், மகரக்குறுக்கம் ஆகிய பத்தையும் சார்பெழுத்துக்கள் என்பர். க. பொ. த. ப. (உயர்தரம்) மாணவர் சார்பெழுத்துக்கள் தொடர்பாக வரும் வினாக்களுக்கு இப் பத்தையும் எடுத்துக்காட்டக்கடவர். இந்நூலின் சார்பெழுத்துப்பிரிப்பு முறை மொழியியலாரின் கருத்தினை ஒட்டியதாகும்.

கவிதைகளிலே ஓசை குறையும்போதும் ஆ, ஈ, ஊ, ஏ, ஓ முதலாகிய நெட்டெழுத்துக்கள் தமக்கு உரிய மாத்திரையிலே நீண்டு ஒலிக்கின்றன. அவ்வாறு நீண்டொலிக்கும் எழுத்தின் இனமான குற்றெழுத்தினை அடையாளமாக இட்டு இவ்வோசை நீட்சியைக் காட்டும்போது அது உயிரளபெடையாகின்றது.

உ — ம் : 1. ஐயோஒ — அவல உணர்வு
2. வண்டாடும் சோஒலையிலேஏ .. — இசைநீட்சி
3. வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல் யான் — செய்யுளில் ஓசையை நிரப்புவது

(iv) ஒற்றளபெடை :

ஒற்றெழுத்துக்கள் செய்யுளிலே தமக்குரிய மாத்திரையிலே நீண்டொலிப்பின் அவை ஒற்றளபெடை எனப்படும்.

இலங்ங்கு வெண்பிறைசூ டீசனடி யார்க்குக்
கலங்ங்கு நெஞ்சமிலைக் காண்.

(v) ஐகாரக்குறுக்கம் :

'ஐ' என்ற எழுத்துத் தனித்து ஒலிக்கும்போது இரண்டு மாத்திரை அளவினதாய் ஒலிக்கும். சொல்லில் அமையும்பொழுது அதன் மாத்திரை ஒன்றரையாகக் குறையும் (ஐ=அய்). அவ்வாறு குறைவதே ஐகாரக்குறுக்கம் ;

உ — ம் : ஐயர், மடை.

(vi) ஔகாரக்குறுக்கம் :

'ஔ' என்ற எழுத்துத் தனித்து ஒலிக்கும்போது அதற்கு மாத்திரை இரண்டு. சொல்லில் வரும்போது மாத்திரை ஒன்றரை. ('அவ்' என ஒலிக்கும்.) இவ்வாறு குறுகுவதே ஔகாரக் குறுக்கம்.

உ — ம் : மௌவல், ஔவை.

(vii) மகரக்குறுக்கம் :

'ம்' என்னும் மகர ஒற்று 'போலும்' என்ற சொல், செய்யுளிலே திரிந்து 'போன்ம்' என்று ஒலிக்கும்போது தனது மாத்திரையிலே குறுகுகின்றது. அவ்வாறு குறுகுவதே மகரக்குறுக்கம்.



## போலியெழுத்துக்கள்

ஐ, ஔ என்ற உயிரெழுத்துக்கள், முறையே, அ + இ, அ + உ என்ற ஈரெழுத்துக்களதும் இணைவொலியாகத் தோற்றுகின்றன. மேலும்,

ஐ = அய்
ஔ = அவ்

ஆகவும் ஒலிக்கும். இவற்றின் காரணமாக 'ஐ' பயன்படுமிடங்களில் அதற்குப் பதிலாக 'அய்'யையும், 'ஔ' பயன்படுமிடங்களில் 'அவ்'வையும் கையாள்வதுண்டு.

உ — ம் : ஐயன் — அய்யன்
ஔவை — அவ்வை.

இச்சந்தர்ப்பங்களிலே அய், அவ் என்பன போலிகள் எனப்படும்.

ஒலியினால் ஒவ்வாத இடங்களிலும் சில மாற்றெழுத்துக்கள் கையாளப்படுவது வழக்கம். அவ்வாறு கையாளப்படும் மாற்றெழுத்துக்களும் போலியெழுத்துக்களேயாம்.

உ — ம் : ஞமலி — நமலி
யமன் — நமன்
ஐந்து — அஞ்சு
அறம் — அறன்
சாம்பல் — சாம்பர்
நேயம் — ஞேயம்
பந்தல் — பந்தர்
யானை — ஆனை

இப்பிரயோகங்கள் பேச்சு வழக்கின் செல்வாக்கினால் ஏற்பட்டனவாகலாம்.

## எழுத்துக்கள் சொற்களில் அமையும்போது நிகழும் ஒலிநுட்ப வேறுபாடுகள்

எழுத்துக்களின் கால அளவானது (மாத்திரை) அவ்வவற்றிற்கென வகுக்கப்பட்டவற்றிலும் கூடியும் குறைந்தும் வருவதால் உண்டாகும் புதிய ஒலி வடிவங்கள் பற்றி முன்னரே கண்டோம். ஒரே எழுத்து, சொல்லில் அமைகையில் நுட்பமான ஒலிவேறுபாட்டினை அடையும் வாய்ப்புக்களும் உள்ளன. மொழியியலார் இவற்றை 'மாற்றொலிகள்' என வழங்குவர்.

உதாரணமாகக் காகம் என்ற சொல்லை நோக்கினால் அதன் முதல் எழுத்தான 'கா' 'K' என்ற ஆங்கில எழுத்தின் ஒலிப்பினைப் பெறுகிறது. நடுவிலுள்ள 'க' 'H' என்ற ஆங்கில எழுத்தின் ஒலிப்பினை அடைகிறது.

மொழியியல் என்ற தமது நூலிலே கலாநிதி ரா. சீனிவாசன் இவ்வாறமையும் மாற்றொலிகளுக்கு ஓர் அட்டவணை தந்துள்ளார். அது வருமாறு :

ப (p) = | p |, | b |
ச (c) = | ஸ் |, | ச |, | ஜ |
ட (t) = | t |, | d |
த (t) = | தt, | தd |

இவை சொல்லமைப்பின்போது எழுத்துக்களின் ஒலிகளிலே ஏற்படுததும் நுட்பமான மாற்றங்கள் எண்ணிறந்தன.

## மொழியின் முதலில் வரும் எழுத்துக்கள்

தமிழ்மொழி ஒலிநயம் மிக்கது, அதிக முயற்சியை வேண்டாது, வாயில் மட்டும் பிறக்கும் எளிமையான ஒலிகளாலான எழுத்துக்களைப் பெற்றுள்ளமை அதன் சிறப்பு. மெய்யெழுத்துக்களில் வல்லின எழுத்துக்கள், மொழியிறுதியில் வர நேர்ந்தால் அவற்றைக் குற்றியலுகரமாகிய ஒலித்துணைகொண்டு நிறைவு செய்து ஒலிப்பினை எளிதாக்குவதும் கவனிக்கத்தக்கதே. (சில வேளைகளிலே ல், ள் ஆகிய ஒற்றுக்களையும் ஒலிப்பதற்கான எளிதாந்தன்மை நோக்கி 'உ' சேர்த்து வழங்குவதும் உண்டு. புல் — புல்லு. கள் — கள்ளு) அன்றியும் மொழித் தொடக்கத்தில் வரவேண்டியவை, இடையில் வரவேண்டியவை, இறுதியில் வரவேண்டியவை என்று எழுத்துக்களை வகுத்துத் தந்துள்ளமையால், தமிழ்ச் சொற்களை ஒலிக்கும் முயற்சி எளிதாயுள்ளது.

இலக்கண ஆசிரியர்களின் கருத்துப்படி பின்வரும் எழுத்துக்களே மொழி முதலாய் வருதற்குரியன.

1. 'அ' தொடக்கம் 'ஔ' ஈறாகவுள்ள பன்னிரண்டு உயிரெழுத்துக்கள் :

   உ — ம் : அன்னை, ஆடு, இலை, ஈ, உரல், ஊசி, எலி, ஏணி. ஐயம், ஒலி, ஓடு, ஔவை.

2. 'க' தொடக்கம் 'கௌ' வரையுள்ள பன்னிரண்டு உயிர்மெய்யெழுத்துக்கள் :

   உ — ம் : கரி, காலை, கிளி, கீரை, குலை, கூடு, கெடு, கேடு, கை, கொடு, கோடு, கௌ(வு)



3. 'ச' தொடக்கம் 'சௌ' வரையுள்ள பன்னிரண்டு உயிர்மெய்யெழுத்துக்கள் :

   உ — ம் : சட்டி, சாறு, சிரிப்பு, சீற்றம், சுற்றம், சூடு, செல்வம், சேறு, சைகை, சொல், சோலை, சௌரியம் (வீரம்)

4. 'த' தொடக்கம் 'தௌ' வரையுள்ள பன்னிரண்டு உயிர்மெய்யெழுத்துக்கள் :

   தடி, தாடி, திரு, தீ, தெளி, தேறு, தை, தொடி(வளையல்), தோடு, தௌவை (தமக்கை).

5. 'ந' தொடக்கம் 'நௌ' வரையுள்ள பன்னிரண்டு உயிர்மெய்யெழுத்துக்கள்:

   நரை, நாரை, நிலம், நீறு, நுங்கு, நூறு, நெறி, நேர்மை, நைதல், நொடி, நோய், நௌவி (மான்).

6. 'ப' தொடக்கம் 'பௌ' ஈறுயுள்ள பன்னிரண்டு உயிர்மெய்யெழுத்துக்கள்:

   பத்து, பார், பிறை, பீடு(பெருமை), புதுமை, பூ, பெருமை, பேடு, பை, பொருள், போர், பௌவம்(கடல்).

7. 'ம' தொடக்கம் 'மௌ' ஈறுயுள்ள பன்னிரண்டு உயிர்மெய்யெழுத்துக்கள்:

   மடி, மாலை, மிடி(வறுமை), மீன். முற்றம், மூலை, மென்மை, மேன்மை, மை, மொட்டு, மோதகம். மௌவல்(மல்லிகை).

8. வ, வா, வி, வீ, வெ, வே, வை, வௌ, ஆகிய எட்டு உயிர்மெய்யெழுத்துக்கள் :

   வலை, வா, விலை, வீடு, வெறி, வேறு, வை, வௌ(வு) (கவர் என்ற ஏவல்).

9. ய, யா, யு, யூ, யோ, யௌ ஆகிய ஆறு உயிர்மெய்யெழுத்துக்கள் :

   யவனர் (கிரேக்க நாட்டவர்), யாது, யுகம், யூகம், யோகி, யௌவனம் (இளமை).

10. ஞ, ஞா, ஞி, ஞெ, ஞொ என்னும் ஐந்து உயிர்மெய்யெழுத்துக்கள் :

   ஞமலி (நாய்), ஞாயிறு, ஞிமிறு(வண்டு), ஞெகிழி(நெருப்பு), ஞொல்கிற்று(தழுகிற்று).

இவற்றைவிட 'ங' என்ற உயிர்மெய்யெழுத்தும் மொழி முதலில் வரும் என்று நன்னூலாசிரியர் உரைப்பர். ஆயின் அந்த

எழுத்து அ, இ, உ ஆகிய சுட்டெழுத்துக்களும் யா, எ முதலிய வினாவெழுத்துக்களும் முதலில் வர அவற்றைத் தொடர்ந்து வருவதன்றித் தானே மொழி முதலாய் வராது.

உ — ம் : அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், எங்ஙனம், யாங்ஙனம்.

(ஙனம் என்பது பண்டைக்காலத்தில் கனம் எனவே அமைந்தது. யாங்கனம் ஒத்தியோ வீங்குசெலல் மண்டிலம் — புறம் 8)

## காலத்துக்குக்காலம் மொழிமுதலெழுத்துக்கள் பற்றிய கருத்து மாற்றங்கள்

எமக்கு இன்று கிடைக்கும் இலக்கண நூல்களிலே காலத்தால் மிக்க பழைமை வாய்ந்தது தொல்காப்பியம். இந்நூலிலே மொழி முதலாய் வரும் எழுத்துக்கள் எனக் கூறப்பட்டவை பின்வருவன :

(1) பன்னிரண்டு உயிரெழுத்துக்கள். (2) க த ந ப ம என்னும் உயிர்மெய்யெழுத்து வரிசையிலுள்ள அறுபது (12×5 =60) எழுத்துக்கள், 'ச' வரிசையிலே ச, சை, சௌ தவிர்ந்த ஒன்பது எழுத்துக்கள், 'வ' வரிசையிலே வு, வூ, வொ, வோ தவிர்ந்த எட்டு எழுத்துக்கள், 'ஞ' வரிசையிலே ஞ, ஞா, ஞெ, ஞொ என்னும் நான்கு எழுத்துக்கள், 'ய' வரிசையிலே 'யா' என்னும் ஓர் எழுத்து மட்டும்.

ஆயின் மொழி என்பது கட்டுக்கிடையாய்க் கிடக்கும் ஒன்றன்று. தொல்காப்பியம் எழுதப்பட்ட காலத்துக்குப் பின்பு தமிழினிடையே வடசொல், திசைச்சொல் என்ற வகையில் மேலும் பல சொற்கள் வந்து கலந்து ஆட்சிபெறத் தொடங்கிவிட்டமையால் கி. பி. 1200 அளவில் வாழ்ந்தவராகக் கொள்ளப்படும் நன்னூலாசிரியர், தமது காலத்து வழக்கினை நோக்கி மொழி முதலெழுத்துக்களின் தொகையினைக் கூட்டிக்கொண்டார். (இவற்றின் விபரத்தை முதலிலேயே தந்துள்ளோம்.)

'இலக்கணச் சுருக்கம்' எழுதிய ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் (நன்னூலார் காட்டிய) 'ங' என்ற எழுத்து மொழி முதலாவதன் பொருத்தமின்மையை நோக்கி அதனைக் கைவிட்டார்.



### இக்காலப் பிரயோகம்

இந்த இருபதாம் நூற்றாண்டிலே, வடமொழியிலிருந்தும் பிற திசை மொழிகளிலிருந்தும் அளவிறந்த சொற்கள் வந்து தமிழிலே ஆட்சி பெற்றுள்ளன. எனவே இன்று மொழி முதலெழுத்துக்கள் இவை மட்டுமே என்று வரையறை செய்வது எளிதான செயலன்று.

உ — ம் : லதா, லம்பர், வோட்டு(Vote), ராமசாமி, லீலா, ரஜனி காந்த், ராஜேஸ் கன்னா, ரீதி, றேடியோ, ரேகை, ரோட்டு, இன்ன பிற.

## மொழியின் இடையிலே வரும் எழுத்துக்கள்

சொல்லின் இடையிலே வரும் மெய்யெழுத்துக்கள், இவையிவை இவையிவற்றையே தொடர்ந்து வரும் என ஒரு முறைமையுண்டு. இதனை 'மெய்ம்மயக்கம்' என்பர். இந்த மெய்ம் மயக்கம் இருவகைப்படும்.

1. வேற்றுநிலை மெய்ம்மயக்கம்
1. உடனிலை மெய்ம் மயக்கம்.

1. வேற்றுநிலை மெய்ம்மயக்கம் : ஒரு மெய்யெழுத்து வேறொரு மெய்யெழுத்தோடு மயங்குதல் (கூடிவருதல்).

உ — ம் :

(அ) ட், ற், ல், ள், என்ற மெய்யெழுத்துக்கள் க், ச், ப் என்பவற்றோடு மயங்கும்.

உ — ம் : 1. வெட்கம், கட்சி, நட்பு.
2. புற்கை, முயற்சி, பொற்பு.
3. வெல்க, வல்சி (அரிசி), செல்ப (செல்வர்)
4. வெள்கு, நீள்சினை (நீண்ட கிளை), கொள்ப (கொள்வர்)

(ஆ) ல், ள் என்பவற்றோடு ய், வ் மயங்கும்.
1. பல்யாகம், செல்வம்.
2. வெள்யாறு, கள்வன்

(இ) ங், ஞ், ண், ந், ம், ன் என்பவற்றோடு க், ச், ட், த், ப், ற், மயங்கும். (இங்கு ஒவ்வொரு மெய்க்கும் அவற்றுக்கு இனமான மெய்கள் மட்டுமே மயங்கும்.)

உ — ம் :

பங்கு, பஞ்சு, வண்டு, பந்து, அம்பு, மன்று.

(ஈ) மேலே கூறிய ஆறு மெல்லின மெய்களுள்ளே ண், ன் என்பவற்றோடு க், ச், ஞ், ப், ம், ய், வ் என்ற ஏழும் மயங்கும்.

உ — ம்: 1. காண்குவம், எண்சுவை, வெண்ஞாண், பண்பு, வெண்மை, மண்யாறு, எண்வகை;

2. என்க, புன்செய், மென்ஞாண், என்பு (எலும்பு), மென்மை, கான்யாறு (காட்டாறு), பொன்வாய்.

(உ) ய், ர், ழ் என்பவற்றோடு க், ச், ஞ், த், ந், ப், ம், ய், வ் என்னும் மொழி முதலெழுத்துக்கள் ஒன்பதும் மயங்கும்.

உ — ம் : பாய்க, ஆர்க, வாழ்க.
எய்சிலை, வார்சிலை, வார்சேரி. (சிலை — வில்)
பாய்ஞமலி, சேர்ஞாயிறு, வீழ்ஞிமிறு
பாய்தல், வார்தல், வீழ்தல்
ஆய்நர் (ஆய்வாளர்), ஆர்நர் (அநுபவிப்பவர்)
ஆழ்நர் (ஆழ்பவர்)
ஆய்பவை, நேர்பவை, வீழ்பனி
தாய்மை, நேர்மை, கீழ்மை,
போர்யானை, வீழ்யானை — ('ய்' உடன் ய் மயங்குதல் உடனிலை மெய்ம்மயக்கத்துட் காட்டப்படும்.)
தெய்வம், ஆர்வம், வாழ்வது.

(ஆ) உடனிலைமெய்ம்மயக்கம்: மெய்யெழுத்து ஒன்று தானே தன்னுடன் மயங்கிவருவது உடனிலை மெய்ம்மயக்கமாகும். 'ர்', 'ம்' தவிர்ந்த பதினாறு மெய்யெழுத்துக்களும் தம்முடன் தாம் மயங்கும்.

உ — ம், பாக்கு, இங்ஙனம், அச்சம், மஞ்ஞை (மயில்), பட்டு, கண்ணி, பத்து, வெந்நெய் (வெம்மை + நெய்), அப்பம், செம்மல், செய்யன் (சிவந்தவன்), பல்லி, செவ்வி(பேட்டி), கள்ளி, வெற்றி, அன்னை.

### மூன்று ஒற்றுக்கள் மயங்கும் வகை

ய், ர், ழ் என்ற மெய்யெழுத்துக்கள் தம்மை அடுத்து இரண்டு மெய்யெழுத்துக்கள் மயங்கப்பெறும்.



உ — ம் : வேய்ங்குழல் (ய்ங்க் + உ)
செய்ந்நன்றி (ய்ந்ந் + அ)
வாழ்த்து (ழ்த்த் + உ)

### இக்காலப் பிரயோகம்

வட சொற்களையும் திசைச் சொற்களையும் தமிழிலே பயன் படுத்தும்பொழுது இக்காலத்திலே இந்த நெறிமுறை கைந் நெகிழ்க்கப்படுதலும் உண்டு.

உ — ம் : பக்தி, வாஷிங்ரன், விக்ரோறியா, தர்மம், விக்டர், ஆக்(கி)ரோஷம் இன்னபிற;

## மொழியிறுதியில் வரும் எழுத்துக்கள்

ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ என்று ஆறு உயிரெழுத்துக்களும் தனித்தும் (ஓரெழுத்து ஒரு மொழியாகவும்) மெய்யெழுத்தோடு கூடியும் சொல்லின் இறுதியில் வரும்.

உ — ம் ;

1. ஆ, ஈ, ஊ (இறைச்சி), ஏ (அம்பு), ஐ(அழகு), ஓ (மதகு நீரைத் தடுக்கும் பலகை)
2. கா(சோலை), தீ, பூ, தே(தெய்வம்), தை(போ).
3. 'ஔ' — மெய்யெழுத்தோடு சேர்ந்து நிற்கும் பொழுது மட்டும் மொழியீறாகும்.

உ — ம் : கௌ. (வாயாற் பற்று), வௌ (கவர் என்ற ஏவல்)

4. அ, இ, உ, எ, ஒ என்னும் ஐந்து உயிரெழுத்துக்களும் உயிரளபெடையாக மட்டும் மொழிக்கு இறுதியில் வரும். பலாஅ, தீஇ, பூஉ, சேஎ, கோஒ.

    இக்காலத்திலே அளபெடை பேச்சொலியிலும் இசையிலும் காணப்படுவதன்றி எழுத்து வழக்கிலே (செய்யுள் அமைக்கும் போதும்) கையாளப்படுதல் இல்லை.

5. ஞ், ண், ந், ம், ன், ய், ர், ல், வ், ழ், ள் என்ற பதினொரு மெய்யெழுத்துக்களும் சொல்லின் இறுதியில் வரும்,

    உரிஞ் (உரிஞ்சுதல்), மண், வெரிந் (முதுகு), மரம், மெய், வேர், வேல், தெவ் (பகை), வாழ், வாள்.

6. 'ங்' என்ற மெல்லின எழுத்து மொழியிறுதியில் வராது. க், ச், ட், த், ப், ற் ஆகிய வல்லின மெய்கள் குற்றியலுகரத்தை ஒலித்துணையாகக் கொண்டு சொல்லிறுதியில் வரும்.

உ — ம் = கட்டு, பந்து.

### இக்காலப் பிரயோகம்

இக்காலத்திலே திசைச்சொற்களைத் தேவை நோக்கிப் பெருமளவு கையாள வேண்டியிருப்பதால் மொழியிறுதியில் இன்ன எழுத்துக்கள் மட்டுமே வரலாம் என்று வரையறை செய்வது எளிதன்று. 'ங்' என்ற மெல்லின மெய், வல்லின மெய்கள், என்பவற்றோடு வடமொழி எழுத்துக்களையும் சொல்லிறுதியில் இன்று கையாள்வர்.

உ -- ம் : போயிங் (விமானம்)
ஜேம்ஸ் வாட்
குக்

## தமிழிலே வழங்கும் வடமொழி எழுத்துக்கள்

ஸ, ஜ, ஷ, ஹ, க்ஷ ஆகிய வடமொழியெழுத்துக்களைத் தமிழின் ஒலி மரபிற்கேற்பத் தமிழ் எழுத்துக்களைக்கொண்டு குறிக்கும் மரபும் உள்ளது.

| வடமொழி எழுத்து | தமிழில் மாற்றெழுத்து |
|---|---|
| ஸ — (ஸர்ப்பம்) | ச — (சர்ப்பம்) |
| ஜ — (ஜலம், பங்கஜம்) | ச, ய — (சலம், பங்கயம்) |
| ஷ — (விஷம், பொக்கிஷம்) | ட — (விடம்)<br>ச — (பொக்கிசம்) |
| ஹ — (ஹரன்) | அ — (அரன்) |
| க்ஷ — பக்ஷம்<br>பக்ஷி<br>பிக்ஷா | க்க — (பக்கம்)<br>ட்ச — (பட்சி)<br>ச — பிச்சை |

### இக்காலப் பிரயோகம்

இக்காலத்தில் வடமொழியெழுத்துக்களுக்கு மாற்றொலிகளாகத் தமிழெழுத்துக்களைக் கையாளும் வழக்கம் அருகி வருகின்றது

உ — ம் ; ஜகந்நாதன், ஜனகன், லக்ஷ்மணன், ஆஷா, ஹரிஹரன்

## ஆங்கில எழுத்துக்களுக்கு மாற்றெழுத்துக்கள்

அறிவியலின் தேவை நோக்கிச் சில போது ஆங்கிலச் சொற்களை மாற்றமின்றிக் கையாள நேர்வதுண்டு. அவ்வேளைகளிலே தமிழிலில்லாத ஆங்கிலச் சிறப்பொலி எழுத்துக்கு மாற்றாகத் தமிழெழுத்தினைக் கையாள அறிஞர்கள் சில ஆலோசனைகளை வழங்கியுள்ளனர். அவையாவன:



F — 1. ஃப (ஃபரன்ஹைற்)
2. (ʼ) ப

## எழுத்தின் வரிவடிவ மாற்றம்

எழுத்தின் ஒலி வடிவில் மாற்றம் நிகழ்வதில்லை. ஆனால் வரிவடிவமோ காலத்துக்குக் காலம் மாற்றம் அடைந்து வந்துள்ளது. தமிழ்க்கல்வெட்டுக்களைக் கால அடிப்படையிலே பிரித்து ஆராய்ந்த அறிஞர்கள் தக்க சான்றுகளுடன் இவ்வுண்மையை நிறுவியுள்ளனர்.

தொல்காப்பியத்திலே (எழுத்ததிகாரம்) சில எழுத்துக்களின் அக்கால வடிவங்கள் கூறப்பட்டுள்ளன.

உ - ம் ;

1. மகரக்குறுக்கம் ஒற்று('ம்'), புறத்துப் பெறும் புள்ளியோடு உள்ளாலும் புள்ளி பெறும். அவ்வாறாயின் அக்காலத்தில் 'ம்' என்ற எழுத்து |ம்| என்றே எழுதப்பட்டதாதல் வேண்டும். (தொல். எழு. 14)
2. மெய்யெழுத்தினை உயிர்மெய்யினின்று பிரிக்க மெய்யெழுத்தின் மேலே புள்ளியிடுதல் வேண்டும் (ஷை 15).

உ - ம் ; க், ங் இன்ன பிற.

3. எகரமும் ஒகரமும் தமக்கு மேலே புள்ளி பெறும் 'ஏ', 'ஓ' என்பன அக்காலத்தில் எ், ஒ் என்றே எழுதப்பட்டன.
4. நன்னூலாரும் எ, ஒ என்பன மேற்புள்ளி பெறுதல் வேண்டும் என்றே உரைத்தார் (நன். எழுத்தியல் 42).
5. வீரமாமுனிவரே ஒ என்பதைக் குற்றெழுத்தின் வடிவமாகவும் 'ஓ' இன் காற் கொம்பைச் சுழித்து 'ஓ' என்பதை நெட்டெழுத்தின் வடிவமாகவும் கொண்டார். எகரத்தின் நெடிலுக்கு 'ஏ' என்ற இன்றைய வடிவமும் இவராலேயே வழங்கப்பட்டதாகவும் கூறுவர்.

இக்காலத்தில் எழுத்துக்களிடையே ஓர் ஒருமைப்பாட்டினை ஏற்படுத்த முயற்சி மேற்கொள்ளப்படுகின்றது. இவ்வகையிலே அறிஞர்கள் வழங்கும் கருத்துரைகளின்படி பின்வரும் வரிவடிவ மாற்றங்களை நோக்குக:

| இப்பொழுதுள்ள வடிவம் | — | மாற்றம் பெறவேண்டிய வடிவம் |
|---|---|---|
| ஈ | — | ஈ |
| னா | — | னா |
| ணா | — | ணா |
| றா | — | றா |
| லை | — | லை |
| ளை | — | ளை |
| கூ | — | கூ |

### இவ்வாறு மாற்றுவதால் விளையக்கூடிய நற்பயன்கள்

*1.* எழுத்துக்கள் யாவும் ஓர் ஒருமைப்பாட்டினைப் பெற்றால் அவற்றைக் கற்றுக்கொள்ளும் முயற்சி எளிதாகும்.

*2.* தட்டச்சுப் (Typewriter) பொறியிலே குறைந்த எழுத்து வடிவங்களை அமைத்துக் கொள்வதால் தட்டச்சுப் பொறியிடும் திறன் (விரைவு) கூடும்; முயற்சியின் அளவு குறைந்து எளிதாகும்.

# 2. சொல்லியல்

எழுத்துத் தனித்து நின்றும் ஒன்றுக்கு அதிகமான எழுத்துக்களைத் தொடர்ச்சியாகப் பெற்றும் பொருள் தருமாயின் அது 'சொல்' எனப்படும். இதனைப் பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என நான்காக வகுக்கலாம். பெயர்ச் சொல்லைப் 'பெயர்' எனவும், வினைச்சொல்லை 'வினை' எனவும், இடைச்சொல்லை 'இடை' எனவும், உரிச்சொல்லை 'உரி' எனவும் சுருக்கமாக அழைப்பது இலக்கண ஆசிரியர்களின் வழக்கு. சொல்லியல் என்ற இந்த அதிகாரத்திலே இந் நால்வகைச் சொற்களோடு, இயற்சொல், திரிசொல், வடசொல், திசைச்சொல் என்ற வேறு நால்வகைச் சொற்களும் விளக்கப்படும்.

## பெயர்

நாம் வாழும் உலகின்கண்ணே எண்ணிறந்த பொருள்கள் உள்ளன. உயிருள்ளவை, உயிரற்றவை, கண்ணுக்குப் புலனாகின்றவை, புலனாகாதவை என்று இவற்றை வகைப்படுத்தலாம். ஒரு வகுப்பை வேறொரு வகுப்பிலிருந்தும் ஒரு தனிப்பொருளைப் பிற தனிப் பொருள்களிலிருந்தும் பிரித்து அவற்றின் வேற்றுமையை அறிந்துகொள்ள ஒவ்வொன்றிற்கும் அடையாளமாகச் சொற்கள் வழங்கப்படுகின்றன. இந்தச் சொற்களே பெயர்களாகும்.

சுட்டிக்காட்டி உணர்த்தவல்ல பொருள்கள், அவற்றின் உறுப்புக்கள், காலம், இடம், தொழில், பண்பு (சுட்டிக்காட்ட முடியாதது) என இலக்கண ஆசிரியர்களால் இவை, ஆறு பெரும் பகுதிகளாகப் பிரிக்கப்படும்.

### ஆறுவகைப் பெயர்கள்

உ—ம்:

அ. பொருள் — மனிதன், சிங்கம், காகம், பாம்பு, மீன், புத்தகம், மேசை இவற்றையும் இவை போல்வனவற்றையும் பொருட்பெயர் என்பர்.

ஆ. உறுப்பு — கை, கால், கண், வேர், கிளை, இலை, சிறகு, சொண்டு, செதிள் இவற்றையும் இவை போல்வனவற்றையும் சினைப்பெயர் (உறுப்புப் பெயர்) என்பர்.

இ. காலம் — காலை, மாலை, நாழிகை, மணி, நிமிடம், செக்கன், கோடை, மாரி இவற்றையும் இவை போல்வனவற்றையும் காலப்பெயர் என்பர்.

ஈ. இடம் — நிலம், கடல், மலை, ஆறு, இலங்கை, யாழ்ப்பாணம், மைதானம் இவற்றையும் இவைபோல்வனவற்றையும் இடப்பெயர் என்பர்.

உ. தொழில் — நடத்தல், ஓட்டம், தொழுகை, கொலை, சாக்காடு, மறதி இவற்றையும் இவை போல்வனவற்றையும் தொழிற்பெயர் அல்லது வினைப்பெயர் என்பர்.

ஊ. பண்பு — கருமை, அழகு, நன்கு, தொல்லை, மாண்பு, பண்பாடு இவற்றையும் இவைபோல்வன வற்றையும் பண்புப் பெயர் அல்லது குணப் பெயர் என்பர்.

## இடுகுறிப் பெயரும் காரணப் பெயரும்

தமிழ்மொழியின் தொடக்க காலத்திலே பொருள்களுக்குப் பெரும்பாலும் இடுகுறியாகப்(அடையாளமாகப்) பெயர்கள் வழங்கப்பட்டன. காலப்போக்கில் இடுகுறிகளுக்குக் காரணங்கள் கற்பிக்கப்பட்டன. இவ்வாறு காட்டப்பட்ட காரணங்களுள்ளே சில மறக்கப்பட்டுவிட்டன. இந்நிலையிலே காரணமும் இடுகுறியுமான இருவகைப் பெயர்கள் இன்று தமிழ்மொழியிலே வழங்குகின்றன. அவையாவன:-

1. இடுகுறிப் பெயர்
2. காரணப் பெயர்

1. இடுகுறிப் பெயர்: காரணம் கருதாது வழங்கப்பட்டுப் பின்பு காரணம் கற்பிக்கப்பட்டு இன்று அக்காரணம் புலப்படாத பெயர்கள்; இவை ஒரு வகுப்பிலுள்ள பொருள்கள் யாவிற்கும் வழங்குமாயின் இடுகுறிப் பொதுப்பெயர் எனப்படும். வகுப்பிலுள்ள தனிப்பொருளுக்கு வழங்குமாயின் இடுகுறிச்சிறப்புப் பெயர் எனப்படும்.

(அ) இடுகுறிப் பொதுப் பெயர்

உ—ம்: மரம், நிலம், செடி, புள் (பறவை).

(ஆ) இடுகுறிச் சிறப்புப் பெயர்

உ—ம்: வேம்பு, மலை, மல்லிகை (செடி), கோழி.

2. காரணப் பெயர்: இடுகுறியாய் வழங்கிப் பின்பு காரணம் கற்பிக்கப்பட்ட பெயர்கள்; இவையும்



பொதுத்தன்மையாலே காரணப் பொதுப் பெயர் எனவும், சிறப்புத் தன்மையாலே காரணச் சிறப்புப் பெயர் எனவும் இரு பிரிவுகளாய் வழங்கும்.

(அ) காரணப் பொதுப்பெயர்:

உ—ம்: பறவை (பறக்கும் தொழிலால் வந்தபெயர்).
அணி (அணியப்படுவதால் வந்தபெயர்).

(ஆ) காரணச் சிறப்புப் பெயர்:

* காகம் ('காகா' என்று கரைவதால் வந்த பெயர்).
வளையல் (வளைந்திருப்பதால் வந்த பெயர்).

III. காரண இடுகுறிப்பெயர்:

ஒரு பொருளுக்கு அதன் இயல்புகாரணமாக இடப்பட்ட காரணப்பெயர் வேறொரு பொருளுக்கு வேறொரு காலத்தில் இடுகுறியாக வழங்கப்படுவதுமுண்டு. இத்தகைய பெயர்கள் காரண இடுகுறிப் பெயர்கள் என வழங்கும்.

உ—ம்: சேயோன் என்பது சிவந்த நிறம் காரணமாக முருகனுக்கு வழங்கும் காரணப் பெயர். இதனையே ஒருவருக்குப் பெற்றோர் இட்டு வழங்குகையில் இஃது இடுகுறிப் பெயர் ஆகின்றது. இந்நிலையில் இத்தகைய பெயர்களைக் காரண இடுகுறிப் பெயர்கள் என வழங்குதல் மரபு. குமரன், குமாரி என்பன இளைய ஆண், இளைய பெண்ணை முறையே குறிப்பன. இவற்றை ஆணொருவனுக்கோ பெண்ணொருத்திக்கோ இட்டு வழங்கினால் அவை காரண இடுகுறிப் பெயர்களாகின்றன.

## பெயர்களும் திணை, பால், எண், இடமும்.

முதலிற் குறித்த ஆறுவகைப் பெயர்களையும் அவற்றிற் காணப்படும் பல்வகைப்பாகுபாடுகளுக்கு இசைய இலக்கண ஆசிரியர் நான்கு பிரிவுகளுக்குள் வகைப்படுத்திக் காட்டுவர். திணை, பால், எண், இடம் என்பனவே அப்பிரிவுகளாம்.

---

* இடுகுறியாய் அமைந்த பின்பு காரணம் கற்பிக்கப்பட்ட பெயர் வரிசையில் ஒலி காரணமாய் வந்த பெயர்கள் அடங்கா. இவை சொற்றொடக்கத்திலேயே காரணம் அமைந்து வந்த பெயர்களாகலாம். ஒலியால் அமைந்த சொற்கள், நாம் முதலிலே குறித்த காரணப்பெயர் வரைவிலக்கணத்திற்கு விதிவிலக்கெனலாம்.

## 1. திணை

திணை என்பதற்கு இடம், வீடு, சாதி, ஒழுக்கம் எனப்பல பொருள்கள் உள்ளன. தமிழ் மொழியின் இலக்கணத்தைப் பொறுத்தவரையிலே சாதி என்பதே அதற்குப் பொருத்தமான பொருளாகும். பொருள்களின் பெயர்களை அவற்றின் உயர்வு கருதி உயர்திணையாகவும் (உயர்சாதியாகவும்). உயர்வின்மை கருதி அஃறிணை (உயர்வல்லாச் சாதி) யாகவும் பிரிப்பர்.
அல் (லாத) + திணை = அஃறிணை.

**உயர்திணையுள் அடங்குவோர் :**

மக்கள், தேவர், நரகர்.

(தேவர் : தேவஉலகங்களில் வாழ்வோர்.
நரகர் : பாதளம் என்னும் உலகில் வாழ்வோர்.

(இவ்விருசாதியாரும் ''வட இந்திய இலக்கியங்களில் மக்களின் நிழல்போலச் சித்திரிக்கப்பட்ட கற்பனைப் பாத்திரங்கள்'' — தமிழ் வரலாற்றிலக்கணம். டாக்டர் ஆ. வேலுப்பிள்ளை)

**அஃறிணையுள் அடங்குவன :**

மேற்கூறிய முப்பிரிவினரும் தவிர்ந்த உயிருள்ள பிராணிகளும் உயிரில்லாப் பொருள்களும் அஃறிணையுள் அடங்கும்.
உ — ம் : சிங்கம், மரம், நிலம்,

## 2. பால்

பால் என்பது பகுதி எனப்பொருள்படும். உயர்திணையானது ஆண்பால், பெண்பால், பலர்பால் என மூன்று பகுதிகளாகவும் அஃறிணையானது ஒன்றன்பால், பலவின்பால் என இரு பகுதிகளாகவும் பாகுபடுத்தப்படும். (அஃறிணையுள் உயிருள்ள பொருள்கள் யாவிற்கும் ஆண், பெண் என்ற பாகுபாடுகள் உள்ளன. எனினும் அவற்றை ஒன்று (ஒன்றன்பால்), பல (பலவின்பால்) என இருபாகுபாடுகளாக வகுப்பதே தமிழிலக்கண ஆசிரியர்களின் மரபு.)

i. ஆண்பால் : மக்கள், தேவர், நரகர் என்பவருள் ஆணைக் குறித்து நிற்கும்.
உ — ம் : மகன், தேவன், நரகன்

ii. பெண்பால் : மேற்குறிப்பிடப்பட்டோருள்ளே பெண்களைக் குறிக்கும்.
உ — ம் : மகள். தேவி, — (நரகனுக்குப் பெண்பாற் சொல் தமிழில் இல்லை.)



iii. பலர்பால் : உ — ம் : மக்கள், தேவியர், நரகர்.
iv. ஒன்றன்பால் : உ — ம் : சிங்கம், மரம், வீடு.
v. பலவின்பால் : உ — ம் : சிங்கங்கள், மரங்கள், வீடுகள்.

### பால்காட்டும் விகுதிகள்

நன்னூலார் ஒவ்வொரு பாலுக்குமுரிய விகுதிகள் என்று பெயர்ச் சொல்லின் ஈற்றில் வரும் சில எழுத்துக்களைக் குறிப்பர். (விகுதிகள் தனித்தனி ஓர் எழுத்தாலோ ஈரெழுத்தாலோ ஆனவை )

1. ஆண்பால் விகுதிகள் : அன், ஆன், மன், மான், ன்.
உ — ம் : பொன்னன், யாழ்ப்பாணத்தான், வடமன் (வடநாட்டவன்) பெருமான், பிறன்.

2. பெண்பால் விகுதிகள் : அள், ஆள், இ, ள்
உ — ம் : இளையள், இளையாள், அரசி, பிறள்.

3. பலர்பால் விகுதிகள் : அர், ஆர், மார், கள், ர்.
உ — ம் : அழகர், யாழ்ப்பாணத்தார், தேவிமார், கோக்கள் (அரசர்கள்), பிறர்.

['கள்' விகுதி முற்காலத்தில் அஃறிணைக்குரியதாகவே கையாளப்பட்டது. பிற்காலத்திலேயே (நன்னூலார் காலத்திலேயே) அஃது உயர்திணைப் பலர்பாலுக்கும் உரித்தாயிற்று. இவ்விகுதி 'அர்' ஒடு சேர்ந்து மேலதிக விகுதியாகவே உயர்திணையிற் கையாளப்படும். உ — ம் : அரசர்கள்.]

4. ஒன்றன்பால் விகுதிகள் : து, று, டு.
'து' விகுதி சுட்டுப்பெயருக்கு மட்டும் வரும்.
உ — ம் : அது. (று, டு ஆகியன வினைச்சொற்களுக்கே விகுதிகளாய்வரும். அவற்றை வினையியலிற் காண்போம்)

5. பலவின்பால் விகுதிகள் : அ, ஆ, கள், வை.
உ — ம் : பல, உணா (உணவு), சிங்கங்கள்.
வை — சுட்டுப்பெயருக்குரியது.
உ — ம் : அவை.

### மேற்குறித்த விதிகளுக்குள் அடங்காத ஆண்பால், பெண்பாற் பெயர்கள்

ஆண்பால் : நம்பி, ஆடூஉ, விடலை, கோ, வேள், குரிசில், தோன்றல்.
பெண்பால் : மகடூஉ, நங்கை, தையல்.

மேற்குறித்த உதாரணங்களை நோக்கும்பொழுது பெயர்ச் சொற்களைக் கொண்டு ஆண்பால் பெண்பால்களைத் தீர்மானிப்பது எளிதன்று என்றே கொள்ளலாம். இவற்றின் பயனிலைகளாய் வரும் வினைமுற்றுக்களே திட்டவட்டமான பாலைக் குறிக்க வல்லன. இவ்வுண்மையை வினைபற்றிய விளக்கத்திற் காண்க.

## ஆண்பால், பெண்பால் எனவகுக்க இயலாதவை

பெண்மை குறைந்து ஆண்மை கூடியது அலி. ஆண்மை குறைந்து பெண்மை மிகுந்தது பேடி. இவ்விரு பெயர்களும் முறையே ஆண்பால், பெண்பால் என்றே கொள்ளத்தக்கன. இவற்றை முடிக்கும் சொல்லாகிய வினையே தீர்மானிக்கும்.

உ — ம்: அலி வந்தான், அலிகள் வந்தனர்.
பேடி பாடினாள்; பேடியர் வந்தனர்.

## ஆண்பாலுக்கும் பெண்பாலுக்குமுரிய விகுதிகள் பெற்றுவரும் அஃறிணைப் பெயர்கள்

**விரவுத் திணைப் பெயர்**

முற்காலத்திலே தமிழ் மக்கள் பசுக்களையும் எருதுகளையும் தம் பிள்ளைகள் போலவே அன்புடன் பேணி வளர்த்தனர். அவற்றிற்குத் தம் மக்களுக்கு இட்ட பெயர்களையே வழங்கி வந்தனர்.

உ — ம்: சாத்தன், கொற்றன்
சாத்தி, கொற்றி

இவை முறையே ஆண்பால் விகுதியும் பெண்பால் விகுதியும் பெற்றுள்ளன. இவை உயர்திணை ஆண்பால், பெண்பால் ஆகிய இரண்டையும் அஃறிணை ஒன்றன் பாலையும் குறித்து வழங்கின. இவற்றின் வேறுபாட்டையும் முடிக்கும் வினைச்சொல்லைக் கொண்டே அறியலாம்.

1. சாத்தன் வந்தான். — ஆண்பால்
2. கொற்றி வந்தாள். — பெண்பால்

1. சாத்தன் வந்தது
2. கொற்றி வந்தது } (ஒன்றன் பால்)

இவற்றைத் தொல்காப்பியம் 'விரவுத்திணைப் பெயர்' என வழங்கும். இவற்றோடு தாய், தந்தை' ஆகிய உறவு முறைமை சுட்டும் பெயர்களும் சினை விரவுப் பெயர்களும் திணை விரவுப் பெயராய்க் கொள்ளத்தக்கனவே. பின்னையது ஆண்பால், பெண்பாலுக்குப் பொதுப்பெயராயும் வரும்.



உ — ம்:

| | | |
|---|---|---|
| முறைமைப் பெயர்கள் | சாத்தன் தந்தை வந்தான். | ஆண் பால் |
| | சாத்தன் தாய் வந்தாள், | பெண்பால் |
| | சாத்தன் தந்தை வந்தது | ஒன்றன்பால் |
| | சாத்தன் தாய் வந்தது | ஒன்றன்பால் |
| சினை விரவுப் பெயர்கள் | செவியிலி வந்தான் | ஆண்பால் |
| | செவியிலி வந்தாள் | பெண்பால் |
| | செவியிலி வந்தது | ஒன்றன்பால் |

## பாற் பொதுப் பெயர் (அஃறிணை)

அஃறிணைப் பெயர்கள் யாவும் ஒன்றன்பால், பலவின்பால் எனப் பகுக்க முடியாதனவாம். எனவே அவற்றை முடிக்கும் வினை கொண்டே தீர்மானிக்கலாம்.

உ — ம்: பறவை பறந்தது. — ஒன்றன்பால்
பறவை பறந்தன. — பலவின்பால்

கண், காது, செவி, முலை முதலான உறுப்புப் பெயர்கள் ஒருமை முடிவே பெரும்பாலும் பெறும்.

உ — ம்: கண் பார்க்கும். காது கேட்கும்.
கண் பார்க்கிறது. காது கேட்கிறது.

தொல்காப்பியர், இவை பன்மையாயினும் இவற்றின் முடிக்கும் சொல் இவற்றை உறுப்பாக உடைய வினைமுதலிற்கு உரிய சொல்லேயாதலால், பன்மை முடிவு வேண்டா என்பர்.

உ — ம்: கண் நல்லள்

## பாற் பொதுப் பெயர் (உயர்திணை)

ஒருவர், புலவர், கவிஞர் முதலான மரியாதை சுட்டிவரும் பலர்பாற் பெயர்கள் ஒருவரையே குறிப்பதோடு ஆண்பாலுக்கும் பெண்பாலுக்கும் பொதுவானவையுமாம்.

உ — ம்: ஒருவர் ஆண்டகை வந்தார் — ஆண்பால்
ஒருவர் பெண்மணி வந்தார் — பெண்பால்
புலவருட் சிறந்தவர் திருவள்ளுவர் — ஆண்பால்
புலவருட் சிறந்தவர் ஔவையார் — பெண்பால்

**பாற்பொதுப் பெயர்களுக்குச் சில உதாரணங்கள் :**

பாவி, அகதி, அநாதை, உலோபி, எதிரி, ஏழை, குழந்தை, குற்றவாளி, சோம்பேறி, சிற்பி, துரோகி, நோயாளி, பிரதிவாதி, பிள்ளை, மேதை, விவேகி.

சினைவிரவுப் பெயரும் ஆண் பெண் பால்களுக்குப் பொதுப் பெயராக வருவதுண்டு.

உ — ம் : ஊமையாதலின் அவன் பேசான்.
ஊமையாதலின் அவள் பேசாள்.

அறியாமையைக் குறித்துவரும் பேதை என்ற பெயரும் இரு பாலுக்கும் பொதுப் பெயரேயாம்.

உ — ம் : பேதை அவன் — ஆண்பால்
பேதை அவள் — பெண்பால்

## 3. எண்

ஒருவர் அல்லது ஒன்றைக் குறிப்பது ஒருமை. பலர் அல்லது பலவற்றைக் குறிப்பது பன்மை. பால்காட்டும் விகுதிகளே ஒருமை பன்மையையும் காட்ட வல்லன.

மரியாதைப் பன்மை :

முற்காலத்திலே தம்மில் உயர்ந்தார், மதிப்பிற்குரியோர் ஆகிய எவரையும் ஒருமை எண்ணிற் குறிப்பதே வழக்கமாயிருந்தது. இந்த மரபு காலப்போக்கில் மறைந்து உயர்ந்தோரைப் பன்மை எண்ணாற் குறிக்கும் வழக்கம் ஏற்பட்டது. இவ்வழக்கு இக்காலத்தில் ஆறு வகையாய் அமைந்துள்ளமை காணலாம்.

உ — ம் :

(i) நாவலர் சிறந்த சைவப்பெரியார் — அர், ஆர் விகுதிகள் தனித்தனி கையாளப்பட்டன.

(ii) நாவலரவர்கள் — அர், கள் என்று இரு பலர்பால் விகுதிகள் கையாளப்பட்டன.

(iii) அது மடாதிபதி (எழுந்தருளியது) — அஃறிணைக்குரிய 'து' விகுதி, வணக்கத்துக்குரிய மரியாதைத் தன்மையைப் புலப்படுத்தி நின்றது. (மரியாதைப் பன்மை பெருதவிடத்தும் மரியாதையை 'அது' என்ற சொல் புலப்படுத்தியது காண்க.)

(iv) நீர் வாரும் — தமக்குச் சமமான ஒருவரை மரியாதையுடன் அழைக்க முன்னிலை 'ர்' விகுதி கையாளப்பட்டது.

(v) தாங்கள் பெரியவர்கள் — படர்க்கைக்குரிய 'தாம்' 'கள்' விகுதி பெற்று மரியாதைப் பன்மையாயிற்று.

(vi) நாம வர — தன்மைப் பன்மையில் முன்னிலையாரை அழைப்பது. ('நாம அவரையாமத்து என்னே வந்து வைகி நயந்துவே' — திருக்கோவையார்)



தனது தகுதிப்பாட்டைப் புலப்படுத்த மேனிலையில் உள்ள கடவுளோ, ஒருவனே, ஒருத்தியோ தன்னைப் பன்மை வாய்பாட்டாற் குறிக்கும் மரபும் உள்ளது.

'யாம் வரம் தந்தோம்' — கடவுள்

'எமது அரசின் பெயரால் இவ்வரவு செலவு அறிக்கையைச் சமர்ப்பிக்கின்றோம்.' — அரசன், சனாதிபதி முதலியோர்

பத்திரிகாசிரியன் தனது ஆசிரியத் தலையங்கத்திலே தன்னைப் பன்மை வாய்பாட்டால் குறிப்பதும் உண்டு.

உ - ம் : நாம் இதுபற்றி அடிக்கடி இப்பகுதியில் எழுதி வந்துள்ளோம்.

இப்பன்மைப் பிரயோகத்தினை முறையே Royal we, Editoria we என்று ஆங்கிலத்தில் உரைப்பர்.

## 4. இடம்

பேசுவோன் தன்னைச் சுட்டுவது தன்மை. முன்னிருப்போரைச் சுட்டுவது முன்னிலை. தூரத்திலோ அண்மையிலோ (முன்னிலைப்படாது) இருப்போரைச் சுட்டுவது படர்க்கை. இவை மூவிடங்கள் எனப்படும். இம்மூவிடங்களைக் குறிக்கும் பெயர்களும் உள்ளன.

i. தன்மைப் பெயர் :

யான், நான் என்பன. இவை பகாபதங்கள்.

பன்மை : விகுதிகள் — ம், கள்.

உ - ம் : யாம், நாம், நாங்கள்.

இவை உயர்திணைக்கும் அஃறிணைக்கும் பொதுவான பெயர்களாம்.

ii. முன்னிலைப் பெயர் :

நீ — இது பகாப்பதம்.

பன்மை — ர், இர், கள்.

உ - ம் : நீர், நீயிர் (இஃது இக்காலத்தில் வழக்கிலில்லை), நீங்கள்.

முன்னிலைப் பெயரும் உயர்திணை, அஃறிணை இரண்டிற்கும் பொதுவானதே.

iii. படர்க்கைப் பெயர் ;

அ, இ, உ என்ற மூன்றும் சுட்டெழுத்துக்கள். இந்தச் சுட்டெழுத்துக்களுடன் பால்காட்டும் விகுதிகளைப் புணர்த்தப் படர்க்கைப் பெயர்கள் தோன்றும்.

உ - ம் :

அ + அன் = அவன், அ + அள் = அவள் அ + து = அது
இ + அன் = இவன் இ + அள் = இவள் அ+வை =அவை.
உ + அன் = உவன் உ + அள் = உவள்
அ + அர் = அவர்
அ + அர் + கள் = அவர்கள்.

இவற்றோடு, பொருள்களினைக் குறிக்கும் பெயர்கள் யாவும் படர்க்கைப் பெயர்களே.

உ - ம் : பொன்னன், வள்ளி, சிங்கம், மலை, பறவை, மரம், இன்ன பிற.

## ஆறுவகைப் பெயர்களுள்ளும் அமைந்துகிடக்கும் உறுப்புக்கள்

பெயர்ச்சொற்கள் தமக்கு ஈற்றிலுள்ள விகுதிகள் வாயிலாகப் பாலினைச் சிறப்பாகவும் திணை, இடம், எண் என்பவற்றைப் பொதுவாகவும் காட்டுகின்றன என்னும் உண்மையை இதுவரை கண்டோம் இவ்விகுதிகளோடு பகுதி, இடைநிலை, சாரியை என்பனவும் பெயரின் ஆக்கத்திற்கு உதவுகின்றன. எனினும் எல்லாப் பெயர்ச் சொற்களையும் பகுதி, இடைநிலை, சாரியை, விகுதி எனப் பிரித்தல் இயலாது.

ஆக, பெயர்ச்சொற்கள், பகுதி, விகுதி, இடைநிலை முதலாகப் பிரிக்கத்தக்கவை என்றும் அவ்வாறு பிரிக்க இயலாதவை என்றும் இருவகைப்படும். சொல்லைப் 'பதம்' என்ற வடசொல்லால் வழங்கும் நன்னூலாசிரியர் பிரிபடு சொற்களைப் பகுபதம் என்றும் பிரிபடாச் சொற்களைப் பகாப்பதம் என்றும் அழைப்பர். (பகாப் பதத்திற்கு உ - ம் : நிலம், ஆறு, நாள்

(அ) பெயர்ச்சொற்களின் பகுதிகள் :

பகுதியாவது சொல்லின் தொடக்கத்தில் நிற்கும் பகாப்பதம்.

(i) பொருட்பெயர்ப்பகுதிக்கு உதாரணம் :

பொன் + அன் = பொன் என்பது பொருட்பெயர். அது பகுதியாய் வந்துள்ளது.



(ii) இடப்பெயர்ப் பகுதிக்கு உதாரணம் :

ஊர் + அன் — ஊரன் ஊர் என்ற இடப்பெயர் பகுதியாய் வந்துள்ளது,

(iii) சினைப்பெயர்ப் பகுதிக்கு உதாரணம் :

கை + அன் = கையன். கை என்ற சினைப்பெயர் பகுதியாய் வந்துள்ளது.

(iv) காலப்பெயர்ப் பகுதிக்கு உதாரணம் :

தை + ஆன் = தையான். 'தை' என்ற காலப்பெயர் பகுதியாய் வந்துள்ளது.

(v) தொழிற்பெயர் பகுதிக்கு உதாரணம் :

ஓடு + அல் = ஓடல். ஓடு என்ற வினையடி பகுதியாய் வந்துள்ளது.

(vi) பண்புப் பெயர்ப் பகுதிக்கு உதாரணம் :

கரு + மை = கருமை, கரு என்ற பண்படி பகுதியாய் வந்துள்ளது.

அ. தொழிற்பெயர், பண்புப்பெயர் ஆகிய இரு பெயர்களதும் சிறப்பியல்புகள்

பொருட்பெயர், இடப்பெயர், காலப்பெயர், சினைப்பெயர் ஆகியவற்றின் பகுதிகள் பகாப்பதங்களாய் உள்ளமையை நோக்குக. தொழிற்பெயரும் பண்புப்பெயரும் பகுபதங்களாய் விளங்குவதனையும் நோக்குக. இவ்வாறு வேறுபடுவதாற் பால் காட்டும் விகுதிகள் வந்து புணரும்போது பண்புப் பெயரும் தொழிற் பெயரும் தமக்கு இயல்பாய் அமைந்துள்ள விகுதிகளை இழக்கும் நிலை ஏற்படுகின்றது.

தொழிற்பெயர் விகுதி கெட்டுப் புணரல்

உ - ம் : (i) ஓதல் + ஆன்
ஓது + ஆன் = ஓதுவான்.

பண்புப்பெயர் விகுதி கெட்டுப் புணரல்

உ - ம் ; (ii) அணிமை + அன்
அணி + அன் = அணியன்

தொழிற்பெயருக்கும் பண்புப்பெயருக்கும் தனித்தனி விகுதிகள் உள. அவற்றை மேல்வரும் 'விகுதிகள்' என்ற பிரிவிற் காணலாம்.

(ஆ) பெயர்ச் சொற்களில் வரும் இடைநிலைகள் :

சொல்லின் பகுதிக்கும் விகுதிக்குமிடையே வரும் ஓர் உறுப்பே இடை நிலை.

உ - ம் : அறி + ஞ் + அன் = அறிஞன்
ஓது + வ் + ஆன் = ஓதுவான்

(இ) பெயர்ச்சொற்களில் வரும் சாரியைகள் :

பகுபதமாகிய பெயர்ச் சொற்கள் சிலவற்றிலே சாரியை என்னும் உறுப்பும் இடம் பெறுவது உண்டு.

உ - ம் : நிலம் + அத்து + அன் = நிலத்தன்

இச்சொல்லிலே நிலம் என்ற பகுதியின் 'ம்' 'த்' ஆக விகாரப்பட்டுச் சாரியையின் முதல் எழுத்தான 'அ' கெட்டுப் புணர்ந்தது.

(ஈ) பண்புப் பெயரின் விகுதிகள் :

பண்பைப் புலப்படுத்தி ஈற்றில் நிற்கும் பண்புப்பெயர் விகுதிகள் பின்வருவன :

மை - கருமை, ஐ - தொல்லை, சி - மாட்சி, பு - மாண்பு உ - மழவு (இளமை), கு - நன்கு, றி - நன்றி, று - நன்று, அம் - நலம், அர் - நன்னர். (இவை நாவலரின் இலக்கணச் சுருக்கத்திலே தரப்பட்டவை.) பாடு - பண்பாடு.

(உ) பண்புப்பெயர்கள் புதிய விகுதிகள் வந்து சேரும்போது அடையும் மாற்றங்கள் :

1. அணிமை + அன் = அணி(மை) அன் — மை விகுதி கெட்டது.

2. கருமை + அன் = (i) கரு+(மை)+அன்—மை விகுதி கெட்டது
(ii) கரு+(ரு-ரி)அன்—'உ' 'இ' ஆயிற்று

3. காரி
(i) கரு+(மை) இ
(ii) காரு + இ
(iii) கார் + இ
(iv) காரி
} 'மை' கெட்டு ஆதி நீண்டது. 'ரு' இலுள்ள உகரமும் கெட்டது.

4. பேராளன்
(i) பெரு+(மை)ஆளன்
(ii) பேர் + (உ) ஆளன்
(iii) பேராளன்
} ஆதி நீண்டது. 'மை' யும் 'ரு' வில் உள்ள 'உ' வும் கெட்டன.

5. பெருங்குடல்
(i) பெரு +(மை) குடல்
(ii) பெருங்குடல்
} 'மை' கெட்டு வருமொழி வல்லினத்திற்கு (க்) இனமான 'ங்' மிகுந்தது.



6. பைந்தொடி
(i) பசு + (மை)தொடி
(ii) ப + ந் + தொடி
(iii) பைந்தொடி
} 'மை' கெட்டு அதனோடு 'சு'வும் கெட்டு வருமொழி வல்லினத்திற்கு இனமாக 'ந்' தோன்றித் தொடக்க உயிர் மெய்யிலுள்ள 'அ' 'ஐ' யாயிற்று.

7. குற்றி
(i) குறு + (மை) இ
(ii) குற்று + இ
(iii) குற் + ற் + இ
(vi) குற்றி
} 'மை' கெட்டு 'குறு' வின் இடையிலே 'ற்' தோன்றியது பின் குற்றியலுகரமும் கெட்டது.

8. சேதா
(i) செம்(மை)+ ஆ
(ii) செத் + ஆ
(iii) சேத் + ஆ
சேதா
} 'மை' கெட்டு, 'ம்' 'த்' ஆகத்திரிந்து ஆதி நீண்டு சேதாவாயிற்று.

(ஊ) தொழிற்பெயர் விகுதிகள் :

தல் - அடித்தல், அல் - நாடல், அம் - ஓட்டம், ஐ - கொலை,
கை - எழுகை, வை - பார்வை, கு - போக்கு, பு - இருப்பு,
உ - செலவு, தி - மறதி, சி - அடர்ச்சி, வி - கலவி,
உள் - விக்குள், காடு - நோக்காடு, பாடு - தொழிற்பாடு
அரவு - தோற்றரவு, ஆனை - வாரானை, து - பாய்த்து.

இறுதி மூன்று விகுதிகளும் 'உள்' என்ற விகுதியும் இன்று வழக்கிழந்துள்ளன. (விக்குள் - விக்கல்)

(எ) காலங்காட்டும் தொழிற்பெயர்கள் :

வினை எப்பொழுதும் காலங்காட்டும் என்பது இலக்கண ஆசிரியர்களின் கோட்பாடு. வினையடியாகப் பிறக்கும் தொழிற் பெயரும் சிறுபான்மை காலங்காட்டுவதுண்டு. ('பெயர் காலம் காட்டாது, வேற்றுமை உருபேற்கும்' என்ற இலக்கண விதிக்குத் தொழிற்பெயர் விலக்கு) வினைச்சொற்கள் காலங்காட்ட இடைநிலை பெறுவது போல வினைப்பெயரான தொழிற் பெயரும் காலங் காட்டும் இடைநிலைகளைப் பெறுவதுதான் இதற்குக் காரணம்.

தொழிற்பெயர் காலங்காட்டுவதற்கு உதாரணங்கள் :

| இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம் |
|---|---|---|
| உண்டமை | உண்கின்றமை | — |
| நடந்தது | நடக்கின்றது | நடப்பது |

(தடித்த எழுத்துக்கள் தொழிற்பெயருக்கான விகுதிகள்)

(ஏ) முதனிலைத் தொழிற்பெயர் :

தொழிற்பெயர் தனது விகுதியைப் பெறாதவிடத்தும் பகுதியாகிய வினையடி, தொழிற்பெயரின் பொருள் தந்து நின்றால் அது முதனிலைத் தொழிற் பெயர் என வழங்கும்.

| உ-ம் : விகுதியோடு கூடிய தொழிற்பெயர் | | முதனிலைத் தொழிற் பெயர் |
|---|---|---|
| அருளல் | — | அருள் |
| துயிலல் | — | துயில் |
| மொழிதல் | — | மொழி |
| இடித்தல் | — | இடி, இன்னபிற. |

**(ஐ) பெயர்ச்சொற்கள் குறிப்புப் பொருள் தருதல் :**

ஒரு மொழியிலுள்ள சொற்களை நேர்ப்பொருள் தருவன, குறிப்புப் பொருள் .தருவன என இருவகையாகப் பிரிக்கலாம். தமிழிலே நேர்ப் பொருளைத் தருவனவற்றை இயற்சொல் என்பர்.

உ - ம் : நிலம், நீர்.

இவை நிலத்தையும், தண்ணீரையும் நேராகச் (வெளிப் படையாகச்) சுட்டி நிற்பதால் இயற்சொற்களாயின.

குறிப்புப் பொருளைத் தரும் சொற்களும், சொற்றொடர் களும். 'குறிப்பு' எனப் பொதுவாக வழங்கும். அவை ஒன்பது வகைப்படும்.

1. ஒன்றொழி பொதுச்சொல் 2. விகாரம் 3, தகுதி 4. ஆகுபெயர் 5. அன்மொழித்தொகை 6. வினைக்குறிப்பு 7. முதற்குறிப்பு 8. தொகைக் குறிப்பு 9. பிறகுறிப்பு.

இவற்றுள் அன்மொழித்தொகை தொடரியலிலும், வினைக் குறிப்பு 'வினை' என்ற பிரிவிலும் விளக்கப்படும்.

**1. ஒன்றொழி பொதுச்சொல் :**

பாற்பொதுச்சொல் குறிப்பினாலே ஒரு பாலை நீக்கி மற்றப் பாலைப் புலப்படுத்தி நிற்பதுண்டு.

உ - ம் : (i) செல்வனின் மக்கள் இந்துமகளிர் கல்லூரியிற் கற்கின் றனர்;

இவ்வாக்கியத்திலே 'மக்கள்' என்ற பாற்பொதுச் சொல் ஆண்பாலை ஒழித்துப் பெண்பாலைக் குறிப் பால் உணர்த்திற்று.

(ii) இராமனின் மக்கள் இந்துக்கல்லூரி உதைபந்தாட்டக் குழுவில் உள்ளனர்.

இவ்வாக்கியத்திலே 'மக்கள்' பெண்பாலை ஒழித்து ஆண்பாலை உணர்த்திற்று.



(iii) இந்த மாடு நான்கு படி பால் கறக்கும்.

இவ்வாக்கியத்திலே பொதுப்பெயரான மாடு, பசு வைக் குறித்தது.

(iv) இந்த மாட்டை வண்டியிற் பூட்டு.

இவ்வாக்கியத்தில் மாடு என்பது எருத்தைக் குறிக்க வந்தது.

**2. விகாரம் :**

பெயர்ச்சொல் ஒன்றின் எழுத்துக் கெட்ட விடத்தும் (விகாரமடைந்தவிடத்தும்) அச்சொல் உரிய பொருளைத் தருவது.

உ - ம் : மரை போன்ற மலர்ப்பாதம்: இங்கு 'மரை' என்ற சொல்லின் முதலெழுத்தாகிய 'தா' கெட்ட விடத்தும் அது மரை என்ற விலங்கை உணர்த்தாது குறிப்பாகத் தாமரை மலரை உணர்த்திற்று.

**3. தகுதி :**

அவையின் கண்ணே சொலத்தகாதவற்றைக் குறிப்பாக வேறு சொல்லாற் புலப்படுத்துவதும் அமங்கலமானவற்றை அமங்கலம் தோற்றாதவாறு பிறசொற்களாற் சொல்வதும் ஒரு குழுவிற்குமட்டும் பொருள் விளங்கக் கூறுவதும் தகுதியின் பாற் படும்.

உ - ம் : (i) அவசியகருமம் முடித்து வந்தான் ஒருவனை "நீ எங்கிருந்து வருகிறாய் ?" என்று கேட்டால், அவன் "நான் கால் கழுவி வருகிறேன்" என்பான். இங்குக் கால் கழுவி வரல் என்பது தகுதி காரணமாக அவசிய கருமத்தை உணர்த்திற்று; இவ்வாறு கூறுவதை "இடக்கரடக்கர்" என்பர். (இக்காலத்தில் ஆங்கிலமுறையினைத் தழுவி "நான் வெளிக்குப் போனேன்" என்பர்.)

(ii) இறந்தவரை அமரரானார், இறைவனடி சேர்ந்தார், இயற்கையெய்தினார் என்றல் தகுதி காரணமாய் அமங்கலத்தை மங்கலமாய் உரைப்பதாகும். இதனை 'மங்கலம்' என்பர். 'தாலி அறுந்தது' என்பதைத் 'தாலி பெருகிற்று' என்பதும், காராட்டை 'வெள்ளாடு' என்பதும் கடிதத்தைத் 'திருமுகம்' என்பதும் முற்கால மங்கல வழக்குகள்.

(iii) ஒரு குழுவினர் தம்முள்மட்டும் விளங்கத்தக்கதாகப் பயன்படுத்தும் சொல் குழூஉக்குறி எனப்படும். சிறைப்பறவை யான ஒருவனை அவன் கூட்டத்தவன், "மாமியார் வீடு போய்

விட்டான்" எனத் தன் குழுவினர்க்கு உரைப்பானாயின் அதன் பொருள் தன் நண்பன் சிறை சென்றான் என்பதாகும் குடிகாரர் மது அருந்துவதை 'ஊசி ஏற்றுதல்' என்பதும் பொற்கொல்லர் பொன்னைப் பறியென்பதும் குழூஉக்குறிகளே.

4. ஆகுபெயர் :

ஒன்றனது இயற்பெயர் அதனோடு தொடர்புடைய வேறொன்றிற்காகித் தொன்றுதொட்டு வழங்கி வருமாயின் அஃது ஆகுபெயராகும். இது பத்தொன்பது வகைப்படும். அவை வருமாறு.

(i) பொருளாகுபெயர் : முதற்பொருளின் பெயர் அதனோடு தொடர்புடைய சினையைக் குறிக்க வருவது.

உ - ம் : மல்லிகை போன்ற வெண்மை.

இங்கு மல்லிகை என்பது முதற்பொருளாகிய செடியைக் குறிக்காது சினையாகியமலரைக் குறித்தது.

(ii) சினையாகுபெயர் : சினையின் பெயர் அதனோடு தொடர்புடைய முதற்பொருளைக் குறிப்பது.

உ - ம் : தோகை ஆடியது.

தோகை (சிறகு) என்ற சினைப்பெயர் முதலாகிய மயிலைக் குறித்தது.

(iii) இடவாகுபெயர் : இடத்தின் பெயர் இடத்திலுள்ள பொருளைக் குறிப்பது.

உ - ம் : உலகம் துயின்றது ;

உலகம் என்ற இடப்பெயர் உலகில் வாழும் உயிரினங்களைக் குறித்தது.

(iv) தானியாகுபெயர்: இடத்திலுள்ள பொருளின் பெயரால் இடத்தைக் குறிப்பது.

உ - ம் : பாண் ! இங்கே வா :

பாண் என்ற தானி (இடத்திலுள்ள பொருள்)யின் பெயரால் அதனைச் சுமந்து விற்கும் விற்பனையாளனாகிய தானத்தைக் குறித்தது.

(v) காலவாகுபெயர் : காலப்பெயர் தன்னோடு தொடர்புடைய வேறொன்றைக் குறிப்பது.

உ - ம் : மாரி பொழிந்தது :

இங்கு மாரி காலத்தைக் குறிக்கும் பெயர் அக்காலத்திற் பெய்யும் மழையைக் குறித்தது.



(vi) குணவாகுபெயர் : பண்புப் பெயர் அதனை உடைய பொருளைக் குறிப்பது.

உ - ம் : வெள்ளை அடித்தான்.

வெள்ளை என்ற குணப்பெயர் வெள்ளை நிறமுடைய சுண்ணாம்பைக் குறித்தது.

(vii) தொழிலாகுபெயர் : தொழிலின் பெயர் தொழிலின் பயனைக் குறிப்பது.

உ - ம் : புழுங்கல் அவித்தான்.

புழுங்குதலாகிய தொழில் புழுங்கி அவியும் நெல்லைக் குறித்தது.

(viii) எண்ணளவையாகு பெயர்: எண்ணின் பெயர் எண்ணிற்குரிய பொருளைக் குறிப்பது.

உ - ம் : ஐந்தும் கெட்டு அறிவும் கெட்டது.

ஐந்து என்ற எண்ணுப்பெயர் மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய ஐம்பொறிகளையும் குறித்தது.

(ix) எடுத்தலளவையாகுபெயர் : நிறுத்தலளவைப் பெயர் தொடர்புடைய பொருளைக் குறிப்பது.

உ - ம் : சம்பல் அரைக்கக் காற்கிலோ தா.

காற்கிலோ (¼ கிலோ) என்ற எடுத்தலளவை, தொடர்புடைய மிளகாயைக் குறித்தது.

(x) முகத்தலளவையாகுபெயர் : முகத்தலளவைப்பெயர் தொடர்புடைய பொருளைக் குறிக்க வருவது.

உ - ம் : விளக்கெரிக்க ஒரு லீற்றர் போதும்.

லீற்றர் என்ற முகத்தலளவைப் பெயர் மண்ணெய்யைக் குறித்தது.

(xi) நீட்டலளவையாகுபெயர் ; நீட்டலளவைப் பெயர் அதனோடு தொடர்புடைய பொருளைக் குறிப்பது.

உ - ம் : இரண்டு மீற்றர் சட்டைக்குப் போதும்.

மீற்றர் என்ற நீட்டலளவைப் பெயர் அதனோடு தொடர்பான துணியைக் குறித்தது.

(இக்காலத்தில் அறிவியலின் தொடர்பான அளவைகள் பல புதியவாகத் தமிழில் நுழைந்துள்ளன. எனவே அவை யாவற்றையும் சேர்த்துக் கொண்டால் ஆகுபெயரின் தொகை எல்லை கடந்து பெருகி விடும். இந்த நான்குவகையாகு பெயர்களையும

(VIII - XI) ஒரேவகையாக்கி அளவையாகுபெயர் என வழங்குவது பொருத்தம் போன்று தோன்றுகின்றது )

(xii) சொல்லாகுபெயர் : சொல், அதன் பொருளுக்காதல்.

உ - ம் : இந்தப்பாட்டுச் சிந்தனையைத் தூண்டுகிறது.

பாட்டு என்ற சொல் பாட்டின் பொருளைக் குறிக்கின்றது.

(xiii) கருவியாகுபெயர் : கருவியின் பெயர் அந்தக் கருவியாலாக்கப்பட்ட பொருளைக் குறிக்க வருவது.

உ - ம் ; புதுமைப்பித்தனின் எழுத்து ஆற்றல் மிக்கது.

எழுத்து என்ற கருவிப்பெயர் அக்கருவியாலாக்கப்பட்ட ஆக்கத்தைக் (சிறுகதையைக்) குறித்தது.

(xiv) காரியவாகுபெயர் : காரியத்தின் பெயர் கருவியைக் குறிப்பது.

உ - ம்: எழுத்தாளர் தரமான இலக்கியம் படைத்தல் வேண்டும்.

இலக்கியம் என்ற காரியப் பெயர் கருவியாகிய நூல்களைக் குறித்தது.

(xv) கர்த்தாவாகுபெயர் : செய்தவன் பெயராலே செய்யப்பட்ட பொருளை அழைப்பது.

உ - ம் : கல்கி படித்தேன்.

'கல்கி' என்ற எழுத்தாளர் தொடக்கிய பத்திரிகை கருத்தாவாகிய அவர் பெயராலே குறிக்கப்பட்டது.

(xvi) உவமையாகுபெயர் : உவமானத் (ஒப்பிடும் பொருள்) தின் பெயரால் உவமேயத்தைக் (ஒப்பிடப்படும் பொருள்) குறிப்பது.

உ - ம் : சிங்கம் வந்தான்.

சிங்கம் என்ற உவமானம் வீரனாகிய உவமேயத்தைக் குறிக்க வந்தது.

(xvii) அடையடுத்த ஆகுபெயர் : பெயர் என்பது ஒரு சொல்லால் அமைய வேண்டியதும். சிலவேளைகளிலே ஆகுபெயராகிய ஒரு சொல்லின் இயல்பை விளக்க அதன் முன்னால் அடை சேர்க்கப்படின் அவ்வாறமையும் ஆகுபெயரை அடையடுத்த ஆகுபெயரென்பர்.

உ - ம் : வெற்றிலை நட்டான்

இங்கு 'இலை' என்ற சினையாகுபெயர் தனக்கு அடையாக வெறுமை என்ற சொல்லைப் பெற்றது.



(xviii) இருமடியாகுபெயர் : ஒரு பெயர் அதனோடு தொடர்புடைய வேறொன்றுக்காகி அந்த வேறொன்றும் தன்னோடு தொடர்பான இன்னொன்றைக் குறிப்பின் அது இருமடியாகுபெயராகும்

உ - ம் : கார் சிறந்தது : கார் என்பது கருமை. (1) அது கருமை நிறமுடைய மேகத்தைக் குறித்தது ! (2) அந்தமேகம் பெய்யும் பருவத்தைக் குறிக்கவந்தமையால் இஃது இருமடியாகு பெயர்.

(xix) மும்மடியாகுபெயர் : மூன்றுவது தொடர்பைப் புலப்படுத்திவருவது.

உ - ம் : கார் விளைந்தது

கார் கருமையைக்(1) குறித்துப் பின் பருவத்து(2)க்காகி அந்தப் பருவத்தில் விளையும் பயிரைக்(3) குறித்தது.

5. முதற்குறிப்பு:

வாக்கியத்தின் முதற் சொல் அவ்வாக்கியத்தின் முழுமையையும் குறிப்பால் உணர்த்துவது.

உ - ம் : 'நற்றிணை...' என்றதொடர் 'நற்றிணை நல்ல குறுந்தொகை' எனத் தொடரும் வெண்பா முழுவதையும் குறிப்பது.

6. தொகைக் குறிப்பு:

எண்ணுத் தொகை அவ்வெண்ணுக்குரிய பொருள்களைக் குறிப்பாற் புலப்படுத்துவது.

உ - ம் : ஐவர் நூற்றுவரை வென்றனர்.

இங்கு ஐவர் என்பது தருமன் முதலாகவுள்ள பாண்டவரையும் நூற்றுவர் என்பது துரியோதனன் முதலாகவுள்ள கௌரவரையும் குறிப்பாலே புலப்படுத்திற்று.

7. பிறகுறிப்பு:

பிறவழியாகக் (ஏதோ ஒரு வழியிலே) குறிப்புப் பொருள் தருவது.

உ - ம் : வேங்கை என்பது வேகுங்கை எனவும் வேங்கைப்புலி எனவும் இரு பொருளைப் புலப்படுத்துதல்.

## வேற்றுமை

பெயரானது உருபு ஏற்றோ ஏற்காமலோ பொருளை வேறுபடுத்தினால் அது வேற்றுமை எனப்படும். (உருபு என்பது பெய) ரின் ஈற்றிலே பொருளை வேறுபடுத்த வரும் இடைச்சொல்.

பெயரின் முதன்மையான இயல்பு வேற்றுமையை ஏற்றுப் பொருளில் வேறுபாடுணர்த்தலே என்பதும் இங்குக் கருதத்தக்கது.

முதலாம் வேற்றுமை, இரண்டாம் வேற்றுமை, மூன்றாம் வேற்றுமை, நான்காம் வேற்றுமை, ஐந்தாம் வேற்றுமை, ஆறாம் வேற்றுமை, ஏழாம் வேற்றுமை, எட்டாம் வேற்றுமை என வேற்றுமை எட்டாக வகுக்கப்படும்.

## முதலாம் வேற்றுமை

பெயர்ச்சொல் வாக்கியத்தில் எழுவாயாக வரின் அதுவே முதலாம் வேற்றுமை. இதற்கு உருபு இல்லை. எனவே இவ்வேற்றுமை ஏற்கும் பெயர் திரிபடையாது. இதனை எழுவாய் வேற்றுமை எனவும் வழங்கலாம்.

முதலாம் வேற்றுமை வினை, வினா, பெயர் ஆகியவற்றை முடிக்கும் சொற்களாக (பயனிலைகளாய்) ஏற்கும்.

உ - ம் : i. கந்தன் வந்தான்
இராமன் கரியன்
கமலம் வருக
இன்பம் உண்டு
} வினையை முடிக்குஞ் சொல்லாய்க் கொள்ளல்.

ii. கந்தன் யார் ? — வினாவை முடிக்குஞ் சொல்லாகக் கொள்ளல்.

iii. இராமன் என் தம்பி - பெயரை முடிக்கும் சொல்லாகக் கொள்ளல்.

முதலாம் வேற்றுமைக்கு வேற்றுமையுருபு இல்லையெனினும் சொல்லுருபு உண்டு. வேற்றுமையுருபு என்பது இடைச்சொல். இடைச்சொல் தனித்து நிற்கும் பொழுது பொருள் தராது. (ஐ, ஆல் இவைபோல்வன.) சொல்லுருபு என்பது பொருளுடைய சொல், வேற்றுமை உருபாகவும் பயனுதல்.

முதலாம் வேற்றுமைக்குரிய சொல்லுருபுகளாவன :

ஆனவன், ஆகின்றவன், ஆவான் (பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் ஆகியனவும் தத்தமக்குரிய பால் காட்டும் விகுதி பெற்று முதலாம் வேற்றுமைச் சொல்லுருபாகலாம். உ - ம் : ஆனவள், ஆனவர், ஆனது இவைபோல்வன,) என்பவன், என்பது, என்பவை. (எனப்பட்டவன், எனப்பட்டது, எனப்பட்டவை என்ற செயப்பாட்டு வினைகள் திரிந்து என்பவன், முதலாக வந்தன.)



உ - ம் : சந்திரனானவன் வந்தான்.
இலங்கை என்பது தீவு.

## இரண்டாம் வேற்றுமை

இதற்கு உருபு ஐ. இவ்வுருபை ஏற்ற பெயர்ச்சொல் செயப்படுபொருளாக வேற்றுமையடையும். செயப்படுபொருளானது ஆக்கப்படுபொருள், அழிக்கப்படுபொருள், அடையப்படுபொருள், துறக்கப்படுபொருள், ஒக்கப்படுபொருள், உடைமைப் பொருள், என ஆறுவகையாய் அமையும். இவற்றை முறையே ஆக்கல், அழித்தல், அடைதல், நீத்தல், ஒத்தல், உடைமை எனவும் சுருக்கமாக வழங்கலாம்.

உ - ம் : வீட்டைக் கட்டினான் — ஆக்கல்
பகைவரை வதைத்தான் — அழித்தல்
வீட்டை அடைந்தான் — அடைதல்
குடும்பத்தை விட்டான் — நீக்கல் (துறத்தல்)
சிங்கத்தை ஒத்தவன் — ஒத்தல்
செல்வத்தை உடையவன் — உடைமை.

இவற்றிலே கட்டினான், வதைத்தான், அடைந்தான், விட்டான் என்ற நான்கும் தெரிநிலை வினைமுற்றுக்கள். ஒத்தவன், உடையவன் என்பன குறிப்பு வினைமுற்று; (இவ்விருவகை வினைமுற்றுக்கள் பற்றி வினை என்ற பகுதியில் விளக்கம் உண்டு )

## மூன்றாம் வேற்றுமை

ஆல், ஆன், ஒடு, ஓடு என்பன இவ்வேற்றுமைக்கான உருபுகள். கருவி, கருத்தா, உடனிகழ்ச்சிப் பொருள்களை இவ்வுருபு ஏற்ற பெயர்ச்சொல் பெறும்,

| 1<br>கருவிப்பொருள் | 2<br>கருத்தாப்பொருள் | 3<br>உடனிகழ்ச்சிப் பொருள் |
|---|---|---|
| 1. வாளால் (வாளான்) வெட்டினான். | அகத்தியனால் உரைக்கப்பட்டபொருள் | 1.* தூங்குகையான் (கையால்) ஓங்கு நடைய |
| 2. *கொடியொடு (கொடியோடு) துவக்குண்டான் | | 2. இராமனொடு (இராமனோடு) தம்பி வந்தான்: |

* தூங்குகின்ற தும்பிக்கையோடு ஓங்கிய நடையை உடையன (யானைகள்) என்பது பொருள். துவக்குண்டான் என்பதற்குப் பொருள் கட்டுண்டான் என்பது. கொடியாற் கட்டப்பட்டான் என்பது வாக்கியப் பொருள்.

கருவிப்பொருள் என்பது முதற்கருவி எனவும்(மூலப்பொருள்) துணைக்கருவி (துணைப்பொருள்) எனவும், கருத்தாப் பொருள் என்பது ஏவுதற் கருத்தா (ஏவிச் செய்விப்பவன்) எனவும் இயற்றுதற் கருத்தா (தானே செய்பவன்) எனவும், இவ்விரு பிரிவுகளாக வகுக்கப்படும். மேலே துணைக்கருவிக்கும் இயற்றுதற் கருத்தாவுக்கும் உதாரணங்கள் தரப்பட்டுள்ளன. மற்றவற்றிற்கு உதாரணம் :

i. பலகையாற் செய்த மேசை — முதற்கருவிப் பொருள்.

ii. கட்டட நிபுணனாலாக்கப்பட்ட மாளிகை — ஏவுதற்கருத்தாப்பொருள்.

மூன்றும் வேற்றுமைக் கருத்தா. ஆல் உருபு ஏற்காதும் சில இடங்களில் அவ்வேற்றுமைப் பொருள் உணர்த்தும்

உ — ம் : கம்பன் யாத்த இராமாயணம் கம்பனால் ஆக்கப்பட்ட இராமாயணம்.

### இக்காலப் பிரயோகம்

இக்காலத்தில் ஆன் உருபும் ஒடு உருபும் அருகியே வழங்குகின்றன. ஆல் என்பதை 'ஆலே' என ஏகாரச் சாரியை சேர்த்தும் உருவாக்குவதுண்டு.

உ - ம் : அவனாலே ஆக்கப்பட்ட நூல்.

இன்று 'ஆல்' கருவி கருத்தாப் பொருளிலும் ஒடு உடனிகழ்ச்சிப் பொருளிலும் மட்டுமே கையாளப்படுகின்றன. ஆல், ஆன் பிற்காலத்தில் உடனிகழ்ச்சிப் பொருளையும் ஒடு, ஓடு கருவி, கருத்தாப் பொருளையும் இழந்துவிட்டன போலும்.

### மூன்றும் வேற்றுமைக்குரிய சொல்லுருபுகள்

ஒடு, ஓடுவிற்குப் பதில் 'உடன், கொண்டு' என்ற சொல்லுருபுகள் இக்காலத்திலே பெரும்பாலும் கையாளப்படல் காணலாம்.

உ - ம் : இராமனுடன் கந்தன் சென்றான்.
பேனை கொண்டு எழுதினான்.

'ஆல்' உருபுக்கு ஏகாரத்தைச் சேர்த்து வழங்குவதுபோல 'உடன்' என்ற சொல்லுருபிற்கும் ஏகாரம் சேர்த்து வழங்குவதுண்டு.

உ - ம் : கந்தனுடனே சென்றான்.

'ஒடு' உருபிற்கு ஒப்புப் பொருளும் பெரும்பான்மையாகக் கையாளப்படுகின்றது.

உ - ம் : அவனைச் சிங்கத்தோடு (சிங்கத்துடன்) ஒப்பிடலாம்.



## நான்காம் வேற்றுமை

நான்காம் வேற்றுமைக்கு உருபு 'கு'. இவ்வேற்றுமை, வினையையும் பெயரையும் முடிக்கும் சொற்களாகக் கொள்ளும்.

நான்காம் வேற்றுமையுருபுக்கான பொருள்களும் உதாரணங்களும் பின்வருமாறு :

| பொருள் | | உ - ம் |
|---|---|---|
| கொடை | — | புலவர்க்குப் பொன் கொடுத்தான். |
| பகை | — | கீரிக்குப் பாம்பு பகை. |
| நட்பு | — | இராமனுக்கு நண்பன் சுக்கிரீவன். |
| உறவு | — | தசரதனுக்கு மகன் இராமன். |
| தகுதி | — | அறிஞனுக்கு உரியது அடக்கம். |
| முதற்காரணகாரியம் | — | மேசைக்குப் பலகை வாங்கினான். |
| நிமித்த காரணகாரியம் | — | பரிசு பெறுதற்குப் போட்டியிட்டான். |

### நான்காம் வேற்றுமைக்குரிய சொல்லுருபுகள் :

பொருட்டு, ஆக, நிமித்தம், என்று (இக்காலப் பிரயோகம்) என்பன நான்காம் வேற்றுமைச் சொல்லுருபுகளாகப் பயன்படும்.

பொருட்டு என்ற சொல்லுருபு வருமிடங்களிற் பெயர்ச்சொல்லை அடுத்து 'இன்' சாரியை வருதலும் உண்டு.

உ - ம் : கூலிப்பொருட்டு வேலை செய்தான்.
கூலியின் பொருட்டு வேலை செய்தான்.

'ஆக' என்ற சொல்லுருபு 'கு'வ்வுருபைத் தொடர்ந்தே எப்பொழுதும் வரும்.

உ - ம் - வீட்டுக்காக நிலம் வாங்கினான்.

நிமித்தம் என்ற சொல்லுருபு 'இன்'சாரியையை அடுத்தும் வரும்.

உ - ம் : கூலி நிமித்தம் வேலை செய்தான்.
கூலியின் நிமித்தம் வேலை செய்தான்.

'என்று' என்னும் சொல்லுருபு 'ஆக' என்ற சொல்லுருபைத் தொடர்ந்தும் வரும்.

உ - ம்: கூலிக்கென்று வேலை செய்தான்
கூலிக்காகவென்று வேலை செய்தான்.

## ஐந்தாம் வேற்றுமை

ஐந்தாம் வேற்றுமைக்கு உருபு இல், இன். இதற்குரிய பொருள்களும் உதாரணங்களும் பின்வருவன: இது பெயரையும் வினையையும் முடிக்கும் சொல்லாகப் பெறும்.

| பொருள் | | உதாரணம் |
|---|---|---|
| i. நீங்கல் | — | ஊரில் நீங்கினான். |
| | — | ஊரின் நீங்கினான். |
| ii. எல்லை | — | அனுரதபுரத்தின் வடக்கு வவுனியா. |
| | — | யாழ்ப்பாணத்திற் கிழக்கு சாவகச்சேரி. |
| iii. ஒப்பு | — | இவனின் அவன் நல்லன். |
| | — | அவனில் இவன் பெரியன். |
| iv. ஏது | — | படிப்பிற் சிறந்தவன் பரம். |
| (காரணம்) | — | படிப்பின் உயர்ந்தவள் கமலம் |

ஒப்புப் பொருள் பற்றிய ஒரு விளக்கம்:

இரண்டாம் வேற்றுமையிலும் ஒக்கப்படுபொருள் கூறப்பட்டுள்ளது. ஐந்தாம் வேற்றுமையிலும் ஒப்புப் பொருள் வருகின்றது. எனினும் இரண்டிற்கும் ஓர் அடிப்படை வேறுபாடு உள்ளது.

இரண்டாம் வேற்றுமையிற் கூறப்படும் ஒப்பு, வேற்றுமையான இரு பொருள்களிடையே காணப்படும் ஒற்றுமையாகும்.

உ - ம் : புலியை ஒத்தவன் பொன்னன்.

புலியாகிய உவமானமும் பொன்னனாகிய உவமேயமும் பல பண்புகளிலும் வேறுபட்டவை. வீரம், ஆற்றல் என்பவற்றில் மட்டுமே புலிக்கும் பொன்னனுக்குமிடையே ஒற்றுமையுண்டு.

ஐந்தாம் வேற்றுமையில் வரும் ஒப்புப்பொருள், ஒற்றுமையுடைய இரு பொருள்களினிடையே காணப்படும் வேற்றுமையைப் புலப்படுத்துகின்றது.

உ - ம் : இராமனில் வேலன் கரியன்.

இவ்வுதாரண வாக்கியத்தில் வரும் இராமனும் வேலனும் பல பண்புகளிலே ஒப்புமை உடையோர். இருவருக்கும் உள்ள வேற்றுமை கறுப்பாகிய நிறம் ஒன்றே. இத்தகைய ஒப்பீட்டினை 'உறழ்வு' என்ற சொல்லாலே தொல்காப்பியம் குறிக்கும்.

ஐந்தாம் வேற்றுமைக்குரிய சொல்லுருபுகள் :

இல், இன் உருபுகளோடு சேர்ந்து முறையே இருந்து, நின்று ஆகிய சொல்லுருபுகளும் ஐந்தாம் வேற்றுமைப் பொருளினை உணர்த்த வருதல் உண்டு,



| | | |
|---|---|---|
| உ — ம் : (i) | வீட்டிலிருந்து புறப்பட்டான். | நீங்கல் |
| | வீட்டினின்று சென்றான். | |
| (ii) | வீட்டிலிருந்து கூப்பிடுதொலை. | எல்லை |
| | வீட்டினின்று கூப்பிடுதொலை. | |

இருந்து, நின்று என்பவற்றோடு 'உம்'முச் சாரியை சேர்த்து வழங்கலும் உண்டு.

உ - ம் : வீட்டினின்றும் புறப்பட்டான்:
வீட்டிலிருந்தும் புறப்பட்டான்.

காட்டிலும், பார்க்கிலும்விட என்ற சொல்லுருபுகள் ஐந்தாம் வேற்றுமை ஒப்புப் பொருளில் வருதல் உண்டு. இவ்வாறு வருமிடங்களிற் பெயர்ச் சொல்லோடு ஐகாரச் சாரியையைச் சேர்த்தலும் நிகழும்.

உ - ம் : அவனைக் காட்டிலும் இவன் நல்லன்.
இவனைப் பார்க்கிலும் அவன் சிறியன்.
அவனைவிட இவன் கொடியன்.

## ஆறாம் வேற்றுமை

இதற்கு அது, ஆது, அ என்னும் மூன்று உருபுகள் கூறப்படுகின்றன. பொருள் உடைமையாகும் உடைமையைக் கிழமை என்ற பெயராலும் வழங்குவர். கிழமை இருவகைப்படும். அவை தற்கிழமை, பிறிதின்கிழமை எனப்படும்.

(i) தற்கிழமை : தன்னிலிருந்து வேறாக்க முடியாத உடைமைப் பொருள்.

(ii) பிறிதின் கிழமை: தன்னிலிருந்து வேறான தனக்கு உடைமையாயுள்ள பொருள்.

அது, ஆது என்ற உருபுகள் ஒருமைக்கும் (உடைமையாயுள்ள ஒரு பொருளுக்கும்) அ என்ற உருபு பன்மைக்கும் (பல பொருள்களுக்கும்) கையாளப்படும்.

உ - ம் ;

| தற்கிழமை | எண் |
|---|---|
| i. இராமனது கண் - உறுப்புத் தற்கிழமை | ஒருமை |
| ii. சாத்தனது கருமை - பண்புத் தற்கிழமை | ,, |
| iii. அவனது வரவு - தொழிலாந் தற்கிழமை | ,, |
| iv. நெல்லது குவியல் - ஒன்றன்கூட்டத் தற்கிழமை | ,, |
| v. படையது அணி - பலவின் கூட்டத் தற்கிழமை | ,, |
| vi. அரிசியது மா - ஒன்றுதிரிந்து வேறான தற்கிழமை. | ,, |

| | பிறிதின்கிழமை | எண் |
|---|---|---|
| i. | எனது புத்தகம் - பொருட் பிறிதின் கிழமை | ஒருமை |
| ii | தமிழரது நிலம் - இடப் பிறிதின் கிழமை | ,, |
| iii. | தொழிலாளரது யுகம் - காலப் பிறிதின் கிழமை | ,, |

(சினை, குணம், தொழிலாகியன பிரிக்கமுடியாத கிழமைகளாதலால் அவை தற்கிழமை என்ற பிரிவுள் அடக்கப்பட்டன.)

'அது' என்ற வேற்றுமையுருபு வருமிடங்களில் 'ஆது' உருபையும் கையாளலாம்.

உ - ம் : எனாது புத்தகம்.

எனினும் 'ஆது' என்பது இன்று வழக்கில் இல்லை.

'அ' உருபு பன்மைக்குவர உதாரணம் :

உ - ம் : என கைகள், உன புத்தகங்கள்.

இன்று 'அ' உருபு பன்மைப் பொருளிலே கையாளப்படுதல் இல்லை. 'அது' உருபே, பன்மையையும் குறிக்கக் கையாளப்படும்.

உ - ம் ; எனது புத்தகங்கள்.

ஆறாம் வேற்றுமை உருபு அஃறிணைக்கு மட்டுமன்றி உயர்திணைக்கும் கையாளப்படல் இன்றுள்ள வழக்கு; இவ்வாறு கையாளும் பொழுது ஆறாம்வேற்றுமை, அவ்விடங்களிலே தனக்குரிய உடைமைப்பொருளினை இழந்து உறவு, பகை, நட்பு ஆகிய நான்காம் வேற்றுமைப் பொருள்களைப் பெறுகின்றது.

உ - ம் : கந்தனது மைந்தன் - உறவுப்பொருள் பெற்றது.
இராமனது பகைவன் - பகைப்பொருள் பெற்றது.
கண்ணனது நண்பன் - நட்புப்பொருள் பெற்றது.

ஆறாம்வேற்றுமை தொடர்பான சிக்கல் :

ஆறாம்வேற்றுமை தவிர்ந்த மற்றைய வேற்றுமைகளைச் சொற்றொடரில் முன்பின்னாக மாற்றினாலும் வழுவில்லை.

உ - ம் : i. வந்தான் கந்தன் - முதலாம் வேற்றுமை
ii. கட்டினான் வீட்டை - இரண்டாம் வேற்றுமை.
iii. எழுதினான் பேனையால் - மூன்றாம் வேற்றுமை.
iv. தம்பி இராமனுக்கு - நான்காம் வேற்றுமை.
v. பெரியவன் அவனில் - ஐந்தாம் வேற்றுமை.
vi. — —
vii. இருந்தான் வீட்டுக்கண் - ஏழாம்வேற்றுமை
viii. வா மகனே - எட்டாம் வேற்றுமை.



ஆறாம்வேற்றுமையைக் முன்பின்னாக மாற்றிவிட்டால் அவ்வேற்றுமையுருபேற்ற பெயர், குறிப்புவினைமுற்றாக மாறி விடுகிறது

உ - ம் : இப்புத்தகம் எனது - குறிப்புவினைமுற்று.

உடைமைப் பொருள் இன்னது என்று கூறாது ஆறாம் வேற்மையுருபைச் சேர்த்தால் அவ்விடங்களிற் பெயர்ச்சொல் வினையாலணையும் பெயராய் மாறுகின்றது.

உ - ம் : அவனது போயிற்று - வினையாலணையும் பெயர்.

இவ்வாறு பெயர், வினையாக மாறுகின்ற நிலைமை காரணமாக ஆறாம்வேற்றுமை மற்றையவற்றினின்றும் வேறுபட்ட ஒன்றாகக் கருதப்படுகின்றது. ஒருமை, பன்மை வேறுபாடு குறிக்கப்படுதலும் ஆறாம்வேற்றுமைக்கு மட்டுமே.

'அது' என்ற ஆறாம்வேற்றுமையுருபினை இடைச்சொல்லாகக் கொள்ளாமல் (உருபு - இடைச்சொல்) அதனைத் 'து' விகுதி பெற்ற சொல்லுருபாகக் (சுட்டுப்பெயர்) கொண்டு மயங்கியமையாலேயே இச்சிக்கல் உண்டாயிற்று என மொழியியலார் கருத்துத் தெரிவிப்பது சிந்தித்தற்கு உரியது.

நன்னூலாரின் காலத்திற்கு முன்பே ஆறாம்வேற்றுமையுருபு உயர்திணைப் பலர்பாலையும் உறவுப்பொருளையும் குறித்து வழங்கப்பட்டமைக்கு ''நினைதடியா ரொடல்லால்'' என்று திருவாசகச் சொற்றொடரும் சான்றாகும்.

ஆறாம் வேற்றுமைச் சொல்லுருபு :

'உடைய' என்ற சொல்லுருபு ஆறாம்வேற்றுமைக்கு உரியது.

உ - ம் என்னுடைய புத்தகம்.
என்னுடைய புத்தகங்கள்.

## ஏழாம் வேற்றுமை

ஏழாம்வேற்றுமைக்குக் கண், கால், தலை, இடை, வாய், திசை, வயின், முன், சார், வலம், இடம், மேல், கீழ், புடை, முன், பின், பாடு, அளை, தேம், உழை, வழி, உன், உழி, உள், அகம், புறம், இல் என்ற பல உருபுகள் நன்னூலிலே தரப்பட்டுள்ளன. நாவலரவர்கள் கண், இல், உள், இடம் என்ற நான்கு உருபுகளை மட்டுமே தமது இலக்கணச்சுருக்கத்திலே தந்துள்ளார்கள். 'இல்' உருபே இன்று மிகுதியாகக் கையாளப்படும். எனினும் மேல், கீழ், முன், பின், உள், கண், என்பனவும் தேவை நோக்கிக் கையாளப்படுகின்றன.

ஏழாம்வேற்றுமை இடப்பொருள் தரும். பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் ஆகிய அறுவகைப் பெயர்ப் பொருள் களையும் இடமாகக் கொண்டு இவ்வேற்றுமை அமைகின்றது :

i. மேசையில் உள்ளது புத்தகம் — பொருள் இடமாயிற்று.
ii. கொழும்பில் உள்ளது வெள்ளவத்தை-இடம் இடமாயிற்று
iii. மாரியில் மழை பெய்யும் — காலம் இடமாயிற்று.
iv. கருமையில் உள்ளது அழகு — குணம் இடமாயிற்று.
v. கையில் உள்ளது மச்சம் - சினை இடமாயிற்று.
vi. முயற்சியில் உள்ளது முன்னேற்றம்-தொழில் இடமாயிற்று

ஏழாம்வேற்றுமையுருபேற்று முதலிலிருந்து பிரிக்கமுடியாப் பொருள்களாகக் குணம், சினை, தொழிலில் ஆகிய இடப் பெயர்கள் உள்ளன. எனவே அவை தற்கிழமைத் தொடர் புடையன. மற்றைய மூன்றும் பிறிதின்கிழமைத்தொடர்புடையன.

## எட்டாம் வேற்றுமை

எட்டாம்வேற்றுமைக்கு உருபு இல்லை. எனினும் எழுவாய் வேற்றுமைபோலன்றி இது பெரும்பாலுந் திரிபடைந்தே தனக் குரிய விளிப்பொருளைத் (அழைத்தற் பொருளை) தருகின்றது.

எட்டாம் வேற்றுமை விளி ஏற்கும் பொழுது திரியாது இயல் பாக நிற்பதற்கு உதாரணம் :

தம்பி, வா.

திரிபடைவதற்குச் சில உதாரணங்கள் :

| | பெயர் | | விளியேற்று அடைந்த வடிவம் |
|---|---|---|---|
| i. | கந்தன் | — | கந்தனே - 'ஏ'காரம் தோன்றியது.<br>கந்தா - ஈறு கெட்டுத் 'த' விலுள்ள உயிர் நீண்டது. |
| ii. | ஐயன் | — | ஐய - ஈறு கெட்டது.<br>ஐயா - ஈறு கெட்டு 'ய' விலுள்ள உயிர் நீண்டது.<br>ஐயாவோ - ஈறு கெட்டு உயிர் நீண்டு, 'ஓ' பெற்றது. |
| iii. | அன்னை | — | அன்னாய் - ஈற்று 'ஐ' — 'ஆ' ஆகி 'ய்' பெற்றது. |
| iv. | மக்கள் | — | மக்காள்-ஈற்றயலெழுத்தான 'க' விலுள்ள உயிர் நீண்டது. |



விளி ஏற்காத பெயர்கள் :

விளிப்பெயர்கள் முன்னிலையாரையும் படர்க்கையாரையுமே சுட்டி வருவன எனவே தன்மைப் பெயர்கள் விளி ஏற்காமை இயல்பே. வினாப்பெயர்களும் (யாவன் ? எவன் ?), சுட்டுப் பெயர்களும் (அது, அவன், அவள்) தான், தாம் முதலான படர்க்கைப் பெயர்களும் விளியுருபு ஏற்கா.

இக்காலப் பிரயோகம் :

இன்று திரிபுபெற்று வந்த விளிவேற்றுமைக்குரிய சில பெயர் கள் எழுவாயாகவும் (முதலாம்வேற்றுமை) அமைதல் உண்டு.

உ - ம் : ஐயா வந்தார், அண்ணா சென்றார்.
அம்மா வருவார்.

## வேற்றுமை மயக்கம்

ஒரு வேற்றுமையின் உருபு நிற்கவேண்டிய இடத்தில் மற் றொரு வேற்றுமையுருபு நிற்றல் வேற்றுமை மயக்கம் எனப்படும். இஃது இரண்டு வகைப்படும்.

i. பொருண் மயக்கம்.
ii. உருபு மயக்கம்.

(அ) பொருண்மயக்கம் :

ஒரு வேற்றுமையின் உருபானது தனக்குரிய பொருளையுந் தந்து அதே வேளையிலே பிறவேற்றுமைப் பொருளையுந் தருவது.

உ - ம் : (i) தூணிற் சார்ந்தான் :

சார்தல் என்னும் அடையப்படுபொருள் இரண்டாம் வேற்று மைக்கு உரியது. இங்கு 'இல்' என்ற ஏழாம் வேற்றுமை யுருபு அந்தப் பொருளையுந் தந்து தனக்குரிய இடப்பொருளையுந் தந்தது.

(ii) ஊரை நீக்கினான் :

இரண்டாம் வேற்றுமை உருபாகிய 'ஐ' நீங்கற் பொருளாகிய ஐந்தாம்வேற்றுமைப் பொருளையும் தனக்குரிய துறக்கப்படு பொருளையும் தந்து நின்றது.

(தொல்காப்பியர் இழவு (இழத்தல்) எனக் கூறியதனை 'நீத்தல்' என்று பெயரிட்டு நன்னூலார் கையாண்டார். ஐந்தாம் வேற்றுமைப் பொருள்களாய்த் தொல்காப்பியர் நீர்தல், பற்று விடுதல் என உரைத்தவற்றை நன்னூலார் 'நீங்கல்' என்று

பொருள் கொண்டார். நாவலர் இரண்டாம் வேற்றுமைக்குரிய நீத்தற் பொருளுக்குத்துறத்தல் என்றும், ஐந்தாம் வேற்றுமைக்கு நீங்கல் என்றும் பொருள் கொண்டார். தொல்காப்பியரின் கருத்துப்படி துறத்தல் என்பது ஐந்தாம் வேற்றுமைக்கே உரியது. எனினும் இந்தப் பொருள் நுட்பவேறுபாடுகள் இக் காலத்திலே பெரிதுபடுத்தப்படுவதில்லை.)

(ஆ) உருபு மயக்கம் :

ஒரு வேற்றுமையின் உருபானது தனக்குரிய பொருளை இழந்து வேறொரு வேற்றுமையின் பொருளைத் தந்து நிற்றல்;

உ - ம் : (i) ஊருக்குச் சென்றான் : நான்காம் வேற்றுமைக்கு அடையப்படுபொருள் இல்லை. அஃது இரண்டாம் வேற்றுமைக்கே உரியது, எனவே ஊரைச் சென்றான் (அடைந்தான்) என இரண்டாம் வேற்றுமைக்குரிய பொருளினைத் தந்து (அடையப் படுபொருள்) தனக்குரிய பொருள் எதனையுந் தராமையால் இஃது உருபுமயக்கமாகும். ('கு' வை வேற்றுமையுருபாகவன்றிச் சாரியையாகவும் கொள்வர்)

(ii) காலத்தினாற் செய்த உதவி : இங்கு மூன்றாம் வேற்றுமை 'ஆல்' உருபு, கருவி, கருத்தா, உடனிகழ்ச்சியாகிய தனக்குரிய பொருள் எதனையுந் தராது காலத்திற் செய்த உதவி என்னும் ஏழாம்வேற்றுமை இடப்பொருள் தந்து நின்றமையால் இஃது உருபு மயக்கம்.

## பெயர்கள் வேற்றுமையுருபை ஏற்கும்போது அடையும் மாற்றங்கள்

(i) தன்மைப் பெயர்களாகிய யான், யாம், நான், நாம், யாங்கள், நாங்கள் என்பன முறையே என், எம், எங்கள், நங்கள் என மாற்றமடையும். (நங்கள் என்பது இக்கால வழக்கில் இல்லை.) இவ்வாறு மாற்றமடைந்தபின் என்னை, எம்மை, எங்களை, நங்களை என்றவாறு உருபேற்று நிற்கும்.

(ii) முன்னிலைப் பெயர்களாகிய நீ, நீர், நீங்கள் என்பன உன், உம், உங்கள் என மாற்றமடைந்து உருபேற்கும். நின் எனவும் மாறுவதுண்டு, அஃது இக்கால வழக்கில் இல்லை.

(iii) தான், தாம், தாங்கள் என்ற படர்க்கைப் பெயர்கள் முதல்குறுகித் தன், தம், தங்கள் எனமாறி உருபேற்கும்.



பெயர்கள் சாரியைகளை ஏற்றல் :

இவ்வாறு மாறிய பெயர்கள் உருபேற்கையிலே ஒலிப்பதற்கு வாய்ப்புக்கருதியும் ஒலிநயம் கருதியும் சாரியைகளைப் பெறுவது வழக்கம்.

உ-ம் : (i) தன் + அ + கு = தனக்கு - அகரச்சாரியை வந்தது. இவ்வாறே தமக்கு என்பதற்கும் வந்தது.

(ii) தங்கள் + உ + கு = தங்களுக்கு (தங்கட்கு எனவும் வரும்) என உகரச் சாரியை வந்தது.

அஃறிணைப் படர்க்கைப் பெயர்கள் : வேற்றுமையுருபு ஏற்குமிடங்களிலே 'இன்' சாரியை பெறும்.

(i) பறவையினை, பறவையினால், பறவையினது, பறவையின் கண். (நான்காம், வேற்றுமை இயல்பாக வரும். உ - ம் : பறவைக்கு. ஐந்தாம்வேற்றுமையில் 'இன்' உருபே வருவதால் மேலும் ஒரு சாரியை வேண்டப்படாது. விளிவேற்றுமை, திரிபுப் பெயராகும்.)

(ii) கிளியினை, கிளியினால், கிளியினது, கிளியிற்கு (இன், 'இற்' ஆயிற்று. இன்று 'கிளிக்கு' என்றே வழங்குவர் ) கிளியினது, கிளியின்கண் (கிளியினுக்கு என உகரச்சாரியையும் 'இன்' சாரியையுடன் ஒட்டிவரும்.)

(iii) ல், ள், ர், முதலாகிய இடையின மெய்களும், ன், ண் முதலாகிய மெல்லின மெய்களும் ஈறாக வருமிடங்களில் உகரச் சாரியை வரும்.

உ - ம் : கல்லுக்கு (இன்சாரியை வருதலும் உண்டு. உ - ம் : கல்லிற்கு)

முள்ளுக்கு, தேருக்கு இன்சாரியையும் வரலாம் உ - ம் ; தேரிற்கு

பொன்னுக்கு, மண்ணுக்கு ('இன்' சாரியையும் வரலாம் உ - ம் : பொன்னிற்கு, மண்ணிற்கு)

(iv) ஓரெழுத்தொருமொழியாகிய, ஆ, மா, கோ என்பன உருபேற்குமிடத்து 'இன்' சாரியையும் சிலவிடங்களில் 'ன்' சாரியையும் பெறும்.

உ - ம் :

ஆவினை, கோவினை, மாவினை (ஆவை, கோவை, மாவை)
ஆவினால், கோவினால், மாவினால் (ஆவால், கோவால், மாவால்)
ஆவிற்கு, கோவிற்கு, மாவிற்கு (ஆவுக்கு, கோவுக்கு, மாவுக்கு)
(ஆனுக்கு, ஆவுக்கு)

ஆவினது, கோவினது, மாவினது (ஆவது, கோவது, மாவது
(ஆனது) என்பன வழக்கிலில்லை)
ஆவின்கண், கோவின்கண், மாவின் கண்
(ஆன்கண்)

(v) சுட்டுப்பெயர்களான அது, இது, உது ஆகியவற்றோடும், எது, ஏது, யாது என்ற வினாப் பெயர்களோடும் அன் சாரியை வரும்.

| | | |
|---|---|---|
| அதனை | இதனை | உதனை |
| அதனால் | இதனால் | உதனால் |
| அதற்கு | இதற்கு | உதற்கு |

வினாப்பெயர்களில் 'எது' ஒன்றே 'அன்' உருபையும் 'இன்' னுருபையும் ஏற்கும். மற்றவை சிறுபான்மையே சாரியை ஏற்கும்.

உ - ம் : எதனை எதனால் எதற்கு
எதினை எதினால் எதிற்கு.

சுட்டுப்பெயர்களும், வினாப்பெயர்களும் சாரியை ஏற்காதும் வரும்.

உ - ம் : அதை, இதை, எதை.

இக்காலத்து வழக்கில் 'ஒடு' என்ற மூன்றாம்வேற்றுமை உருபேற்குமிடங்களிற் பகுதி இரட்டித்து அத்தோடு, இத்தோடு என்று வழங்குதலும் உண்டு. சொல்லுருபாகிய 'உடன்' வரும் போதும் இவ்வாறு அமையும்.

உ - ம் : அத்துடன், இத்துடன்.

(vi) 'ஐ' ஈற்றுச் சுட்டுப்பெயர்களும் பண்புப்பெயர்களும் 'அற்று'ச் சாரியை ஏற்கும்.

உ - ம் : அவற்றை, இவற்றை, கரியவற்றை இவைபோல்வன'

இப்பெயர்கள் நான்காவதன் உருபையும் ஏழாவதன் உருபையும் ஏற்கும்போது அற்று, இன் சாரியைகள் சேர்ந்து வரலும் உண்டு.

உ - ம் : அவற்றிற்கு, இவற்றிற்கு, கரியவற்றிற்கு
அவற்றின்கண், இவற்றின்கண், கரியவற்றின்கண்.

இக்காலத்தில் அற்றுச் சாரியையோடு உகரச்சாரியையும் வருவதே (நான்காம்வேற்றுமையில்) பெருவழக்கு.

உ - ம் : அவற்றுக்கு, இவற்றுக்கு, கரியவற்றுக்கு.

('கண்' உருபு படிப்படியாக வழக்கிழந்து வருகின்றது.)

(vii) பல, சில, சிறிய, பெரிய, அரிய முதலான அஃறிணைப் பன்மைப் பெயர்கள், யா என்னும் அஃறிணைப் பன்மை வினாப் பெயர் ஆகியன உருபேற்கையில் அற்றுச் சாரியை பெறும்.



உ - ம் : பலவற்றை, சிலவற்றை, சிறியவற்றை, பெரிய வற்றை, அரியவற்றை, யாவற்றை.

(நான்காம், ஏழாம்வேற்றுமைகள் உருபேற்கையில் இன் சாரியையும் அற்றுச்சாரியையோடு சேர்த்துக் கொள்ளும் என்பதைக் கவனிக்க உ - ம் : பலவற்றிற்கு, பலவற்றின் கண்.)

(viii) 'ம்' ஐ ஈறாக உடைய பெயர்கள் அத்துச் சாரியை பெற்றுப் பின் உருபேற்கும்.

மரத்தை, மரத்தால், மரத்திற்கு (மரத்துக்கு), மரத்தின், மரத்தினது(அத்து+இன் சிலவேளைகளில் மரத்தது எனவும் வரும்) மரத்தில் (மரத்துக்கண் அல்லது மரத்தின்கண்)

(ix) எல்லாம் என்னும் பெயர் ஈற்று 'ம்' கெட்டு அற்றுச் சாரியையோடு உருபேற்று ஈற்றில் 'உம்' என்னும் முற்றும்மை இடைச்சொல்லையும் பெற்றுவரும்.

உ - ம் : எல்லாவற்றையும், எல்லாவற்றாலும்.

இவை அஃறிணைப் பன்மைப்பெயர்கள், உயர்திணைப் பன்மைப் பெயர்கள், 'நம்'மூச் சாரியையும் உருபையடுத்து முற்றும்மை இடைச் சொல்லையும் பெற்றுவரும்.

உ - ம் : எல்லா நம்மையும், எல்லா நம்மாலும். (இன்று இவை வழக்கில் இல்லை; இவற்றுக்குப் பதிலாக 'ஆர்' என்ற பலர்பாற்படர்க்கை விகுதி பெற்று உருபேற்று ஈற்றிலே முற்றும்மை பெறும்.

உ - ம் : எல்லாரையும் எல்லாராலும் எல்லாரோடும்.

நான்காம் வேற்றுமை உருபேற்கமுன் உகரச்சாரியை பெறும்.

உ - ம் : எல்லாருக்கும். (எல்லார்க்கும் எனவும் வரும்)

ஏழாம்வேற்றுமை உருபேற்கமுன் இன்சாரியை பெறலும் உண்டு.

உ - ம் : எல்லாரின் கண்ணும்.

இக்காலத்தில் ஆர் விகுதிக்குப் பதிலாக 'ஓர்' என்று திரிந்த விகுதியை ஏற்றலும் உண்டு.

உ — ம் : எல்லோரையும், எல்லோராலும்.

இவை மூவிடத்தும் வருதலும் இன்றைய வழக்காகும்.

உ - ம் ;

| | முற்கால வழக்கு | இக்கால வழக்கு |
|---|---|---|
| i. | நாம் எல்லேமும் (ஏம்-தன்மைப் பன்மை) | நாம் எல்லாரும் (ஆர்-படர்க்கைப் பன்மை) |

ii. நீர் எல்லீரும் — நீங்கள் எல்லாரும்
(ஈர் முன்னிலைப் பன்மை) — (ஆர்-படர்க்கைப் பன்மை)

iii. அவர்கள் எல்லார் தாமும் — அவர்கள் எல்லாரும்
(அவர்கள் எல்லாம் எனவும் இக்காலத்தில் வழங்கும்)
(தாம்-படர்க்கைப் பன்மை) (ஆர்-படர்க்கைப் பன்மை)

எல்லார் தம்மையும், எல்லீர் நும்மையும் என்று படர்க்கைக்குத் தம்முச் சாரியையும் முன்னிலைக்கு நும்முச் சாரியையும் வழங்குதல் இன்று இல்லை.

எல்லீர் என்ற முன்னிலைப் பதமும் எல்லேம் என்னும் தன்மைப் பதமும் இன்று வழக்கருகி வருகின்றன,

யான், நான், யாம், நாம், யாங்கள், நாங்கள், நீ, நீர், நீங்கள், தான், தாம் ஆகிய தன்மை முன்னிலை, படர்க்கைப் பெயர்கள், உருபுகள் தொக்குவரும் தொகைநிலைத் தொடர்களில் அமையும் பொழுதும் என், எம், எங்கள், உன், உம், உங்கள், தன், தங்கள் எனத் திரிந்தே வரும்.

உ - ம் : என் வீடு, எம் வீடு, எங்கள் கை, உன் கை, உங்கள் கை, தன் கை, தங்கள் கை.

இவ்வாறு உருபேற்கையிலே திரியும் படர்க்கைப் பெயர்கள் 'இன்' சாரியை பெற்று வருதலும் உண்டு.

உ - ம் : நண்டின் கால், கொக்கின் சொண்டு.

இவையாவும் ஆறும் வேற்றுமையிலே அமைவதையும் அவதானிக்க.

நெடிற்றொடர்க் குற்றியலுகரப் பெயர்கள் சிலவும் உயிர்த் தொடர்க் குற்றியலுகரப் பெயர்கள் சிலவும் பகுதி இரட்டித்து 'இன்' சாரியை பெறாதும் பெற்றும் வரும்.

உ-ம்: நாட்டை (நாடு + ஐ), எருத்தை (எருது + ஐ). நாட்டினை (நாடு+ இன்+ஐ, எருத்தினை (எருது+இன்+ஐ)

நாட்டை நாட்டினை (நாடு+ஐ. நாடு+இன்+ஐ) எருத்தை எருத்தின் (எருது+ஐ,எருது +இன்+ஐ)

## வினை

வினைச்சொல் வேற்றுமையுருபினை ஏற்காது. காலத்தைக் காட்டுவதே இதன் இயல்பு.

வினை காலத்தை வெளிப்படையாகக் காட்டும் பொழுது தெரிநிலைவினை எனவும், காலத்தைக் குறிப்பாகக் காட்டும் பொழுது குறிப்பு வினை எனவும் வழங்கும்.

தெரிநிலை வினை பெரும்பாலும் வினையடியாகப் பிறக்கும்.

உ - ம் ; உண்டான், சென்றான், விட்டான். உண், செல், விடு என்பன வினையடிகள்.



அது சிறுபான்மை பெயர், இடை, உரி ஆகிய சொற்களினடியாகவும் பிறப்பதுண்டு.

(i) உ - ம் : சித்திரித்தான், கதைத்தான், மரத்தது (மரத்துப் போயிற்று )

இங்குச் சித்திரம், கதை, மரம் என்ற பெயர்களினடியாகத் தெரிநிலைவினை தோன்றியுள்ளது.

(ii) உ - ம் : மன்னியது, (நிலைபெற்றது) போன்றாள் - மன், போல் என்ற இடைச்சொற்களடியாகத் தெரிநிலை வினை பிறந்தது.

(iii) உ - ம் : அமர்ந்தது, மாண்டான் - [இங்கு 'அமர்' (விருப்பம்) என்னும் உரிச்சொல்லினடியாக அமர்ந்தது என்ற தெரிநிலை வினையும், மாண் என்ற உரிச்சொல்லினடியாக மாண்டான் (மாட்சிமையுற்றான்) என்ற தெரிநிலை வினையும் தோன்றின. அமர் - என்பது வினையடி என்று கொண்டால் இரு என்ற பொருளும், மாள் (மாண் அன்று) என்பது வினையடி என்று கொண்டால் இற (சா) என்ற பொருளும் தோன்றும்.]

குறிப்புவினை ஆறுவகைப் பெயர்களினடியாகவும் பிறக்கும், உ - ம் :

(i) செல்வன் — செல்வம் என்னும் பொருட் பெயரடியாய்த் தோன்றியது.

(ii) நிலத்தன் — நிலம் என்னும் இடப்பெயரடியாய்ப் பிறந்தது.

(iii) தையான் — தை என்னும் காலப் பெயரடியாய்ப் பிறந்தது.

(iv) கையன் — கை என்னும் சினைப் பெயரடியாய்ப் பிறந்தது.

(v) நல்லான் — நன்மை என்னும் பண்புப் பெயரடியாய்ப் பிறந்தது.

(vi) நடையான் — நடத்தல் என்னும் தொழிற்பெயரடியாய்ப் பிறந்தது.

மேற்கூறிய உதாரணங்களை நோக்கும் பொழுது வினைச் சொற்கள் வினையடியாக மட்டும் தோன்றுவன அல்ல என்னும் உண்மை புலனாகின்றது. எனவே வினைக்கு இன்றியமையாப் பண்பு காலங்காட்டுதல் என்றே கொள்ளல் வேண்டும்.

(குறிப்புவினை வடிவங்களை அவதானித்தால் அவற்றிற்கும் பெயருக்கும் வேறுபாடு இல்லை என்றே தோற்றும். மொழியியலார் குறிப்புவினையை வினை என்று கொள்வது பற்றி

வேறுபட்ட கருத்துடையர். அவர்கள் தமது கருத்துக்கு ஆதரவாகத் தொல்காப்பியர் 'குறிப்பு' என்று மட்டும் குறிப்பு வினையைக் குறிப்பதை எடுத்துக்காட்டுவர். (''வினை, குறிப்பு என்று வினையை வேறாகவும் குறிப்பை வேறாகவும் தொல்காப்பியர் குறித்தமையே வினைவேறு, குறிப்பு வேறு என்பதை உணர்த்தும்'' என்பர்.)

குறிப்புவினைகள் எழுவாயாய் அமையக் கூடிய பெயர்ச்சொற்கள் தாம். ஆயின், அவை பயனிலைகளாய் அமையும் பொழுது இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்னும் முக்காலங்களையும் குறிப்பாகக் காட்டவல்லன.

உ-ம்: கந்தன் பெருஞ் செல்வன்.

இங்குச் செல்வன் என்ற குறிப்புவினை செல்வத்தை உடையவனாய் இருந்தான், இருக்கிறான், இருப்பான் என்று முக்காலத்தையும் குறிப்பாகக் காட்டியது. இதனை விளங்கிக் கொள்ளப் பின்வரும் ஆங்கில வாக்கியங்கள் உதவும்.

உ-ம்: He was rich
He is rich
He will be rich.

ஆங்கிலத்திலே காலத்தை உணர்த்த வருகின்ற was (இருந்தான்), is (இருக்கிறான்), will be (இருப்பான்) என்னும் சொற்களைப் போலவே தமிழிலே பால்காட்டும் விகுதிபெற்ற பெயர்ச்சொற்கள் வாக்கிய இறுதிகளிற் பயனிலைகளாய் வந்து காலத்தைக் குறிப்பாகக் காட்டுகின்றன.

## வினைச்சொற்களின் உறுப்புகள்

பெயர்ச்சொற்கள் பற்றி விளக்குகையில் ஆங்காங்கே அவற்றின் உறுப்புக்களாய்ப் பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை என்னும் நான்கு உறுப்புக்களை எடுத்துக் காட்டினோம். இவற்றில் இரண்டோ (பகுதி + விகுதி) அன்றி அவற்றிற்கு மேற்பட்டவையோ உறுப்புக்களாய் அமையும் பெயர்ச்சொற்களைப் பகுபதம் என்ற பெயராற் குறிப்பிட்டது நினைவிருக்கலாம். உறுப்புக்களாகப்பகுக்கக் கூடியதே பகுபதம். உறுப்புக்களாகப் பகுப்பதால் எவ்வித பயனுமின்றி வெறும் எழுத்தாக மட்டும் நிற்கக் கூடியதே பகாப்பதம். (இவ்விரண்டும் உதாரணமூலம் விளக்கப்பட்டன.)



வினைப்பகுபதத்தில் இடம்பெறும் பகுபத உறுப்புக்களாவன.

i. பகுதி — (பொன்னன்) பொன் + அன் — பொன்.
ii. விகுதி — ( ,, ) ஷ வினையின் ஈற்றில் வந்துள்ள அன்.
iii. இடைநிலை — (உண்டான்) உண் + ட் + ஆன் — *'ட்'
iv. சாரியை — (உண்டனன்) உண் + ட் + அன் + அன் — விகுதிக்கு முன்னுள்ள அன்
v. சந்தி — (அடித்தனன்) அடி + த் + த் + அன் + அன் — அடி என்ற பகுதியை அடுத்து வந்தது.
vi. விகாரம் (விழுந்தனன்) விழு + த் + த்+ அன்+அன் - சந்தியாய் வந்த 'த்' 'ந்' ஆய் விகாரப்பட்டது.

## தெரிநிலைவினையும் குறிப்புவினையும் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் காட்டுவன

நன்னூலாரின் கருத்துப்படி வினைச்சொற்கள் யாவும் செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செய்பொருள் ஆகிய ஆறையும் தரல் வேண்டும்.

உ-ம்: வரைந்தான்.

இந்தவினைச் சொல்லிலே
1. செய்பவன் (கருத்தா) — ஓவியன்.
2. கருவி { முதற்கருவி-கடதாசி, துணி முதலியன; துணைக்கருவிகள்-முதுகோல், மை முதலியன }
3. நிலம் — வரைதற்கு வைக்கும் மேசை, பலகை, முதலானவை.
4. செயல் — வரைதல்
5. காலம் — இறந்தகாலம்
6, செய்பொருள் — ஓவியம்.

இச்சொல்லிலே செய்பவன், செயல், காலம் என்பன வெளிப்படையாகவும் கருவி, நிலம், செய்பொருள் என்பன குறிப்பாகவும் தோன்றும்.

உ-ம்: i. செய்பவன் — ஆன் (பால்காட்டும் விகுதி) - விகுதி
ii. செயல் — வரை (தல்) (வினையடி) - பகுதி
iii. காலம் — த் (இறந்தகாலம்) இடைநிலை

---

* ட், ற் என்னும் இறந்தகால இடைநிலைகள் 'த்' (இ; கா. இடைநிலை) இன்திரிபு என்பர் மொழியியலாளர்.

குறிப்பு வினைமுற்று வினையடியாகப் பிறவாது. எனவே செயல் (இருத்தல்) குறிப்பாகவே தோற்றும். காலம் வெளிப்பட்டுத் தோன்றக் காலம் காட்டும் இடைநிலை வேண்டும். இடைநிலையும் குறிப்புவினை முற்றில் இடம்பெறாது. எனவே பால்காட்டி வரும் விகுதிமட்டுமே இடம்பெறுவதாற் குறிப்புவினை முற்றிலே, செய்பவன் (கருத்தா) மட்டுமே வெளிப்படத் தோன்றும். மற்றவை குறிப்பாகவே தோன்றும்.

உ - ம் - ஊரன் — ஊர் + அன்.

## வினைச் சொல்லின் பாகுபாடு

வினைச்சொல் மூன்று பாகுபாடுகளைக் கொண்டது. அவை யாவன :

i. வினைமுற்று.
ii. பெயரெச்சம்
iii. வினையெச்சம்.

1. வினைமுற்று :

பகுதி, இடைநிலை முதலான உறுப்புக்களோடு பால்காட்டும் விகுதியும்பெற்று வாக்கியத்திலே பயனிலையாக வரும் சொல். இது வினையின் செயலை அல்லது இயல்பை முழுமையாகக் காட்ட வல்லது. இதனைத் (i) தெரிநிலை வினைமுற்று (ii) குறிப்பு வினைமுற்று என இரண்டாக வகுக்கலாம்.

(i) தெரிநிலை வினைமுற்று :

செய்பவன், செயல், காலம் ஆகியன வெளிப்படத் தோன்றி முற்றுப்பெற்று நிற்குஞ் சொல்.

உ - ம் : உண்டான்.

(ii) குறிப்புவினைமுற்று :

செய்பவன் மட்டும் வெளிப்பட்டு முற்றுப்பெற்று நிற்கும் சொல்.

உ - ம் : கரியன்.

2. பெயரெச்சம் :

பால்காட்டும் விகுதியைப் பெறாது தனக்குரிய விகுதியைப் பெற்று முற்றுப்பெறாத வினையாய்த் தன்னை முற்றுப்பெற வைத்தற்குப் பெயர்ச்சொல் ஒன்றினை அவாவி நிற்கும் வினைச்சொல்.

உ - ம் : உண்ட (கந்தன்) = உண் + ட் + அ.



3. வினையெச்சம் :

பால்காட்டும் விகுதியைப் பெறாது தனக்குரிய விகுதியைப் பெற்று முற்றுப்பெறாத வினையாய்த் தன்னை முற்றுப்பெற வைத்தற்கு வினையோடு தொடர்பான ஏதாவது ஒரு சொல்லினை அவாவி நிற்கும் வினைச்சொல்.

உ - ம் : உண்டு (வந்தான்) — உண் + ட் + உ.

தெரிநிலை வினைமுற்று :

தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூவிடங்களிலும் காலத்தை வெளிப்படையாகக் காட்டித் தொழில் முற்றுப் பெற்று நிற்கும் விகுதி ஏற்ற சொல்லாகிய தெரிநிலை வினைமுற்று, காலம் காட்டுவதற்குப் பெரும்பான்மை இடைநிலைகளையும் சிறுபான்மை விகுதிகள் பகுதிகள் ஆகியவற்றையும் பற்றுக் கோடாகக் கொள்ளும்.

(அ) காலம் காட்டும் இடைநிலைகள் :

இறந்தகால இடைநிலைகள் : த், ட், ற், இன், ன்.

| உ - ம் : | தன்மை | முன்னிலை | படர்க்கை |
|---|---|---|---|
| 'த்' | அடித்தேன்<br>அடித்தோம் | அடித்தாய்<br>அடித்தீர்<br>அடித்தீர்கள் | அடித்தான்<br>அடித்தாள்<br>அடித்தார்கள்<br>அடித்தது<br>அடித்தன. |
| 'ட்' | உண்டேன்<br>உண்டோம் | உண்டாய்<br>உண்டீர்<br>உண்டீர்கள் | உண்டான்<br>உண்டாள்<br>உண்டார்கள்<br>உண்டது<br>உண்டன. |
| 'ற்' | சென்றேன்<br>சென்றோம் | சென்றாய்<br>சென்றீர்<br>சென்றீர்கள் | சென்றான்<br>சென்றாள்<br>சென்றார்கள்<br>சென்றது<br>சென்றன. |
| *இன் | போயினேன்<br>போயினோம் | போயினாய்<br>போயினீர்<br>போயினீர்கள்.<br>(இதுவழக்கிலில்லை) | போயினான்<br>போயினாள்<br>போயினார்கள்<br>போயிற்று<br>போயின |

* 'இ' என்பதே இறந்தகாலம் காட்டும் இடைநிலை என்றும் 'இன்' அன்று என்றும் மொழியியலாளர் சான்றுகள் காட்டி நிறுவுவர்.

| | தன்மை | முன்னிலை | படர்க்கை |
|---|---|---|---|
| 'ன்' ('இன்' இடைநிலையின் 'இ' கெட்டு 'ன்' மட்டுமேநிற்பது) | போனேன்<br>போனோம் | போனாய்<br>போனீர்<br>போனீர்கள் | போனான்<br>போனாள்<br>போனார்கள்<br>போனது |

நிகழ்கால இடைநிலைகள் : ஆநின்று, கின்று, கிறு.

| | தன்மை | முன்னிலை | படர்க்கை |
|---|---|---|---|
| ஆநின்று | போகாநின்றேன்<br>போகாநின்றோம் | போகாநின்றாய்<br>போகாநின்றீர்<br>போகாநின்றீர்கள் | போகாநின்றான்<br>போகாநின்றாள்<br>போகாநின்றார்கள்<br>போகாநின்றது<br>போகாநின்றன |
| இன்று | போகின்றேன்<br>போகின்றோம் | போகின்றாய்<br>போகின்றீர்<br>போகின்றீர்கள் | போகின்றான்<br>போகின்றாள்<br>போகின்றார்கள்<br>போகின்றது<br>போகின்றன. |
| கிறு | போகிறேன்<br>போகிறோம் | போகிறாய்<br>போகிறீர்<br>போகிறீர்கள் | போகிறான்<br>போகிறாள்<br>போகிறார்கள்<br>போகின்றது<br>போகின்றன |

(இவற்றுள் 'ஆநின்று' என்ற இடைநிலை இன்று, உடன்பாட்டு நிகழ்காலத்தை (போகின்றேன்) உணர்த்துவதற்குப் பதில் எதிர்மறை இறந்தகாலத்தையே உணர்த்தும். 'போகா நின்றான்' முதலிய வினைமுற்று வடிவங்களை நோக்குக. 'போகா நின்றான்' என்பது தனிச்சொல்லன்று. அஃதொரு தொடர். போ + க் + ஆ எனப் பிரித்து 'ஆ' விகுதியை எதிர்மறையாகக் கொண்டு நின்றான் என்ற இறந்தகால வினைமுற்றுடன் கூட்டும்பொழுது போகாமல் நின்றான் என அது பொருள் தரும்.)

எதிர்கால இடைநிலைகள் : ப், வ்.

| | தன்மை | முன்னிலை | படர்க்கை |
|---|---|---|---|
| ப் | நடிப்பேன்<br>நடிப்போம் | நடிப்பாய்<br>நடிப்பீர்<br>நடிப்பீர்கள் | நடிப்பான்<br>நடிப்பாள்<br>நடிப்பார்கள்<br>நடிப்பது<br>நடிப்பன. |



[இக்காலத்தில் நடிப்பது, நடிப்பன ஆகிய வினைமுற்று வடிவங்கள் அருகியே காணப்படும். அஃறிணைப்படர்க்கை ஒன்றன்பாலுக்கும் பலவின்பாலுக்கும் நடிக்கும் என்பதே பொதுவான வினைமுற்று வடிவமாய் நின்று எதிர்காலத்தை உணர்த்தும். நடிக்கும் என்பதிலே பால்காட்டும் இடைநிலை இல்லை. நடி + (க்) + உம்.]

| | தன்மை | முன்னிலை | படர்க்கை |
|---|---|---|---|
| வ் | செல்வேன்<br>செல்வோம் | செல்வாய்<br>செல்வீர்<br>செல்வீர்கள் | செல்வான்<br>செல்வாள்<br>செல்வார்கள்<br>செல்வது<br>செல்வன |

[செல்வது, செல்வன ஆகியனவும் முன்னர்க் கூறியவாறு அருகியே வழங்கும். செல்லும் என்ற வடிவமே பெரும்பான்மை.

நடிப்பது, செல்வது 'து' விகுதி பெற்ற தொழிற்பெயராயும், நடிப்பன, செல்வன வினையாலணையும் பெயராயும் கொள்ளத் தக்கன.]

### (ஆ) காலம் காட்டும் விகுதிகள்.

இறந்தகாலம் காட்டும் விகுதிகள் : ஒருமை: து, டு, று.
பன்மை : தும், டும், றும்.

| | தன்மை | முன்னிலை | படர்க்கை | எண் |
|---|---|---|---|---|
| து | வந்து (வந்தேன்) | — | — | ஒருமை |
| தும் | வந்தும்(வந்தோம்) | — | — | பன்மை |
| டு | உண்டு(உண்டேன்) | — | — | ஒருமை |
| டும் | உண்டும்(உண்டோம்) | — | — | பன்மை |
| று | சென்று(சென்றேன்) | — | — | ஒருமை |
| றும் | சென்றும்(சென்றோம்) | — | — | பன்மை |

எதிர்காலம் காட்டும் விகுதிகள் : ஒருமை : கு, து, று.
பன்மை : கும், தும், றும்.

| | தன்மை | முன்னிலை | படர்க்கை | எண் |
|---|---|---|---|---|
| கு | உண்கு (உண்பேன்) | — | — | ஒருமை |
| கும் | உண்கும் (உண்போம்) | — | — | பன்மை |

| | தன்மை | முன்னிலை | படர்க்கை | எண் |
|---|---|---|---|---|
| து | வருது (வருவேன்) | — | — | ஒருமை |
| தும் | வருதும் (வருவோம்) | — | — | பன்மை |
| று | சேறு (செல்வேன்) | — | — | ஒருமை |
| றும் | சேறும் (செல்வோம்) | — | — | பன்மை |

(இவ்விகுதிகள் முற்காலத்திலே செய்யுள்களில் மட்டுமே இடம் பெற்றிருத்தல் வேண்டும். இன்று இவை வழக்கில் இல்லை.)

எதிர்காலம் காட்டும் முன்னிலை விகுதி :

'இ', உ - ம் : சேறி (செல்வாய்)

எதிர்காலங் காட்டும ஏவல்வினை விகுதிகள் :

(இவை முன்னிலையில் மட்டுமே வரும்.) ஆய், உம், ஈர், மின்.

உ - ம் : வாராய் (வருவாய்), செய்யும், வாரீர், நடமின்.

இவற்றுள் இறுதி மூன்றும் பன்மை; மின் விகுதி அருகியே வழங்கும்.

வியங்கோள் வினை விகுதிகள் :

இவை தன்மை முன்னிலை, படர்க்கை ஆகிய இடங்களில் எப்பொழுதும் எதிர்காலம் காட்டி நிற்கும். இவற்றிற்கு ஒருமை, பன்மை வேறுபாடில்லை.

விகுதிகள் : க, இய, இயர், அல்.

உ - ம் : வாழிய, வாழியர், எனல் (என்க). இய, இயர் அல் விகுதிகள் இன்று அருகியே வழங்கும்.

காலம் காட்டும் படர்க்கை வினைமுற்று விகுதிகள் :

ப, மார் — இவை பலர்பாலுக்கு உரியன.

'ப' இறப்பும் எதிர்வும் காட்டும்.

உ - ம் : என்ப (என்பர், என்றனர்)

'மார்' எதிர்காலம் காட்டும்.

உண்மார் (உண்பார்)

(இவை இன்று வழக்கில் இல்லை.)

காலம் காட்டும் பகுதிகள் : கு, டு, று.

வழக்கமான இடைநிலைகள், விகுதிகள் போலத் தாம் நிற்கும் வினைச் சொற்களில் நேரடியாக இடம் பெறாமல் விகாரப்



பட்டுக் காலங்காட்டும் சில பகுதிகள் உள்ளன. 'பகுதி இரட்டித்துக் காலம் காட்டல்' என இதனைக் கூறுவர். அஃதாவது பகுதியிலுள்ள முதலெழுத்துக்கும் ஈற்றெழுத்துக்குமிடையே ஈற்றெழுத்தின் முதலிலுள்ள வல்லொற்று இரட்டித்தலாம்.

| உ - ம் : | தன்மை | முன்னிலை | படர்க்கை |
|---|---|---|---|
| புகு | புக்கேன்<br>புக்கோம் | புக்காய்<br>புக்கீர்<br>புக்கீர்கள் | புக்கான்<br>புக்காள்<br>புக்கார்கள்<br>புக்கது<br>புக்கன |
| நடு | நட்டேன்<br>நட்டோம் | நட்டாய்<br>நட்டீர்<br>நட்டீர்கள் | நட்டான்<br>நட்டாள்<br>நட்டீர்கள்<br>நட்டது<br>நட்டன. |
| பெறு | பெற்றேன்<br>பெற்றோம் | பெற்றாய்<br>பெற்றீர்<br>பெற்றீர்கள் | பெற்றான்<br>பெற்றாள்<br>பெற்றார்கள்<br>பெற்றது<br>பெற்றன |

பகுதி இரட்டித்து இறந்த காலத்தை மட்டுமே காட்டும். நிகழ் காலம், எதிர்காலத்துக்கு அவ்வவற்றின் இடைநிலைகளே வந்து காலம் காட்டும்.

உ - ம் : புகுகிறேன் — கிறு — நி, காலம்

புகுவேன் — வ், — எ, காலம்

இவ்வாறே மற்றவையுமாம்.

## வினைமுற்றுக்களும் பால்காட்டும் விகுதிகளும்

பெயர், வினை என்ற இரு பகுப்புக்களையும் நோக்கும்பொழுது பெயரிலும் முதன்மையானது வினையே என்பதை நாம் உணரலாம்; பெயர் ஒரு பொருளின் அறிகுறி மட்டுமே. அதற்குத் திணை, பால், எண், இடம் என்பன வகுக்கப்பட்டுள்ளபோதும் அவ்வகுப்புக்களைத் திட்டவட்டமாகக் காட்டக்கூடிய விகுதிகளைப் பெயர் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் பெறுவதில்லை, எனவே பெயரின் திணை, பால் முதலியவற்றை உறுதி செய்வதற்கு அவை எழுவாயாயமைந்துள்ள வாக்கியங்களின் பயனிலைகளே உதவுகின்றன. பயனிலைகள் பெருமளவு வினைமுற்றுக்களே என்பதையும் நாம் அறிவோம்.

உதாரணமாகத் திருத்தொண்டர் பெரியபுராணத்திலே வரும் பின்வரும் பாடல் அடியினை நோக்குங்கள்.

''தெருட்கலைஞா னக்கன்றும் அரசுஞ் சென்று
செஞ்சடைவா னவர்கோயில் சேர்ந்தார் அன்றே'',
(திருநாவுக்கரசுநாயனர் புராணம் - 185)

இப்பாடலில் ஞானக்கன்று என்ற சொற்றொடரிலே வரும் கன்று என்ற பெயர் அஃறிணை ஒன்றன்பால் அரசு என்பதும் அவ்வாறே. ('குடிமை, ஆண்மை ... ......... என்ற தொல்காப்பியச் சூத்திரத்தில் 'அரசு' என்ற சொல்லும் 'உயர் திணைப் பொருள்மேல் நின்றாலும் அஃறிணை முடிவே கொள்ளும்' எனக் கூறப்பட்டுள்ளது. (தொல். சொல். 55) இருப்பினும் இவ்விரு பெயர்களும் சேர்ந்து உயர்திணைப் பலர்பாலையே குறித் தன என்பதை நாம் அறிந்துகொள்ளச் 'சேர்ந்தார்' என வரும் வினைமுற்றே உதவுகின்றது.

பிள்ளை வந்தான்.
பிள்ளை வந்தாள்.

இங்கும் பயனிலையே ஆண்பால், பெண்பால் வேறுபாடு காட்டுகின்றது. இக்காலத்தில் ஆண்பிள்ளை, பெண்பிள்ளை எனப் பாற்பாகுபாடு காட்டுவதுண்டு.

பறவை பறந்தது.
பறவை பறந்தன.

ஒன்றன்பால், பலவின்பால் வேறுபாடுகளை இவ்விரு வாக் கியங்களிலும் பயனிலையாகிய வினைமுற்றுக்களே காட்டுவதைக் காணலாம்.

எனவே பெயர்ச்சொல்லிலமைந்துள்ள பால்காட்டும் விகுதி களிலும் வினைமுற்றுக்களிலமைந்துள்ள பால்காட்டும் விகுதிகளே இன்றியமையாதவை என்பது புலனாகின்றது.

''இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய
ஈற்றில்நின்று இசைக்கும் பதினோ ரெழுத்தும்
தோற்றந்தாமே வினையொடு வருமே''
(தொல். சொல் 10)
(பதினோரெழுத்து - 11 விகுதிகள்)

## பால்காட்டும் வினைமுற்று விகுதிகள்

வினைமுற்றுக்களிலே படர்க்கை வினைமுற்றுக்களே பால் காட்டுவன. இவையே திணை வேறுபாடுகளையும் காட்டும்.



அ. தெரிநிலை வினைமுற்று விகுதிகள் :

உயர்திணை : அன், ஆன், அள், ஆள், அர், ஆர், ப, மார்.

உ - ம் : ஓடினன், ஓடினான், ஓடினள், ஓடினாள், ஓடினர், ஓடினார், நடப்ப, நடமார்.

ஆர் விகுதியோடு கள் விகுதியும் சேர்ந்து பலர் பாலைக் குறித்து நிற்கும்.

அஃறிணை : து, று, அ, ஆ.

உ - ம் : நடந்து, ஓடிற்று, நடந்தன, நடப்ப (அ. விகுதி) எ. காலம் நடவா (எதிர்மறை)

ஆ. குறிப்பு வினைமுற்று விகுதிகள் :

உயர்திணை : அன், ஆன், அள், ஆள், அர், ஆர்.

நல்லன், கரியான், நல்லள், கரியாள், நல்லர், கரியார்.

கள் விகுதி சேர்ந்து (ஆர் விகுதியோடு) பலர்பால் உணர்த்துவதும் உண்டு.

உ - ம்; கரியார்கள், நல்லவர்கள்.

அஃறிணை : து, று, டு, அ.

உ - ம் : எளிது, குழையிற்று (குழை என்ற ஆபரணத்தை உடையது), குறுந்தாட்டு (குறுகிய பாதங்களை உடையது), எளிய, குழைய, குறுந்தாளன,

## பால் வெளிப்படாது வரும் தன்மை, முன்னிலை வினைகளுக்கான விகுதிகள்.

இ. தெரிநிலை வினைமுற்று :

தன்மை : என், ஏன், அல், கு, டு, து, று, அம், ஆம், எம், ஏம், ஓம், கும், டும், தும், றும்,

உண்டனென், உண்டேன், உண்பல் (உண்பேன்), உண்கு (உண்பேன்), உண்டு (உண்டேன்), செய்து (செய்தேன்); சென்று (சென்றேன்), சென்றனம், செல்வாம், உண்டனெம், உண்டேம், உண்டோம், உண்கும், வருதும் (வருவோம்), சேறும் (செல் வோம்)

[ 'அன்' என்ற விகுதியும் தன்மை ஒருமைக்கு வரும். முற் காலச் செய்யுள்களில் இப்பிரயோகம் உண்டு. 'மாறி வருவன்' (சிலப்பதிகாரம்) இன்று இது பேச்சுவழக்கில் மட்டும் இடம் பெறுகிறது. உ - ம் : நான் வருவன். ]

முன்னிலை: ஐ, ஆய், இ, இர், ஈர்.
நடந்தனை, நடந்தாய், நடத்தி, நடந்தனிர், நடந்தீர், ஈர் உடன் கள் விகுதியைச் சேர்த்து நடந்தீர்கள் எனவும் ஆக்கலாம்.

ஈ. குறிப்பு வினைமுற்று:

தன்மை : என், ஏன், அம், ஆம், எம், ஏம், ஓம்.
கரியென், நல்லேன், நல்லம், கரியாம், கரியெம், கரியேம், கரியோம். ஏம் ஓம் உடன் கள் விகுதி சேர்த்துக் கரியேங்கள், கரியோங்கள் எனவும் ஆக்கலாம்.

முன்னிலை: ஐ, ஆய், இ, இர், ஈர்.
நல்லை, நல்லாய், பல்லி, கரியிர், கரியீர்.
கள் விகுதியைச் சேர்த்துக் கரியீர்கள் எனவும் ஆக்கலாம்.

சில சிறப்புத் தன்மைகள்

1. தன்மை முன்னிலை இடங்களுக்குத் திணை பொதுவாகும். இவை பால் காட்டா.
2. தன்மை விகுதியான 'அல்' மிகப் பழமையானது. அது அக்காலச் செய்யுள்களிலே பெருவழக்காயிருந்தது, இன்று வழக்கிழந்துவிட்டது.
3. என், கு, டு, து, று, எம், ஏம், கும், டும், தும், றும் ஆகிய தெ. வி. மு. தன்மை விகுதிகள் செய்யுள் வழக்குகளே. இன்று இவையும் வழக்கிழந்தன.
4. தெ. வி. மு. விகுதிகளிலே முன்னிலைக்குரிய இ, இர் வழக்கிழந்தன. ஈர் விகுதியுடன் கள் விகுதியைச் சேர்த்து வழங்குதலே இன்று பெருவழக்காகும்.
5. குறிப்பு வினைமுற்றுக்கும் இவ்வுண்மை பொருந்தும்.

## எதிர்மறை வினைமுற்று

செயல் நிகழ்வதைக் குறிப்பது உடன்பாட்டு வினைமுற்று.
செயல் நிகழாமையைக் குறிப்பது எதிர்மறை வினைமுற்று.

(அ) தெரிநிலை வினைமுற்று எதிர்மறைப் பொருள் தரல்:
இல், அல், ஆ என்னும் எதிர்மறை இடைநிலைகள்.



| | இ. காலம் | நி. காலம் | எதிர்காலம் |
|---|---|---|---|
| இல் — | நடந்திலன் | நடக்கின்றிலன் | நடக்கிலன் |
| அல் — | — | — | நடக்கலன் |
| ஆ — | நடவாதவன் | — | நடவான் |

[ இவ்வாறே தன்மை முன்னிலைக்குரிய விகுதிகளைப் (ஒருமை, பன்மை) பெற்று அவற்றிற்குரிய எதிர்மறை வினைமுற்றுக்கள் தோன்றும். உ - ம் : நடந்திலேன், நடந்திலாய் ]

(ஆ) குறிப்பு வினைமுற்று எதிர்மறைப் பொருள் தரல் :

(i) அல், இல் ஆகிய இடைநிலைகள் பால்காட்டும் விகுதிகள் பெற்றுக் குறிப்புவினைமுற்றுக்களிலே எதிர்மறைப்பொருள் தரும்.

உ - ம் : அலன், அல்லன், இலன், அலள், அல்லள், இலள், அலை, அல்லை, இலை (இல்லாமையை உடையாய்), அன்று (அல் + து = அன்று), அல்ல (அல் + அ = அல்ல) அலேன், அல்லேன், இலேன்.

அலன், இலன், அலள், இலள், அலை, இலை என்பன இடையில் நின்ற 'ல்' செய்யுளிலே கெடுதல் விகாரம் பெற்றுவந்தவையாம்.

## ஏவல் வினைமுற்று

முன்னிலையில் உள்ள ஒருவரையோ ஒன்றையோ (பிராணி) பலரையோ பலவற்றையோ இன்னது செய்யுமாறு கட்டளையிடும் வினைமுற்று. இவ்வினைமுற்று உடன்பாடாகவும், எதிர்மறையாகவும் வரும்.

உடன்பாட்டு ஏவல் வினைமுற்று :

ஏவல் வினைமுற்றுக்கள் அவை உடன்பாடாயினும் எதிர்மறையாயினும் பெரும்பாலும் இடைநிலைகள் பெறுமலே எதிர்காலத்தை உணர்த்துவதால் அவை தெரிநிலைவினைகளேயாம்.

i. விகுதிகள் :

ஒருமை — ஆய், இ.
புன்மை — ஈர், உம், மின், கள்.

உ - ம் : உண்ணாய், உண்ணுவாய், உண்ணுதி.
உண்ணீர், உண்ணும், உண்மின், உண்ணுங்கள்.
( உம் என்ற முன்னிலைப் பன்மை விகுதிமேல், கள் விகுதி ஏறிவந்த வடிவம்.)

ii. உண், தின், என்ற வினையடிகளே ஆய் முதலிய விகுதிகள் புணர்ந்துகெட்டு ஏவல் வினைமுற்றுக்களாகும்.

**எதிர்மறை ஏவல் வினைமுற்று :**

இன்னதைச் செய்யலாகாது என்று பணித்தல் எதிர்மறை ஏவல் வினைமுற்று எனப்படும்.

விகுதிகள் : ஏ, அல், ஏல், ஆல், அல் இடைநிலை பெற்றமின்)

உ - ம் : உண்ணுதே, உண்ணல், (உண்ணுதே) உண்ணேல், மருல் (மறுக்காதே), உண்ணன்மின்.

இவற்றுள் உண்ணல், உண்ணேல், மருல் என்பன ஒருமை, பன்மை இரண்டிற்கும் பொதுவானவை. இவை செய்யுள்களிலே படர்க்கையிடத்தாருக்கும் விதிக்கும் (ஏவும்) வினைமுற்றுக்களாய் வரும்.

## வியங்கோள் வினைமுற்று

வாழ்த்துதல், வைதல், வேண்டல், விதித்தல் என்ற நால்வகைப் பொருளிலும் வந்து, இருதிணை ஐம்பால் மூவிடத்திற்கும் பொதுவாக அமைந்து ஒருமை பன்மை வேறுபாடின்றி அமையும் வினைமுற்றே வியங்கோள் வினைமுற்று என வழங்கும். இது குறிப்பால் எதிர்காலம் காட்டும்.

(i) விகுதிகள் : க, இய, இயர், அ, அல்.

உ - ம் : வாழ்க, வாழிய, வாழியர், வாழ்க வர, எனல் (என்க) } வாழ்த்துதல்

('வாழிய' வின் ஈற்றுயிர் மெய்கெட்டு (ய) வருதலும் உண்டு.
உ - ம் : வாழி. இதுவே பெரும்பான்மை.

இக்காலத்திலே பால்காட்டும் விகுதியோடு கூடிய எதிர்காலம் காட்டும் தெரிநிலை வினைமுற்றினைத் தொடர்ந்து ஆகாரச் சாரியையும் 'க' விகுதியும் பெற்று வியங்கோள் வினைமுற்றூதல் உண்டு.

உ - ம் : வாழ்வானுக (வாழ்வாளாக), வாழ்வாராக.

சிலவேளைகளிற் 'கு' சாரியையும் விகுதிக்கு முன்னர்த் தோன்றும்.

அழைப்பாராகுக, செல்வாளாகுக (அழைக்குக, நடக்குக என்று பால்காட்டும் விகுதிபெருதும் வரும்)

தன்மை, முன்னிலை இடங்களிலும் அவற்றிற்குரிய விகுதி பெற்று அமைதலும் வழக்கு)

உ - ம் : செல்வோமாக, துதிப்போமாகுக.
செல்வீர்களாக, செல்வாயாகுக.)



ஏனைய மூன்று பொருள்களுக்கும் இது பொருந்தும்.

(ii) உ - ம் : அழிக, ஒழிக (இய, இயர், அ, அல் அருகியுள்ளன) } வைதல்
(iii) ஈக, அருள்க — வேண்டல்
(iv) செல்க. தருக — விதித்தல்

'அல்' உடன் ஆல் விகுதியும் வியங்கோள் வினைமுற்றிலே எதிர்மறைப் பொருளைத் தரும்.

(i) உ - ம் : (மகன்) எனல் (மக்கட்பதடி) எனல். (அல்)

(இவ்விரண்டனுள்ளும் முதலில் உள்ள 'எனல்' என்று சொல்லற்க என்றும் இரண்டாவதில் உள்ள 'எனல்' 'என்று சொல்க' என்றும் முறையே எதிர்மறைப் பொருளும், உடன்பாட்டுப் பொருளும் தந்தன.)

(ii) மரீஇயது ஒரால் — (வந்தடைந்ததை ஒதுக்கற்க)
'ஆல்' — எதிர்மறைப் பொருளில் வந்தது.

சில சந்தர்ப்பங்களிலே 'அல்' என்ற எதிர்மறை இடைநிலையைத் தொடர்ந்து 'க' என்ற விகுதியேற்றும் எதிர்மறை வியங்கோள் வினைமுற்று அமையும்.

உ - ம் ; மறவற்க, செல்லற்க.

நாவலர் 'நடக்கக் கடவன், நடக்கக் கடவள், நடக்கக் கடவர்' என்று படர்க்கையிலே பால்காட்டும் விகுதிபெற்றும் வியங்கோள் வினைமுற்று அமையும் என்பர். ('நடப்பானுக, நடப்பாளாக, நடப்பாராக' என்பவற்றையும் உதாரணமாகக் காட்டுவர் இதுபற்றிய விளக்கம் முன்னரே தரப்பட்டது.)

## ஏவல் வினைமுற்றுக்கும், வியங்கோள் வினைமுற்றுக்கும் ஒற்றுமை வேற்றுமைகள்

1. ஏவல் வினைமுற்று ஏவற் பொருளில் மட்டும் வரும். வியங்கோள் வினைமுற்று வாழ்த்துதல், வைதல், வேண்டல், விதித்தல் ஆகிய நால்வகைப் பொருளிலும் வரும்.

2. ஏவல் வினைமுற்று முன்னிலை இடத்தில் வரும். வியங்கோள் வினைமுற்று மூவிடத்துக்கும் பொதுவாக வரும்.

3 ஏவல்வினைமுற்று ஒருமை, பன்மை வேறுபாடுடையது. வியங்கோள் வினைமுற்று இந்த வேறுபாடற்றது.

4 ஏவல்வினைமுற்று முன்னிலையில் மட்டும் வருவதால் அதற்குப் பால், திணை வகுப்புக்கள் இயல்பாகவே இல்லை. வியங்கோள் வினைமுற்று இருதிணை, ஐம்பால், மூவிடத்துக்கும் பொதுவாக வரும்.

## 'செய்யும்' என்ற வினைமுற்று

படர்க்கையிடத்தில் வரும் ஐந்து பால்களுள்ளும் பலர்பால் தவிர்ந்த ஏனைய நான்கு பால்களுக்கும் பொதுவாய் வருவது 'செய்யும்' என்ற வாய்பாட்டு வினைமுற்றும்.

உ - ம் : அவன் வரும் அது வரும்
அவள் வரும் அவை வரும்.

இவ்வினைமுற்று நிகழ்காலமும் எதிர்காலமும் காட்டும்.

(வினைமுற்று, பால்காட்டும் விகுதிபெறாது வழங்கிய நிலையும் ஒருகாலத்தில் இருந்திருத்தல் வேண்டும். அக்காலத்தில் வழங்கிய வினைமுற்றுக்களுக்குச் சான்றாகக் கிடைக்கும் வினைமுற்று இது வாகலாம் )

## இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவாகவரும் குறிப்புவினை முற்றுக்கள்

வேறு, இல்லை, உண்டு என்னும் குறிப்புவினைமுற்றுக்களும், யார் என்னும் வினாக்குறிப்பு முற்றும் இருதிணை ஐம்பால் மூவிடங் களுக்கும் பொதுவானவையாய் வரும்.

உ - ம் : அவன் வேறு, அவள்வேறு, அவர்வேறு, அதுவேறு, அவை வேறு, நான் வேறு, நாம் வேறு, நாங்கள் வேறு, நீ வேறு, நீர்வேறு, நீங்கள்வேறு.

இவ்வாறே உண்டு, இல்லை, யார் என்பவற்றையும் மேற் குறித்த பெயர்களோடு தொடர்ந்து வழங்கலாம்.

(அன்று, அல்ல என்ற எதிர்மறைக் குறிப்பு வினைமுற்றுக்கள் முறையே அஃறிணை ஒருமைப் பெயரையும், அஃறிணைப் பன்மைப் பெயரையுங் கொள்பவை.

உ - ம் : அஃது அன்று, அவை அல்ல.

இவற்றுள் அல்ல என்பதை ஆண்பால், பெண்பால், பலர் பால் விகுதிகள் சேர்த்து முறையே அவன் அல்லன், அவள் அல்லள், அவர் அல்லர் என வழங்கும் வழக்கம் அருகி வருகின்றது. பதிலாக, அவன் அல்ல, அவள் அல்ல, அவர் அல்ல, நான் அல்ல (நான் அல்லேன்), நீ அல்ல (நீ அல்லை), நீர் அல்ல (நீர் அல்லீர்) எனப் பால்விகுதியும் இடவிகுதியும் சேர்க்காமல் வழங்குவதே பெருவழக்காயுள்ளது. எனவே பெரும்பான்மை வழக்கு நோக்கி 'அல்ல' என்ற வினைமுற்றையும் வேறு, இல்லை, உண்டு என்பவற் றோடு சேர்த்து இருதிணை, ஐம்பால், மூவிடத்திற்கும் பொதுவான வினைமுற்றாக வழங்குவது பொருத்தம் போலத் தெரிகின்றது.



## பெயரெச்சம்

பெயரெச்சமாவது பால்காட்டும் விகுதிபெறாமையால் முற்றுப் பெறாது நிற்கும் வினைச்சொல். இது தனக்கு முடிக்குஞ் சொல் லாகப் பெயர்ச்சொல்லை அவாவிநிற்கும். தெரிநிலை வினைப் பெய ரெச்சம், குறிப்புவினைப் பெயரெச்சம் என இஃது இருவகைப் படும்.

### தெரிநிலை வினைப் பெயரெச்சம் :

பால்காட்டும் விகுதிக்குப் பதிலாக அ, உம் என்னும் விகுதி களைப் பெற்று செய்த, செய்கின்ற, செய்யா நின்ற, செய்யும் என்னும் வாய்பாட்டு வடிவங்களை முறையே கொண்டு பெயரை இறுதியாக ஏற்கும் வினைச்சொல் பெயரெச்சமாம்.

உ - ம் : உண்ட மனிதன்.
உண்கின்ற பாத்திரம்.
உண்ணாநின்ற மனிதன்
உண்ணும் நாள்.

தெரிநிலை வினைமுற்றுக்களுக்குரிய காலங்காட்டும் இடை நிலைகள். இறந்தகாலம், நிகழ்காலம் என்பவற்றைக் காட்டும் தெரிநிலை வினைப்பெயரெச்சங்களுக்கும் பொருந்தும். எதிர்காலப் பெயரெச்சம் காலங்காட்டும் இடைநிலைபெறாது தானே காலங் காட்டும் 'உம்' என்ற விகுதியைப் பெற்று வரும் (செய் + உம்= செய்யும்)

### எதிர்மறைத் தெரிநிலைவினைப் பெயரெச்சம் :

இஃது எதிர்மறைக்குரிய 'ஆ' என்ற இடைநிலையோடு 'த்' என்ற எழுத்தையும் ஈற்றிலே பெற்று, அல், இல், என்னும் எதிர் மறை இடைநிலைகளோடு 'ஆ' காரச் சாரியை பெற்றும் எதிர் மறைப் பொருள் தந்து நிற்கும்.

உ - ம் : நடவாத மனிதன், செய்கலாத வேலை, உண்கி லாத உணவு.

சில சந்தர்ப்பங்களிலே 'தகர' எழுத்துப் பேற்றை இழந்தும் எதிர்மறைப்பொருள் அமைவதுண்டு.

உ - ம் : படியா (த) மாணவன்.

### எதிர்மறைக் குறிப்புவினைப் பெயரெச்சம் :

பெரும்பாலும் பண்புப்பெயர்களும், சினைப்பெயர்களும் 'அ' விகுதியோடு புணர்ந்து எதிர்மறைக் குறிப்புவினைப் பெயரெச்சங் குகாளம்.

உ-ம் : கரிய குயில், பெரிய யானை, முகத்த களிறு, படத்தபாம்பு

அல், இல் ஆகிய எதிர்மறை இடைநிலைகள் பகுதிகளாக அமைய அவற்றோடு ஆகாரச் சாரியையும் தகர எழுத்துப் பேறும் பெற்றும் எதிர்மறை, குறிப்புவினைப் பெயரெச்சங்கள் அமையலாம்.

உ-ம் : அல்லாத பிள்ளை, இல்லாத பணம்.

பெயரெச்சத்தின் ஈற்றிலுள்ள 'த' என்ற உயிர்மெய்யெழுத்து மறைந்தும் எதிர்மறைப் பொருள்தரும் பெயரெச்சங்கள் உள.

உ-ம் : அல்லாப்பிள்ளை, இல்லாப் பணம்.

பெயரெச்சங்கள் இருதிணை, ஐம்பால், மூவிடங்களுக்குமுரிய பெயர்கள் யாவற்றையும் தமக்கு முடிக்குஞ் சொற்களாகக் கொள்ளும்.

| தன்மை | முன்னிலை | படர்க்கை |
|---|---|---|
| உண்ட நான் | உண்ட நீ | உண்ட அவன் |
| உண்ட நாம் | உண்ட நீர் | உண்ட அவர்(கள்) |
| உண்ட நாங்கள் | உண்ட நீங்கள் | உண்ட அது |
| | | உண்ட அவை |

### வினையெச்சம்

வினையெச்சமாவது பால்காட்டும் விகுதி பெறாது தனக்குரிய விகுதிகள் பெற்று வினைசார்ந்த சொற்களைத் தனக்கு முடிக்கும் சொற்களாகப் பெற்று எஞ்சிநிற்கும் வினைச்சொல்லாம். இது தெரிநிலை வினையெச்சம், குறிப்புவினையெச்சம் என இரு பிரிவுகளாக வகுக்கப்படும்.

#### வினையெச்சங்களும் முடிக்குஞ் சொற்களும்

| (அ) தெரிநிலைவினையெச்சம் | முடிக்கும் சொல் உடன்பாடு - எ. மறை | முடிக்குஞ் சொல் விகற்பங்கள் |
|---|---|---|
| 1. கண்டு | நின்றேன் - நில்லேன் | தெரிநிலைவினைமுற்று |
| 2. ஓடி | வந்த - வராத | தெரிநிலைவினைப் பெயரெச்சம் |
| 3. படிக்க | வந்து - வராது | தெரிநிலைவினையெச்சம் |
| 4. நடிக்கவென | வந்தவன் - வராதவன் | தெரிநிலைவினை வினையாலணையும் பெயர். |
| 5. படிப்பான் | வருதல், வராமை | தொழிற் பெயர் |



| | | |
|---|---|---|
| 6. மூயன்று | சிரியன் | குறிப்புவினைமுற்று |
| 7. முயன்று | வல்ல | குறிப்புவினைப் பெயரெச்சம் |
| 8. படித்து | அன்றி | குறிப்புவினை வினையெச்சம் |
| 9. கற்று(ப்) | பெரியவன் | குறிப்புவினையாலணையும் பெயர் |
| 10. உழைத்து | மேன்மை | குறிப்புத் தொழிற்பெயர் |

| (அ) குறிப்புவினையெச்சம் | முடிக்குஞ்சொல் உடன்பாடு எ மறை | முடிக்குஞ்சொல் விகற்பங்கள் |
|---|---|---|
| 1. பயனின்றி (ச்) | செய்தான், செய்யான் | தெரிநிலைவினை முற்று |
| 2. அறமின்றி (ச்) | செய்த, செய்யாத | தெரிநிலைவினைப் பெயரெச்சம் |
| 3. முடிவின்றி (ச்) | செய்து, செய்யாது | தெரிநிலைவினையெச்சம் |
| 4. மேன்மையின்றி(ச்) | செய்தவன், செய்யாதவன் | தெரிநிலைவினையாலணையும்பெயர் |
| 5. நலமின்றி (க்) | கிடத்தல், கிடவாமை | தெரிநிலைவினைத் தொழிற்பெயர் |

அன்றி என்ற குறிப்பு வினையெச்சமும் எதிர்மறை குறிக்க வரும்;

| | | |
|---|---|---|
| (ஆ) அருளன்றி | உளன், இலன் | குறிப்புவினை முற்று |
| 2. அருளன்றி | உள்ள, இல்லாத | குறிப்புவினைப்பெயரெச்சம் |
| 3. அருளன்றி | — இல்லாது | குறிப்புவினையெச்சம் |
| 4. அருளன்றி | உள்ளவன், இல்லாதவன் | குறிப்புவினையாலணையும்பெயர் |
| 5. அருளன்றி | உண்மை, இன்மை | குறிப்புத் தொழிற்பெயர் |

#### தெரிநிலை வினையெச்சம் :

தெரிநிலை வினையெச்சம் காலத்தை வெளிப்படையாகக் காட்டும் இடைநிலை பெற்றும் தனக்குரிய விகுதிகள் பெற்றும் முடியும். முக்காலத்தையும் குறிக்கவரும் வினையெச்ச வாய்பாடுகள் மூன்று உள்ளன.

i. இறந்த காலங்காட்டும் வாய்பாடு — செய்து
ii. மூன்று காலங்களும் காட்டும் வாய்பாடு — செய
iii. எதிர்காலங் காட்டும் வாய்பாடு — செயின்

(i) செய்து என்னும் வாய்பாட்டுத் தெரிநிலைவினையெச்சம் பெறும் விகற்பங்கள் :

1. முதலெழுத்து மட்டும் வேறாகி மற்றைய இரண்டெழுத்துக்களும் அவ்வாறே நின்று வருவன

உ - ம்: எய்து, கொய்து, பெய்து.

2. ஈற்றுயிர் மெய்க்கு முன்வரும் ப், ந் ஆதல்,

உ - ம் : ஈந்து, போந்து.

3. 'ய்' உடன் 'ந்' வரல்,

உ - ம் : ஆய்ந்து, காய்ந்து, பாய்ந்து, சாய்ந்து, ஓய்ந்து, மாய்ந்து.

4. 'ய்' தவிர்ந்த வேறு ர், ழ் என்ற மெய்களுடன் வருவன, 'த்' மெய்பெறுதல்.

உ - ம் : ஆர்ந்து, ஆழ்ந்து, வாழ்ந்து, தேர்ந்து, போர்ந்து, வீழ்ந்து.

5. வார், ஆர், பேர் (பெயர்தல்), முதலாகிய வினையடிகள் ஈற்றுயிர் மெய்ம்முன்பு 'த்' பெறல்.

உ - ம் : வார்த்து, பேர்த்து, ஆர்த்து.

6. எழு, இரு, நட, விழு முதலான குறில்வினைகளிற்கும் ஈற்றுயிர் மெய்க்குமிடையே 'ந்' வரல்.

உ - ம் : எழுந்து, இருந்து, நடந்து, விழுந்து.

7. படு, கொடு, இழு, உடு முதலான குறில்வினைகள் ஈற்றுயிர் மெய்ம்முன்பு 'த்' பெறல்.

உ - ம் : படுத்து, கொடுத்து, இழுத்து, உடுத்து.

8. ஆடு, ஓடு, பாடு, கூடு, தேடு, ஏகு, ஆகு முதலாகிய நெடிற்றொடரின் ஈற்றுக் குற்றியலுகரம் இகரமாக மாறி இறந்தகாலத் தெரிநிலை வினையெச்சங்களாதல்.

உ - ம் : ஆடி, ஓடி, பாடி, கூடி, தேடி, ஏகி, ஆகி.

9. உயர், வியர், பெயர் முதலாகிய வினையடிகள் ஈற்றுயிர் மெய்ம் முன்பு 'த்' பெற்று, வினையெச்சங்களாதல்.

உ - ம் : உயர்த்து (உயர்த்தி எனவும் வரும்), வியர்த்து, பெயர்த்து (பெயர்ந்து) எனத் தன்வினையாகவும் வரும்.)

10. 'போ' 'ஆ' என்ற வினையடிகள் 'ய்' என்ற மெய் பெற்று இறந்தகாலத் தெரிநிலை வினையெச்சமாதல்.

உ - ம் : போய், ஆய்

11. நட, இரு, விழு, கட, உடு முதலான வினையடிகள் ஈற்று மெய்யிலுள்ள குற்றியலுகரம் இகரமாக மாறி இடையிலே 'த்' பெறல்.



உ - ம் : நடத்தி, இருத்தி, விழுத்தி, கடத்தி, உடுத்தி.

(இவை பிறவினைகள். தன்வினை, பிறவினை பற்றிப் பின்னர் விளக்கம் தரப்படும்.)

12. புகு, விடு, நடு, பெறு, நகு முதலிய வினையடிகள் பகுதி இரட்டித்துத் தெரிநிலைவினையெச்சமாதல்,

உ - ம் : புக்கு, விட்டு, நட்டு, பெற்று, நக்கு (நகைத்து).

13. நகை, பகை, உகை முதலான வினையடிகள் ஈற்றுயிர் மெய்க்கு முன்பு 'த்' பெறல்:

உ - ம் : நகைத்து, பகைத்து, உகைத்து (செலுத்தி).

14. தழுவு, மருவு, ஒருவு முதலான முற்றுகர ஈற்றுவினையடிகளில் முற்றியலுகரம் இகரமாய் மாறுவதும் உண்டு.

உ - ம் : தழுவி, மருவி, ஒருவி (நீங்கி).

செய்யுள்களில் இவை உயிரளபெடை பெற்று விகாரமடைதலும் உண்டு.

உ - ம் : தழீஇ, மரீஇ.

( இவை இக்கால வழக்கில் இல்லை.)

15. ஓங்கு, தேங்கு, ஏங்கு, வாங்கு என மென்றொடர்க்குற்றியலுகரம் பெற்ற தெரிநிலை வினையெச்சங்கள் குற்றிய லுகரம் இகரமாக மாற்றம்பெற இடமளிக்கும்.

உ-ம்: ஓங்கி, தேங்கி, ஏங்கி, வாங்கி.

இவை போல்வன வேறு விகற்பங்களும் வருமிடத்துக் கண்டு கொள்க.

செய்யுள்களிலே 'செய்பு' என்ற வாய்பாட்டு இறந்தகால வினையெச்சங்கள் பு, ஆ, ஊ என்ற விகுதிகளைப் பெறும் என உரைப்பர்.

உ - ம் : உண்ணுபு
உண்ணா (உண்டு)
உண்ணூ

II. 'செய' என்னும் எச்சம் :

(i) இது மூக்காலமும் காட்டும்.

உ - ம் : மழை பெய்யக் குளம் நிறைந்தது - இறந்தகாலம்.
சூரியன் உதிக்க வந்தான். - நிகழ்காலம்.
குளம் நிறைய மழை பெய்தது - எதிர்காலம்.

(ii) 'செய' என்னும் எச்சத்தை வாய்பாடாகக் கொண்டு வரும் வினையெச்சங்கள் பகுதி இரட்டித்து வரலும் உண்டு.

உ - ம் : உண்ண வந்தான், அடிக்க வந்தான்.

(மேலே தரப்பட்ட உதாரணங்களில் இறந்தகாலம், நிகழ் காலம் காட்டுவன இவ்வாறே அமைந்தன.)

(iii) என, என்னும் விகுதி பெற்றுச் 'செய' என்னும் வாய்பாட்டு வினையெச்சம் செய்யுளிலே இறந்தகாலம் காட்டும் இடங்களும் உள.

உ - ம்: மழை பெய்தெனப் புகழ் பெற்றது.

(iv) 'என' என்னும் எச்சம் 'கு' விகுதிபெற்று எதிர்காலம் காட்டும்.

உணற்கு வந்தான் - இது இன்று உண்ணுதற்கு வந்தான். உண்ணுவதற்கு வந்தான், உண்டற்கு வந்தான் என அமையும்.

(v) இய, இயர், வான், பான், பாக்கு என்னும் விகுதிகளைப் பெற்றுச் 'செய' என்னும் எச்சம் எதிர்காலம் காட்டும் வழக்கம் உண்டு. இவை செய்யுளிலேயே பயின்று வரும் என்பர். இவை இக்கால வழக்கில் இல்லை,

உ - ம்: உண்ணிய, உண்ணியர், உண்ணுவான், உண்பான், உண்பாக்கு — வந்தான்.

III. செயின் என்னும் எச்சம்:

இன், ஆல், கால், கடை, வழி, இடத்து, உம் என்னும் விகுதிகளைச் செயின் என்னும் வாய்பாட்டுத் தெரிநிலை வினைப் பெயரெச்சம் பெறறு எதிர் காலத்தைக் காட்டும்.

உ - ம்:

இன் — அவன் படிப்பின் மகிழ்வேன்.
ஆல் — அவன் வந்தால் மகிழ்வேன்.
கால் — நீ படித்தக்கால் வெற்றியடைவாய்.
கடை — உற்றக்கடை உதவுவது கல்வியே.
வழி — உற்றவழி உதவுவான் நண்பன்
இடத்து — உற்றவிடத்து உறுபொருள் கொடு.
உம் — படித்தலும் சிறப்பாய்.

இவற்றுள்ளே வந்தால், படித்தக்கால், உற்றக்கடை, உற்ற வழி, உற்றவிடத்து ஆகிய வினையெச்சங்கள் இறந்தகால இடை நிலை பெற்றபோதும் தொழில் நிகழவிருப்பதையே தமது விகுதி களாற் புலப்படுத்தி எதிர்காலம் காட்டின.

VI. எதிர்மறைத் தெரிநிலை வினையெச்சம்:

தொழில் நிகழாமையைப் புலப்படுத்தும் வினையெச்சம் எதிர் மறைத் தெரிநிலை வினையெச்சமாகும். இதற்கு, உ, மல், மே, மைக்கு, மலுக்கு (இக்காலப் பிரயோகம்,) கால், கடை, வழி, இடத்து என்பன விகுதிகளாய் அமையும்.



உ - ம்: உண்ணாது, உண்ணாமல், உண்ணாமே, உண்ணா மைக்கு, உண்ணாமலுக்கு, (இக்காலப்பிரயோகம்), உண்ணாக்கால், உண்ணாக்கடை, உண்ணா(த)வழி, உண்ணா(த) விடத்து.

இவற்றுள் 'உண்ணாமலுக்கு' வரையுள்ள வினையெச்சங்கள் முக்கால வினைசார் சொற்களையும் குறிப்பு வினைசார் சொற்களை யும் முடிக்கும் சொற்களாகப் பெறும். உண்ணாக்கால் தொடக்கம் உண்ணாவிடத்து வரையிலுள்ள நான்கும் எதிர்காலத்து வினைசார் சொற்களையும், குறிப்பு வினைசார் சொற்களையும் முடிக்கும் சொற் களாகப் பெறும்.

(v) எதிர்மறைக்குறிப்பு வினையெச்சங்கள் அல், இல் என்னும் எதிர்மறைகளைப் பகுதியாகக் கொண்டு றி, து, மல், மே, மை, ஆல், கால், கடை, வழி, இடத்து என்னும் விகுதிகளை ஏற்கும்.

உ - ம்: அன்றி, அல்லாது, அல்லாமல், அல்லாமே, அல்லாமை, அல்லால், அல்லாக்கால், அல்லாக்கடை, அல்லா(த) வழி, அல்லா(த) இடத்து. இவை முன்பு காட்டிய முடிக்கும் சொல் விகற்பங்கள் யாவற்றையும் தமக்கும் முடிக்கும் சொற் களாகக் கொள்ளும்.

## முற்றுவினை

வினைமுற்று, பெயரை முடிக்கும் சொல்லாகக் கொள்ளுமாயின் அது முற்றுவினை எனப்படும்.

| | | |
|---|---|---|
| உ - ம்: | உண்டான் | கந்தன் |
| | நல்லன் | கந்தன் |
| | வந்தது | கார் |

முற்றுவினை எச்சப்பொருள் தரல்:

வினைமுற்று எச்சம்போல நின்று எச்சங்கள் கொள்ளும் முடிக்கும் சொற்களைத் தனக்கும் முடிக்கும் சொற்களாகப் பெற்று எஞ்சி நிற்பதுண்டு.

உ - ம்: (i) கண்டனன் வணங்கினான் - கண்டனன் என்ற தெ. வி. முற்று. கண்டு எனத் தெரிநிலைவினை யெச்சப் பொருள் தந்து நின்றது.

(ii) உண்டான் கந்தன் உவந்தான் - உண்டான் என்ற தெரிநிலைவினைமுற்று உண்டு எனத் தெரிநிலைவினையெச்சப் பொருள் தந்தது.

(iii) காலினர் நினைப்போற்ற - காலினர் என்ற குறிப்பு வினைமுற்றுக் காலினராகி எனக்குறிப்பு வினையெச்சப் பொருள் தந்தது.

(iv) ஆற்றலான் ஆதவன் வர - ஆற்றலான் என்ற குறிப்பு வினைமுற்று ஆற்றலினனாகிய எனப் பெயரெச்சப் பொருள் தந்து ஆதவன் என்ற பெயர் கொண்டு முடிந்தது.

முற்றுவினை எச்சப்பொருள் தருவது பெரும்பாலும் செய்யுள்களிலேயே.

## செயப்படுபொருள் குன்றிய வினையும் செயப்படுபொருள் குன்றாத வினையும்

(i) செயப்படுபொருள் குன்றிய வினை :

நட, போ, வா, எழு, இரு, செல், படு முதலான சில வினையடிகள் செயப்படுபொருள் கொள்ளாத வினைமுற்றுக்களாய் அமையும்.

| | | |
|---|---|---|
| | | செயப்படுபொருள் |
| உ - ம் : | நடந்தான் — எதை நடந்தான் ? | குன்றியது |
| | விடை இல்லை | |

ஆகவே, செயப்படுபொருள் இல்லை.

போனான், வந்தான், எழுந்தான், இருந்தான், சென்றான், படுத்தான் ஆகியனவும் இவ்வாறே பகுத்து நோக்கினால் செயப்படுபொருள் குன்றியனவாகவே காணப்படும். எனவே இவற்றைச் செயப்படுபொருள் குன்றிய வினை என்பர்.

(ii) செயப்படுபொருள் குன்றாத வினை :

அடி, உடை, படி, பாடு, எடு, கொடு, தா, விடு முதலாக வரும் வினையடிகளைக்கொண்டு தோன்றும் வினைமுற்றுக்கள் செயப்படுபொருள் குன்றாத வினைகளாகும்.

| | | |
|---|---|---|
| | | செயப்படுபொருள் |
| உ - ம் : | அடித்தான் — எதை அடித்தான் ? | |
| | மாட்டை | குன்றவில்லை |

ஆகவே, செயப்படுபொருள் உண்டு.

உடைத்தான், படித்தான், பாடினான், எடுத்தான், கொடுத்தான், விடுத்தான் ஆகியனவும் பிறவும் பகுத்து நோக்கும் பொழுது செயப்படுபொருளை வருவிக்கக்கூடியனவாயிருப்பதால் இவற்றைச் செயப்படுபொருள் குன்றாத வினை என்பர்.



## தன்வினையும் பிறவினையும்

(i) தன்வினை :

எழுவாய் அமையும் பெயருக்குரியவரோ உரியதோ செயலுக்கு வினைமுதலாய் (கருத்தாவாய்) அமைவது தன்வினையாம்.

உ - ம் : இராமன் ஓடினான்.
கந்தன் வீட்டைக் கட்டினான்.

(ii) பிறவினை :

எழுவாய் அமையும்பொழுது பெயருக்குரியவரோ உரியதோ செயலைச் செய்யாது செயலுக்குரிய வினைமுதல் பிறர் ஒருவரையோ ஒன்றையோ சுட்டிநிற்கும் வினை பிறவினையாம்.

தன்வினை, பிறவினையாய் ஆக்கப்படும் வகை :

(1) வி, பி விப்பி முதலாகிய விகுதிகளைச் சேர்த்துத் தன்வினை கொள்ளும் முற்றுக்களைப் பிறவினைகொள்ளும் முற்றுக்களாக்கலாம்.

| உ - ம் : தன்வினை | | பிறவினை |
|---|---|---|
| செய்தான் | — | செய்வித்தான் |
| நடந்தான் | — | நடப்பித்தான் |
| ஓடினான் | — | ஓட்டுவிப்பித்தான். |

(2) இவற்றுள் வி, பி, இரண்டும் ஒருவர் மற்றொருவரைக் கொண்டு செய்வித்தலையும், விப்பி மூன்றாமவரை அல்லது குழுவினரைக் கொண்டு செய்விப்பித்தலையும் குறித்து வந்தன.

உ - ம் : மேசன் கூலியை வேலை செய்வித்தான்.
அரசன் தச்சனைக் கொண்டு கோயிலைக் கட்டுவிப்பித்தான்.

(3) தன்வினை முற்றில் விகாரப்பட்ட காலங்காட்டும் இடைநிலை விகாரப்படாமல் அவ்வாறே வருமாயினும் பிறவினை உண்டாகும்.

| உ - ம் : தன்வினை | | பிறவினை |
|---|---|---|
| அழிந்தான் | — | அழித்தான் |
| தேய்ந்தான் | — | தேய்த்தான் |
| வருந்தினான் | — | வருத்தினான். |

(4) பகுதியின் இடைநின்ற ஒற்று இரட்டித்தும் தன்வினை பிறவினையாதல் உண்டு.

உ - ம் : தன்வினை — பிறவினை

ஓடினான் — ஓட்டினான்
ஆடினான் — ஆட்டினான் (ஆடுவித்தான்)

(5) பகுதியாகிய வினையடி விகாரப்படாமற் காலம்காட்டும் இடைநிலை முதலியவற்றைப் பெற்றுவந்தும் பிறவினையாகும்.

உ - ம் : தன்வினை — பிறவினை

கெட்டான் — கெடுத்தான்
விட்டான் — விடுத்தான்

(6) பகுதியின் முதல் நீண்டு காலம்காட்டும் இடைநிலை வேறு பெற்றோவேறு பெறாமலோ பிறவினை அமையலாம்.

உ - ம் : தன்வினை — பிறவினை

நட்டான் — நாட்டினான் (ட், இன் ஆயிற்று)
நடுகின்றான் — நாட்டுகின்றான்.

ஆதிநீண்டு பகுதி இரட்டித்து இடைநிலை அவ்வாறே நின்று பிறவினையாயிற்று.

(7) இவற்றைவிடத் தன்வினைமுற்று எவ்விதமாற்றமும் பெறாது பிறவினைமுற்றாதலும் உண்டு.

உ - ம் : தன்வினை — பிறவினை

(உடல்) வெளுத்தான் — (துணியை) வெளுத்தான்

(8) முதனிலையாய் நிற்கும் வினையடிகள் ஏவற்பொருளிலே தன்வினையாகவும் பிறவினையாகவும் எவ்வித மாற்றமுமின்றி வருதலும் வழக்கம்.

உ - ம் : தன்வினை — பிறவினை

(நீ உடல்) வெளு — (நீ துணியை) வெளு
நீ கரை — (புளியைக்) கரை
நீ தேய் — (சந்தனத்தைத்) தேய்.

(8) பிறவினைக்குரிய விகுதி தொக்குத் தன்வினையாகவே நிற்குமிடங்களிலும் பிறவினைப்பொருள் தரும் வாய்ப்புக்களும் உள்ளன.

உ - ம் : கோடீசுவரன் கட்டிய வீடு

இங்குக் கட்டுவித்த என 'வி' விகுதி பெறவேண்டிய பிறவினைப் பெயரெச்சம் தன்வினைப் பெயரெச்சமாகவே நின்று விகுதி பெறாமலே பிறவினைப் பொருள் தந்தது.



## செய்வினையும் செயப்பாட்டுவினையும்

**செய்வினை :**

எழுவாய்க் கருத்தாவே செயலைப் புரிந்ததைக் கூறும் வினைமுற்றுச் செய்வினை எனப்படும்.

உ - ம் : கந்தன் மாட்டை அடித்தான்.
இராமன் இராவணனைக் கொன்றான்.

**செயப்பாட்டுவினை :**

எழுவாய்க் கருத்தா வருமிடத்திலே மூன்றாம் வேற்றுமைக் கருத்தா அமையச் செயப்படுபொருள் எழுவாயாகி அது பயனிலையாகப் பெறும் வினை செயப்பாட்டுவினை எனப்படும்.

உ - ம் : கந்தனால் மாடு அடிக்கப்பட்டது.
இராமனால் இராவணன் கொலையுண்டான்.

மேற்கூறிய வாக்கியங்களிலே செயப்பாட்டுவினையை உணர்த்த வினைமுற்றுக்களிலே படு, உண் என்னும் விகுதிகள் வந்தன. இவையே செயப்பாட்டு வினைக்குரிய விகுதிகளாகும்.

சிறுபான்மை செயப்பாட்டுவினை தனக்குரிய விகுதி பெறாமலே செயப்பாட்டு வினைக்குரிய பொருளைத் தரும் இடங்களும் உள்ளன.

உ - ம் : கட்டிய வீடு
கந்தன் என்பவன்

இங்கு முறையே கட்டப்பட்ட வீடு, கந்தன் எனப்பட்டவன் என்று செயப்பாட்டுவினைப் பொருள்கள் வந்துள்ளமை காணலாம்.

## துணைவினைமுற்று

இரண்டு வினைமுற்றுக்களிலே ஒன்று வினையெச்சமாகித் தொடர வேறொரு வினைமுற்று வாக்கிய இறுதியில் அமைவதே துணைவினைமுற்று எனப்படும். இவற்றிலே எச்சமாகும் வினைமுற்றே வினைப்பொருளைத் தர முடிந்து நிற்கும் வினைமுற்று அதற்குத் துணையாகின்றது. இவ்வாறு துணையாவது சில இடங்களிற் பொருட்பேற்றுக்கு உதவுவதாயும், சில இடங்களில் அவ்வாறு உதவாது வாளா நிற்பதாயும் காணப்படும். இவ்வகை வினைமுற்றுக்கள் துணைவினைமுற்றுக்கள் எனப்படும்.

உ - ம் : ஆண்டு வந்தான். எடுத்துக்கொண்டான்.
ஓடிவிட்டான்.

இவற்றில் முதலாவது வினைமுற்று ஆட்சி நிகழ்ந்ததைக் கூறுவதாய் உள்ளது. 'ஆண்டு' என்பது ஆளுகையைக் குறிக்க வந்தான் என்பது அந்தச் செயல் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருப்பதைக் காட்டுகிறது. எனவே இங்கு 'வந்தான்' என்ற துணை வினைமுற்றுப் பொருட்பேற்றுக்கு, உதவுவதாய் உள்ளது. (எடுத்துக் கொண்டானிலும் 'கொண்டான்' துணை வினை முன்னது போலவே பொருட்பேறளிக்கின்றது.

இரண்டாவது வினைமுற்றாகிய ஓடிவிட்டான் என்பதிலும் நிகழ்ந்த வினை ஓடுதலே. அந்தச் செயல் நிகழ்ந்து முடிந்துள்ளது என்பதை ஓடிவிட்டான் என்பது புலப்படுத்துவதாலே 'விட்டான்' என்ற துணைவினை இவ்விடத்தும் பொருட்பேறளிப்பதாகவே உள்ளது.

**வாளாநிற்கும் துணைவினைகள் :**

1. எழுந்திருந்தான்
2. எழுந்து இரு
3. படுத்திடுந்தான்
4. படுத்திரு

இங்கு எழுதல், படுத்தல் ஆகியனவே நிகழ்வதற்குரிய வினைகள். இருந்தான், இரு ஆகிய துணைவினைகள், எவ்வித பொருட்பேறுமின்றி வாளா வந்தன;

**துணைவினைப்பெயரெச்சங்கள் :**

துணைவினைகள் எச்சங்களாயும் அமையும். இவற்றின் பொருட்பேறு முன்னவற்றிற்குக் கூறியதுபோலவே அமையும்,

**துணைவினைப் பெயரெச்ச வினையெச்சங்கள் :**

உ - ம் : i. ஆண்டு வந்த, ஆண்டு வந்து
ii. எழுந்திருந்த, எழுந்திருந்து.

**வினையாலணையும் பெயர் :**

வினையின் முதன்மையான இயல்புகள் காலங்காட்டுதலும் வேற்றுமையுருபை ஏற்காமையுமாம். பெயரின் முதன்மையான இயல்புகள் வேற்றுமைப்பொருளையும் உருபையும் ஏற்றலும் பெரும்பாலும் காலங்காட்டாமையும் பயனிலை பெறுதலுமாம். ஆயின், சில வேளைகளிலே வினையின் தன்மையாகிய காலங்காட்டியும் பெயரைப் போல வேற்றுமைப் பொருள் பெற்றும் உரு பேற்றும் பயனிலை பெற்றும் வரும் சொற்கள் உள. அவை 'வினையாலணையும் பெயர்' என்று வழங்கும்.



உ - ம் : i. நடந்தோன் (நடந்தான் என்றவினைமுற்றின்திரிபு, — ஆன், ஒன் ஆயிற்று) விழுந்தான் (நடந்தவன், எனவும் வரும்)

இங்கு 'நடந்தோன்' காலங்காட்டுவதோடு எழுவாயாகி, விழுந்தான் என்ற பயனிலையைப் பெற்றுள்ளமையைக் காண்க. எனவே இது வினையாலணையும் பெயராகும். (இச்சொல் காலம் காட்டும் உறுப்பைப் பெற்று வெளிப்படையாகக் காலங் காட்டியமையால்) தெரிநிலை வினையாலணையும் பெயர். ஆயிற்று)

ii. கரியானைத் திருமாலெனக் கண்டேன்.

இங்குக் கரியான் என்ற குறிப்பு வினைமுற்றுக் குறிப்பாகக் காலம் காட்டுவதோடு இரண்டாம் வேற்றுமைக்குரிய ஐ உருபையும் ஏற்றுக் கண்டேன் என்ற பயனிலையைக் கொண்டமையால் இது குறிப்பு வினையாலணையும் பெயர்: (கரியான், கரியோன் எனவும், கரியவன் எனவும் திரிபடைந்து வரும்.)

**தொழிற் பெயருக்கும் வினையாலணையும் பெயருக்குமுள்ள ஒற்றுமை வேற்றுமைகள் :**

1. தொழிற்பெயர் சிறுபான்மை காலம் காட்டும். வினையாலணையும் பெயர் குறிப்பாகவோ வெளிப்படையாகவோ எப்பொழுதுங் காலம் காட்டும்.
2. தொழிற்பெயர் வினையடியாற் பிறக்கும் வினையாலணையும் பெயர், பெயர், வினை, இடை, உரி நான்கின் அடியாகவும் பிறக்கும்.
3. தொழிற்பெயர் தனக்குரிய விகுதிகளைப் பெறும்; வினையாலணையும் பெயர் பால்காட்டும் விகுதிகளைப் பெற்று வரும்.

இடை என்ற இத்தலைப்பில் இடைச்சொல் பற்றி விளக்கப்படும். இடைச்சொல்லாவது பெயர்ச்சொல் வினைச்சொல் ஆகியவற்றினை இடமாகக்கொண்டு அமைவது. அஃதாவது தனக்கென ஒரு பொருளுமின்றிப் பெயர்ச்சொல் வினைச்சொல் ஆகிய இரண்டினதும் உறுப்பாய் அமைந்து அவற்றின் பொருளை விரிவுபடுத்தும் பணியே இடைச்சொல்லுக்குரியதாகும். எனவே, இலக்கண ஆசிரியர்கள் பெயர், வினை ஆகிய இரண்டு சொற்களும் தாமாகவே பொருள் தருஞ் சிறப்புநோக்கி அவற்றிற்கு

முதன்மையளித்து. அவற்றின் பின்சார இடைச்சொல்லையும், இதனைத் தொடர்ந்து வரலிருக்கும் உரிச்சொல்லையும் வைத்தனர்.

(i) பகுபத உறுப்பிடைச்சொல் :

பகுபதங்களின் உறுப்புக்களாயுள்ள இடைநிலை, சாரியை, விகுதி ஆகியன இடைச்சொற்களின் பாற்படுவனவே.

(ii) உவம உருபிடைச்சொல் :

போல், புரை, ஒ, உறழ், மான், கடு, இயை, ஏய், நேர், நிகர், பொரு என்னும் உவம உருபுகள் இடைச்சொற்களின் பாற்படுவனவாம், இவை குறிப்புவினையெச்ச விகுதி பெற்றுப் போல, புரைய, ஒப்ப, உறழ, மான, கடுப்ப, இயைய, ஏய்ப்ப, நேர, நிகர, பொருவ எனக் குறிப்பு வினையெச்சங்களாகின்றன 'அ' என்னும் முதனிலை இடைச்சொல் 'ன்' சாரியையோடு சேர்ந்து தொடர்ந்து குறிப்புவினையெச்ச விகுதியும் பெற்று அன்ன, அனைய என்னும் குறிப்பு வினையெச்சங்களாகின்றன.

(iii) தத்தமக்குரிய பொருள் குறிக்கும் இடைச் சொற்கள் :

ஏ, ஓ, உம், என, என்று, மற்று, மன், கொன், அந்தில், மன்ற, அம்ம, ஆங்க, ஆர், தொறும், தோறும், இனி, வாளா, சும்மா, ஆவது ஆதல், ஆயினும், தான, அந்தோ, ஐயோ, ஆ ஆ, ஓஓ, ஓகோ, ஆகா, அடடா, அப்பாடா, அடடே, (ஓகோ தொடக்க முள்ளவை இக்காலப் பிரயோகங்கள்) என்பன தத்தமக்குரிய பொருள்தந்து நிற்கும் இடைச் சொற்களாம்.

ஏகார இடைச்சொல்

| பொருள் | விளக்கம் | உ - ம் |
|---|---|---|
| i. தேற்றம் | - முடிந்தமுடிபாகக்கூறுதல். | உண்டே மரணம். |
| ii. வினா | - வினாவாகக் கேட்டல். | நீயே அடித்தாய்? |
| iii. எண் | - ஒன்றற்கு மேற்பட்ட பொருள்களை எண்ணிக்கை முறையில் வரிசைப் படுத்தல் | வானமே, பூமியே, பாலமே என மூவுலகங்கள் உள. |
| iv. பிரிநிலை | - ஒருகூட்டத்தினின்றும் ஒருவரை அல்லது ஒன்றைப் பிரித்தல் | அவர்களுள் இவனே வீர |



| | | |
|---|---|---|
| v. எதிர்மறை | - வினாப்போல் அமைந்து எதிர் மறைப் பொருள் தரல். | நானே எடுத்தேன். (நான் எடுக்கவில்லை) |
| vi. இசைநிறை | - பாடலிலே இசையை நிறைத்து வருதல். பொருள் வேறு இல்லை. | ஏஏ! இவளொருத்தி பேடியோ……… |
| vii. ஈற்றசை | - பொருளின்றிப் பாடல் இறுதியில் வருவது | உன்பாதம் அடைக்கலமே. |

ஓகார இடைச் சொல்

| பொருள் | விளக்கம் | உ - ம் |
|---|---|---|
| i. ஒழியிசை | - சொன்னவற்றிற்கு அப்பால் வேறு சொற்கள் வரல். | படிக்கவோ வந்தாய் ? (படிப்பதற்கன்று, விளையாட வந்தாய் என வேறு சொற்கள் வந்தன.) |
| ii. வினா | - வினவுதல் | இலங்கையின் தலைநகரம் கண்டியோ, கொழும்போ. |
| iii. உயர்வுசிறப்பு | - உயர்வின் மிகுதியைப் புலப்படுத்தல் | ஓஒ சான்றோன். |
| iv. இழிவு சிறப்பு | - இழிவின் மிகுதியைப் புலப்படுத்துதல். | ஓஒ தீயன். |
| v. எதிர்மறை | - எதிர் மறையாகப் பொருள் தரல். | அவனோ திருடினான் ? (அவன் திருடவில்லை) |
| vi. தெரிநிலை | - இரு பொருள்களில் ஒன்று மின்மையைத் தெரிவித்துநிற்பது | அழகோ அதுவுமில்லை அறிவோ அதுவுமில்லை |
| vii. கழிவு | - நடைபெற்று முடிந்தமைக்கு இரங்கல் | ஓஒ உணராது கெட்டொழிந்தேன் |
| viii. பிரிநிலை | - கூறும் ஒருவரை அல்லது பொருளைப் பிரித்துக் காட்டுதல் | இவனோ பாடியவன் (கூட்டத்துள் இவனைப் பிரித்துச் சுட்டல்) |

## 'உம்' இடைச் சொல்

| பொருள் | விளக்கம் | உதாரணம் |
|---|---|---|
| i. எதிர்மறை | - முன்விளக்கப்பட்டது. | களவெடுப்பினும் பொய் சொல்லாதே (இங்குக் களவு எடுத்தலும் கூடாது என எதிர் மறைப்பொருள் தந்தது) |
| ii. உயர்வு சிறப்பு | ,, | கம்பனும் அறியாக் கற் பனை. (கம்பனின் உயர்வு இங்குக் குறிக்கப்பட்டது. |
| iii. இழிவு சிறப்பு | ,, | நாயும் உண்ணாச் சோறு (நாயின் இழிவு புலப் படுத்தப்பட்டது) |
| iv. ஐயம் | நடக்குமோ நடக் காதோ என்னும் துணிவற்ற நிலை. | நாளை வந்தாலும் வரு வேன் (வராமலும் இருக் கலாம் என்ற துணிபற்ற ஐயநிலை) |
| v. எச்சம் | கூறும் பொருளை விட வேறுபொரு ளையும் குறிப்பாற் கூறல் | ஆசிரியரும் வந்தார் (மாணவரும் வந்தன) (இறந்தது தழீஇய எச்சம்) மாணவரும் வரு வர். எதிரது தழீஇய எச்சவும்மை) |
| vi. முற்று | எப்பொருளும் எஞ் சாது முழுமையை யும் சுட்டிநிற்றல் | அனைவரும் வந்தனர் |
| vii. எண் | எண்ணுதற் கண் வருவது | சேரனும், சோழனும், பாண்டியனும் மூவேந் தர்கள் |
| viii. தெரிநிலை | முன் விளக்கப்பட் டது | வீடும் அன்று பாடசாலை யும் அன்று (இவையல் லாத பிற ஒன்றைத் தெரி வித்து நிற்றல்) |



| | | |
|---|---|---|
| ix. ஆக்கம் | ஒன்றைச் சொல்வ தால் அது பிறி தொன்றுமாயிற்று எனக் குறிப்பிடல். | தலையணையுமாயிற்று. (அதுவே புத்தகமுமா யிற்று என்பது குறிப் புப் பொருள்.) |

முற்றும்மை பற்றிய சிறப்பு விதி.

எதிர்மறை வினைமுற்று முற்றும்மை பெற்ற சொல்லைத் தொடருமாயின் முற்றும்மை எச்சவும்மையாகும்.

உ-ம்: எல்லாரும் வரவில்லை. (சிலர்தாம் வந்தனர் எனப் பொருள்தந்து எச்சவும்மையாயிற்று.)

### என, என்று இடைச்சொற்கள்

இவற்றுள் ஒன்று கையாளப்படுமிடத்தில் மற்றதும் கையா ளப்படும்.

| பொருள் | விளக்கம் | உதாரணம் |
|---|---|---|
| i. வினை | வினைமுற்றுப்பெறும் | இலங்கையின் வைரம் தரமானதென(என்று) உரைப்பர் (வினைபெற் றது. |
| ii. பெயர் | பெயரைப்பெறும் | நெப்போலியனென ஒரு மாவீரன் (என்று) |
| iii. எண் | முன் விளக்கப்பட் டது | வீடெனக் கடையெ னத் தோட்டமெனப் பலவும் அவனுக் குண்டு. |
| vi. பண்பு | பண்போடு இசைந்து வருதல் | வட்டமென அமைந்த மைதானம். |
| v. உவமை | உவம உருபாய் வரல் | புலியெனப் பாய்ந் தான். |

இவற்றோடு என்று, எனா, ஒடு என்பனவும் எண்ணுப்பொரு ளில் வரும் என்பர். இவை செய்யுளில் மட்டும் வரும். இக் கால வழக்கில் இல்லை. (தீயென்று, நீரென்று, தீயெனா, நீரெனா, தீயொடு, நீரொடு)

இவை உம்மை இடைச்சொல் பெறுது ஈற்றில் எண்ணுக் குரிய சொல்லில் மட்டும் உம்மை பெற்று வரலும் வழக்காம்.

உ-ம்: i. சாத்தன் கொற்றன் இருவரும் வந்தனர் — ('உம்' பெறவில்லை)

ii. சாத்தனே கொற்றனே இருவரும் வந்தனர். — 'உம்' பெறவில்லை.

iii. சாத்தனென்று கொற்றனென்று இருவரும் வந்தனர் — 'உம்' பெறவில்லை.

எண்ணிடைச் சொல்லாகிய 'உம்' பெறாது எண்ணுதல் நிகழுமாயின் அது செவ்வெண் எனப்படும்.

உ-ம் : இராமன் கந்தன் செல்வன் மூவரும் வந்தனர்.

கொல் என்னும் இடைச்சொல் :

இது செய்யுளுக்கே உரியது.

| | பொருள் | விளக்கம் | உதாரணம் |
|---|---|---|---|
| 1. | ஐயம் | முன் தரப்பட்டது | மனிதன்கொல், தேவன்கொல் |
| 2. | அசைநிலை | — | கற்றதனாலாய பயனென்கொல். |

'மற்று' இடைச்சொல்

இதுவும் செய்யுளுக்கே உரியது.

| | பொருள் | விளக்கம் | உதாரணம் |
|---|---|---|---|
| 1. | வினைமாற்று | சொல்லப்படும் வினைக்கு மாற்றாகக் குறிப்புப் பொருள் தந்துநிற்கும் வேறொருவினை. | 'மற்றறிவாம் நல்வினையை யாமிளையம் என்னாது' வெளிப்படைப் பொருள் :- நல்வினையை விரைந்தறிவோம் என்பது. குறிப்பாக உணர்த்தும் பொருள். நல்வினையை ஆர அமர (விரைவின்றி) அறிவோம். |
| 2. | பிறிது | சொல்லப்படும் பொருளுக்கு எதிர்மறையானதைக் குறிக்கப் பயன்படுவது. | 'மற்றுப்பற்று எனக்கு இன்றி நின்திருப் பாதமே மனம்பாவித்தேன்'. இங்கே மற்று என்பது இறைபற்றல்லாத உலகப்பற்றினைக் குறித்து நின்றது. |
| 3. | அசைநிலை | முன் விளக்கப்பட்டது | 'மற்றென்னை ஆள்க.' |



'மன்' இடைச்சொல்

இன்று வழக்கற்றது

| | பொருள் | விளக்கம் | உதாரணம் |
|---|---|---|---|
| 1. | ஒழியிசை | சொல்லப்பட்ட பொருளோடு தொடர்பாக எஞ்சிநிற்கும் சொற்களை வெளிப்படுத்தல். | 'அழகான பெண் மன்'-'என் உள்ளங்கவர்ந்தாள்' என்பது எஞ்சிய சொற்பொருள். |
| 2. | ஆக்கம் | முன் சிறப்பின்றியிருந்து இன்று சிறப்படைந்தது (ஆக்கம் பெற்றது என்பது ) | 'முன்பு பாலை மன்' இன்று பசுஞ் சோலையாயிற்று. |
| 3. | கழிவு | முன் தரப்பட்டது | 'எப்பொழுதும் எமக்கு ஆதரவு தரும் மன்'. 'குறித்த அவன் இல்லாமையால் ஆதரவு அற்றுப் போயிற்று. |
| 4. | மிகுதி | மிகுதியான எதிர்பார்ப்பு | இறைவன் எமக்கு அருளும் மன். மிகுதியும் அருள் தருவார் என்பது. |
| 5. | அசை நிலை | பாட்டின் இறுதியில் பொருள் சாராது வருவது. | அது மன் கொண்கன்தேரே |

(கொன், அந்தில், மன்ற, அம்ம, 'ஆங்க, ஆர் என்பன செய்யுட்களில் மட்டுமே வருவன. இவற்றின் முதன்மையின்மை கருதிப் பொருள் உதாரணம் தராது விடப்பட்டன.)

தொறும், தோறும் இடைச்சொற்கள்

| | பொருள் | விளக்கம் | உதாரணம் |
|---|---|---|---|
| 1. | இடப்பன்மை — காலப்பன்மை இவைபோல்வன. | குறித்த பொருளின் மிகுதி. | 1. இன்று ஊர் தொறும் (தோறும்) நூல் நிலையங்கள் உள்ளன. 2. காலந்தோறும் சுட்டிக் காட்டி வந்துள்ளோம். |
| 2. | தொழிற் பயில்வு | முயற்சியில் அதிகமாக ஈடுபடஈடுபட ஏற்படும் நற்பயன். | 'பயில்தொறும் நூல் நயம்' மிகும். |
| 3. | தனித்தனி | ஒவ்வொன்றையும் குறித்து வரல் | நாள்தோறும் (ஒவ்வொரு நாளும் எனப் பொருள் தரும்) படியுங்கள். |

மட்டும், மட்டு இடைச்சொற்கள் :

குறித்தவரையறைப் பொருள் தரும்.
விடுமுறை மட்டும் என்ன செய்வது ?

முதனிலை சுட்டும் மரியாதைப் பண்மை இடைச்சொற்கள் :

திரு, ஸ்ரீ, அடிகள் (இவை டாக்டர் ஆ. வேலுப்பிள்ளையின் தமிழ் வரலாற்றிலக்கணத்திற் கண்ட சில இடைச் சொற்கள்.)

'இனி' என்ற இடைச்சொல் :

காலஎல்லை குறித்தும் இடஎல்லை குறித்தும் வரும்.

உ - ம் ; 1. காலஎல்லை — இனி நாம் செய்வதென்ன ?
2. இடஎல்லை — இனி எமது இடம் வருகின்றது.

'முன்பு', 'பின்பு', 'முன்', 'பின்', இடைச்சொற்கள் :

காலம், இடம் குறித்து வருவன.

உ - ம் : காலம் — முன்பு நடந்தது, முன்பு வாழ்ந்தான்.
இடம் — முன்பு உள்ள பொருள். முன்பு இருந்தான்.

(இவைபோலவே முன், 'பின்'னுக்கும் அமைக்க)

'வாளா', 'சும்மா' இடைச்சொற்கள் :

செயலற்ற நிலையைக் குறிக்கும்.

உ - ம் : வாளா கிடக்கின்றான்.
சும்மா இருக்கின்றான்.

ஆவது, ஆதல், ஆயினும், தான் அல்லது இது அல்லது அது என்று விகற்பம் குறிக்கவரும்

1. தொழிலாவது கல்வியாவது முன்னேறினால் மட்டுமே வாழ்வு உண்டு.
2. கல்வியைத்தான் செல்வத்தைத்தான் பெறமுயலுங்கள்.
3. முதல் மூன்று வினாக்களுக்கு அல்லது மற்றைய இரண்டு வினாக்களுக்கு விடை தருக.

ஆயினும் ஆதல் என்பவற்றையும் இவ்வாறே உதாரணம் அமைத்து அறிக.

அந்தோ, அன்னோ, ஐயோ, அச்சோ .........

மேற்குறித்தவை யாவும் இரக்கப்பொருள் தரும். அடடா, அடடே, என்பன கழிவிரக்கப் பொருளையும், அப்பாடா நெடுங் காலப் பிரச்சனையின் அல்லது முயற்சியின் பின் பெறும் அமைதி,



ஓய்வு குறிக்கும் தேற்றப் பொருளிலும், ஓகோ என்பது ஏளனம், ஒப்புக்கொள்ளல், வியப்பு ஆகிய பொருள்களிலும், ஆகா, ஆ என்பன வியப்பு, இரக்கப் பொருள்களிலும் இக்காலத்தில் வழங்கி வருகின்றன.

(iv) குறிப்பின் வரும் இடைச்சொற்கள்

திடுதிடென, நெறுநெறென, கடகடென, அம்மென, இம்மென, கோவென முதலாக வரும் இடைச்சொற்கள் ஒலிக் குறிப்பைத் தந்து நிற்பன.

துண்ணென, துணுக்கென, துடுக்கென, பொருக்கென, விடுக்கென, நறுக்கென, சரேலென என்பவற்றில் துடுக்கென வரையுள்ளவை அச்சக் குறிப்புப் பொருளைத்தரும் இடைச் சொற்களாம். எஞ்சியவை விரைவுக் குறிப்பைத்தருவன. தண்ணென என்பது குளிர்ச்சியையும், விண்ணென என்பது நோவையும், கணகண என்பது வெப்பத்தையும், பகபக என்பது எரிவையும் இவ்வாறு பல்வேறு ஒலி இடைச் சொற்கள் தத்தமக்குரிய பொருளை தந்து நிற்பதைக் காணலாம். இவற்றிற்கு இவ்வளவு என்று வரையறை செய்வது எளிதன்று.

## உரி

உலகிலே இருவகைப் பொருள்கள் உள்ளன. உயிருள்ளவை ஒருவகை உயிரில்லாதவை இன்னொருவகை. இவ்விருவகைப் பொருள்களுக்கும் குணப்பண்பும் தொழிற்பண்பும் என இரு வகைப் பண்புகள் உள்ளன குணப்பண்பு பெயராயும் தொழிற் பண்பு வினையாயும் வடிவங்கொள்கின்றன. இவ்விரு பண்புகளையும் உணர்த்தவல்ல அடிச்சொல்லாக நின்று பொருள்தருவதே உரிச்சொல்லாகும்.

உரிச்சொல் இருவகைப்படும்.

i. ஒரு சொல் பலபொருள் தரும் உரிச்சொல்.
ii. பல சொல் ஒரு பொருள் தரும் உரிச்சொல்.

ii ஒருசொல் பலபொருள்தரும் உரிச்சொல் :

உ - ம்: கடி - காப்பு, கூர்மை, மணம் (வாசனை), விளக்கம், அச்சம், சிறப்பு, விரைவு, மிகுதி, புதுமைச், விலக்குதல், மங்கலம் உறைப்பு (உறைப்புச் சுவை)

கடிநகர், கடிவாள், கடிமலர், கடியொலி, கடிபேடி, கடிசான்றோன், கடி(டு)கதி, கடிபொருள், கடிகாட்சி, கடிகுற்றம், கடிமணம், கடிசுவை.

(ii) பல சொல் ஒரு பொருள் தரும் ஓர் உரிச்சொல் :

மிகுதி : சால, உறு, தவ, நனி, கழி, கூர்.

1 சாலச்சிறப்பு. (மிகச்சிறப்பு)
2. உறுபுனல். (அதிகநீர்)
3. தவமேன்மை (மிகமேன்மை)
. நனிபேதை. (பெருமடையன்)
5. கூர்துயர். (மிக்கதுயர்)
6. கழிபேருவகை (மிக்கபெருமகிழ்ச்சி)

சேனாவரையர் தொல்காப்பியச் சொல்லதிகார உரையில் உரிச்சொல்லிற்குத் தரும் விளக்கம் பின்வருவது :

''இசை, குறிப்பு, பண்பு என்னும் மூன்றடியாகப் பிறந்து பெயரிலும் வினையிலுமாகத் தத்தம் உருவம் தடுமாறி, ஒரு சொல் பல பொருளுக்கு உரியதாகியும் பல சொல் ஒரு பொருளுக்கு உரியதாகியும் வழக்கிலே கேட்போனாற் பயன்படுத்தப்படாதவற்றோடு பயன்படுத்தப்படுவனவற்றை இணைத்துப் பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லுமாகிய தமக்குரிய நிலைகளினிடத்து எச்சொல்லாயினும் வேறு வேறு பொருள் உணர்த்த வேண்டியது உரிச்சொல்லின் இயல்பாகும்.'' — (தொல். சொல். உயிரியல்- 1)

தொடக்கத்தில் எல்லாச் சொற்களும் உரிச்சொல்லளவில் நின்று பின் வளர்ச்சிபெற்றன என்றும் எல்லாச் சொற்களுக்கும் வேர்ச் சொற்களாய் இருந்தவையே உரிச்சொற்களென்றும் மொழியியலார் கருதுவர்.

## நான்குவகைச் சொற்கள்

தமிழ்மொழியில் வழங்கும் சொற்களின் பொதுப்பாகுபாடுகள் நான்கெனவும் அவை பெயர், வினை, இடை, உரி எனப் பெயர் பெறுமெனவும் முன்னர்க் கண்டோம். இவற்றைச் சிறப்பாகப் பேச்சிலோ எழுத்திலோ கையாள்கையில் இவை பரந்த அடிப்படையில் நான்கு பெரும் பிரிவுகளுள் அடக்கப்படும். அந்த நான்கு பிரிவுகளும் வருமாறு :

(i) இயற்சொல் (ii) திரிசொல்
(iii) வடசொல் (iv) திசைச்சொல்.



(i) இயற்சொல் :

ஒரு சொல் ஒரு பொருளையே குறித்துநின்று வழங்குமாயின் அஃது இயற்சொல் எனப்படும்.

உ-ம் : நிலம், நீர்.

(ii) திரிசொல் :

ஒரு சொல் ஒன்றுக்கு மேற்பட்ட பல பொருளைத் தருவதாய் இருப்பினும், பல சொற்கள் ஒரே பொருளுக்கு வழங்கப்படுவனவாய் இருப்பினும் அவை திரிசொல் என வழங்கும்.

(அ) ஒரு சொல் பல பொருள் தருவதற்கு உதாரணம் :

மா — விலங்கு, கருமை, குதிரை, ஒருவகை மரம்) பொடியாக்கப்பட்ட தானியம், இலக்குமி, வண்டு.

(ஆ) பல சொல் ஒரு பொருளுக்காதல் :

சூரியன் — கதிரோன், வெய்யோன், அருணன், பகலவன், இரவி, தினநாதன், தினகரன், பரிதி, சேயோன்,

இவை அரிதின் முயன்று பொருளறிய வேண்டியவையென்றும் செய்யுள்களுக்கே உரியவையென்றும் இலக்கண ஆசிரியர்கள் குறிப்பர்.

(iii) வடசொல் :

வடமொழியாகிய சம்ஸ்கிருதம் தமிழ்மொழியோடு மிகப் பண்டைக்காலத்திலிருந்தே தொடர்புகொண்டு வந்துள்ளது. சமயம், பண்பாடு, இலக்கியம் ஆகியவற்றின்மூலம் இத்தொடர்பு ஏற்பட்டது. இதனாலே அம்மொழியிலிருந்து தமிழுக்கு வந்து வழங்கும் சொற்கள் மிகப்பல. இவ்வாறு வந்தவற்றை இரு வகையாகப் பாகுபாடு செய்வர்.

(i) வடமொழிக்கும் தமிழ்மொழிக்கும் பொதுவான எழுத்துக்களால் அமைந்த வடசொற்கள். இவற்றைத் 'தற்சமம்' என்ற பெயரால் வழங்குவர்.

உ-ம் : கமலம், விமலம்.

(ii) வடமொழிக்குரிய சிறப்பெழுத்துக்கு மாற்றொலிகளாய்த் தமிழில் உள்ள எழுத்துக்களைக் கையாண்டும், தமிழிற்குரிய இலக்கண விதிகளுக்கு அமையும் வகையிலே சொற்களின் தொடக்கம், நடு, இறுதிகளிலே மாற்றங்கள் செய்தும் தமிழிற் கையாளப்படும் வடசொல் 'தற்பவம்' எனப்படும்.

உ-ம் : ஆணை, கண்ணன், இராமன், இடபம், மிருகம்.

(அ) வடமொழியின் சிறப்பெழுத்துக்கள் (ஸ, ஷ, ஹ .....) தமிழிலே வரும்பொழுது அவற்றிற்கு மாற்றுெலிகளாய்த் தமிழி லிருந்து கையாளப்படும் எழுத்துக்கள் இவையென எழுத்தியலிற் காட்டப்பட்டது. (பக். 16)

(ஆ) வடமொழியிலே வரும் சில எழுத்துக்கள் தமிழிலக் கண விதிப்படி மொழி முதலாய் வரமாட்டா. அவ்வேளை களிலே அவற்றின் தொடக்கத்திலே உகந்த தமிழ் எழுத்துக்கள் இடப்படும்.

| | வடசொல் | முன்னிடும் தமிழ் எழுத்து | தமிழ்வடிவம் |
|---|---|---|---|
| உ - ம் : | ராம | இ | இராமன் |
| | ரங்கம் | அ | அரங்கம் |
| | ரோமம் | உ | உரோமம் |
| | டாம்பீகம் | இ | இடாம்பீகம் |
| | யக்ஷ | இ | இயக்கன் |
| | லக்ஷ்மண | இ, உ | இலக்குமணன் |
| | லோக | உ | உலோகம் |

இக்காலத்தில் இவ்விதிகள் மீறப்படுவது பற்றி விளக்கம் எழுத்தியலிலே காட்டப்பட்டது. (பக். 13)

(iv) திசைச்சொல் :

தமிழ்மக்கள் தம்மைச் சுற்றியிருந்த பிறமொழி நாட்டவ ரிடமிருந்து பண்டுதொட்டுப் பல சொற்களைப் பெற்றுக் கை யாண்டு வந்துள்ளனர். தொடக்கத்தில் அவர்களின் தொடர்பு குறுகிய ஒரு வட்டத்தினுள்ளே அமைந்திருந்தபொழுது தாம் கையாண்ட மொழியினைச் செந்தமிழ் என்றும் சூழ்ந்திருந்த நாட்டில் வழங்கிய தமிழைக் கொடுந்தமிழென்றும் குறிப்பிட் டனர். கொடுந்தமிழ் நிலங்கள் (பிரதேசங்கள்) பன்னிரண்டு என்று தொல்காப்பியம் கூறும். இப்பிரதேசங்களிலிருந்து சிற் சில சொற்களைத் தமிழிலே எடுத்துக் கையாண்டபொழுது அவை திசைச் சொற்களெனப்பட்டன.

படிப்படியாகத் தமிழரின் தொடர்புநாடுகள் கடல்கடந்த வற்றையும் உள்ளடக்கவே நன்னூலார் காலத்திலே இலங்கை, (சிங்களம்) யாவா, சீனு முதலாய நாடுகளிலிருந்தும் திசைச் சொற்கள் சில தமிழிலே வந்து கலக்கலாயின. காலப்போக்கில் அராபியர், ஐரோப்பியர் முதலான பிறமொழியாளரோடு ஆட்சி,



வாணிகம், பண்பாடு, கல்வி என்பவற்றாலே தொடர்பு வளர்ந்த பொழுது திசைச்சொற்கள் எண்ணிறந்தனவாயின. இன்றுவரை தமிழில் வந்து கலந்துள்ள திசைச் சொற்களுக்குச் சான்றுகளாக இங்குச் சிலவற்றை (மிகச்சிலவற்றைக்) காட்டுவோம்.

| | திசைச்சொல் | பொருள் | நாடு அல்லது மொழி |
|---|---|---|---|
| 1. | பெற்றம் | பசு | தென்பாண்டிநாடு |
| 2. | தள்ளை | தாய் | குட்டநாடு |
| 3. | அச்சன் | தந்தை | குடநாடு |
| 4. | கிழார் | தோட்டம் | வேணுடு |
| 5. | கையர் | வஞ்சகர் | கற்காநாடு |
| 6. | செய் | வயல் | அருவாணுடு |
| 7. | அந்தோ | அவலக்குறிப்புச் சொல் | சிங்களம் (இலங்கை) |
| 8. | முருங்கை | ஒருவகைமரம் | ,, |
| 9. | கொக்கு | மாமரம் | துளுமொழி |
| 10. | பாண்டில் | எருது | தெலுங்கு |
| 11. | தளகர்த்தர் | படைத்தலைவர் (சேனுபதி) | ,, |
| 12. | ஏலம் | வாசனைச்சுவைப் பொருள் | போர்த்துக்கீசம் |
| 13. | சாவி | திறப்பு | ,, |
| 14. | ஜன்னல் | பலகணி | ,, |
| 15. | உலாந்தா | நிலஅளவையாளர் | ஒல்லாந்து |
| 16. | தோப்பு | தோட்டம் | ,, |
| 17. | பட்டாளம் | படை | பிரான்சு |
| 18. | குசினி | சமையலறை | ,, |
| 19. | சலாம் | வணக்கம் | இந்துஸ்தானி |
| 20. | சராசரி | பலவற்றின் கூட்டுத்தொகையைப் பிரித்த அளவு | ,, |
| 21. | லஞ்சம் | கையூட்டு | ,, |
| 22. | லாம்பு | கைவிளக்கு | ஆங்கிலம் |
| 23. | வோட்டு | வாக்குரிமைச்சீட்டு | ,, |
| 24. | சினிமா | திரைப்படம் | ,, |
| 25. | பொலிஸ் | பாடிகாவலர் | ,, |

# 3. சொற்றொடரியல்

எழுத்தியலிலே தமிழ்மொழியில் வழங்கும் எழுத்துக்கள் பற்றியும் சொல்லியலிலே எழுத்துத் தனித்தும் தொடர்ந்தும் பொருள்தந்து நிற்கும் சொற்கள் பற்றியும் விளக்கம் தரப்பட்டது. 'சொற்றொடரியல்' என்னும் இந்தப் பிரிவிலே ஒன்றோடு ஒன்று தொடர்ந்துவரும் சொற்றொடர்கள் பற்றியும் அவற்றுடைய அமைப்பு முறைமைகள் பற்றியும் விளக்கப்படும்.

## சொற்றொடரும் வாக்கியமும்

பின்வருவன ஒரே கருத்தினைப் புலப்படுத்தும் மூன்று வெவ்வேறு சொற்றொடர்கள்

1. யானை கொன்றது.
2. கொன்ற யானை.
3. கொல் யானை.

இவற்றுள் முதலாவது சொற்றொடர் ஒரு நிகழ்வினைக் கூறுகின்றது. அந்நிகழ்வினை இரு சொற்கள் ஒன்றையொன்று தொடர்வதன்மூலம் நாம் அறிகின்றோம். எனினும் எமக்கு இத் தொடரினை நோக்கும்பொழுது ஓர் ஐயம் உண்டாகின்றது

'யானை எவரை, அன்றி எதைக் கொன்றது?' என்பதே எமது ஐயம்.

'யானை பாகனைக் (புலியைக்) கொன்றது' என்று வேறொரு சொல்லும் அமைந்திருக்குமேயானால் எமக்கு ஐயம் எழ இடம் இல்லை. இதிலிருந்து எமக்கு ஓர் உண்மை புலனாகின்றது.

ஒன்றுக்கு மேற்பட்ட சொற்கள் தொடர்கையிலே கருத்தும் தொடர்ந்து சென்றாலும் சில இடங்களிலே கருத்து முழுமையடைய, மேலும் சொற்களை அவாவிநிற்கும் நிலை உள்ளது. சில இடங்களிலே இந்த அவாய்நிலை ஏற்படாமலே கருத்து முழுமை பெற்றுவிடுகின்றது. இவ்வகையிலே 'யானை கொன்றது' என்னும் சொற்றொடர் வேறு சொல்லையும், அவாவி நிற்கிறது. 'யானை பாகனைக் (புலியைக்) கொன்றது,என்னும் சொற்றொடர் அவ்வாறு அவாவவில்லை; முழுமையான ஒரு கருத்தினைத் தந்து நிற்கின்றது. ஆகவே, கருத்தை மேலும் அவாவி நிற்கும் சொற்றொடரினைச் 'சொற்றொடர்' என்ற பெயராலும், முழுமைக் கருத்தினைத் தருஞ் சொற்றொடரினை வாக்கியம் எனவும்



வழங்கலாம். (வாக்கியம் பற்றிய சில அடிப்படைகளை 'வாக்கியவியல்' என்ற பிரிவிற் காண்போம். சொற்றொடரியல் என்ற இப்பிரிவிற் பெரும்பாலும் இரு சொற்கள் தொடர்ந்தமையும் சொற்றொடர்கள் பற்றியே நோக்குவோம்.)

## மேலே காட்டிய மூவகைச் சொற்றொடர்களும் தம்முள் வேறுபடும் வகை

இனி 'யானை கொன்றது' என்ற சொற்றொடருக்கும் 'கொன்ற யானை' என்ற சொற்றொடருக்குமிடையே காணப்படும் வேறுபாடுபற்றிக் கவனிப்போம்.

யானையின் செயல்தான் இவ்விரு சொற்றொடர்களிலும் வந்துள்ளது. ஆனால், முன்னைய சொற்றொடரிலே அச்செயல் மட்டுமே கூறப்பட்டது. பின்னைய சொற்றொடரிலே அச்செயல் மேலும் ஒரு செயலினை அவாவி நிற்கின்றது

'கொன்ற யானை (மேலும்) என்ன செய்தது?'

என்ற ஐயம் எமக்கு உண்டாகின்றது அஃதாவது 'யானை கொன்றது' என்ற சொற்றொடர் ஒரு நிகழ்வின் முடிந்த நிலையினைக் காட்டக் கொன்றயானை நிகழ்வின் தொடர்ச்சியைக் காட்டுகின்றது. இவ்வகையிலே முன்னது சொற்றொடராயினும் ஒரு குறைவாக்கியமாக நிற்கப் பின்னது கருத்துக் குறைந்த சொற்றொடராய் நிற்கின்றது.

கொன்ற யானை என்ற சொற்றொடரோடு கொல்யானை என்ற சொற்றொடரை ஒப்பிடுகையிலே முன்னதிலும் பின்னது மேலும் குறைவுற்று நிற்றலைக் காணலாம். முன்னைய சொற்றொடர், ''கொல்லலாகியதொழில் எப்பொழுது நிகழ்ந்தது?,' எனத் தெளிவாக எடுத்துரைக்கப் பின்னைய சொற்றொடர் அதனை எமது ஊகிப்பிற்கு விட்டு நிற்கின்றது. முன்னதிலே காலம்வெளிப்படையாகப் புலப்படுகின்றது. பின்னதிலே காலம் குறிப்பாகப் புலப்படுகிறது

ஆகச் சொற்றொடர்களும் தம்முள்ளே இருவகை வேறுபாடுகளைக் கொண்டுள்ளன என்பது புலனாகின்றது. அவ்வேறுபாடுகளாவன :

(i) சில சொற்றொடர்கள் தமக்குரிய உறுப்புக்கள் யாவும் முழுமையாய் அமையத் தாம் தரவேண்டிய பொருளை வெளிப்படையாகக் காட்டுகின்றன.

உ-ம்: கொன்ற யானை

'கொன்ற' என்னும் தெரிநிலைவினைப் பெயரெச்சத்தில் எந்த உறுப்பும் ( சொல் + ற் + அ = பகுதி + இடைநிலை + விகுதி ) தொகவில்லை. யானை என்ற சொல்லும் அவ்வாறே.

(ii) சில சொற்றொடர்கள் தமக்குரிய உறுப்புக்களிற் சிலவற்றை இழந்தோ விகாரப்பட்டோ நின்று, ஊகிப்பு நிலையிலே நாம் தரவேண்டிய பொருளைக் குறிப்பாகக் காட்டுகின்றன.

உ - ம் : பொற்றாலி.

'பொன்னால் ஆகிய தாலி' என வரவேண்டிய சொற்றொடரிலே 'ஆல்' என்னும் மூன்றாம் வேற்றுமையுருபும், ஆகிய என்ற சொல்லும் மறைந்தன. 'பொன்' உடன் தொடர்ந்த சொல் (வருமொழி) தாலி. 'பொன்' இல் உள்ள 'ன்' மெல்லினம். 'தாலி' இல் உள்ள 'தா' வின் முதலெழுத்து 'த்' வல்லினம். மெல்லினமும் வல்லினமும் ஒன்றுடன் ஒன்று இணையா. எனவே இவற்றுள் வேறான 'ற்' 'ற + (ஆ)', இரு சொற்களிலும் முறையே 'ன்', 'த்' உக்கு மாற்றாய் வந்தது.

'பொற்றாலி' என்று விகாரப்பட்ட சொற்றொடர் உண்டான வரலாறு இதுதான். (விகாரம் — தோன்றல், திரிதல், கெடுதல் ஆகிய மூவகையான வேறுபடுநிலை. இது பற்றிப் பின்னர் விளக்கப்படும். )

தொகாநிலைத் தொடரை அதன் முதற் சொல்லின் இனப் பெயரோடு 'தொடர்' என்பதைச் சேர்த்தும், தொகைநிலைத் தொடரை முதற் சொல்லின் இனப்பெயரோடு 'தொகை' என்பதைச் சேர்த்தும் வழங்குவர்.

### 1. தொகாநிலைத்தொடர்

தொகாநிலைத்தொடர் ஒன்பது வகைப்படும். அவற்றின் பெயரும் உதாரணமும் விளக்கமும் கீழே தரப்படுகின்றன

| | பெயர் | உதாரணம் | விளக்கம் |
|---|---|---|---|
| 1. | எழுவாய்த்தொடர் | யானை கொன்றது. | எழுவாயாகிய 'யானை' என்ற பெயரைத் தொடர்ந்தது. |
| 2. | விளித்தொடர் | கந்தா வா. | 'கந்தா' என்ற விழியினைத் தொடர்ந்தது. |
| 3. | வேற்றுமைத்தொடர் | படத்தை வரைந்தான். | இரண்டாம் வேற்றுமைக் குரிய 'ஐ'யுருபேற்ற 'படத்தை' என்ற பெயரைத்தொடர்ந்து வந்தது. |



[ஆல், கு, இன், அது, கண் ஆகிய மற்றைய வேற்றுமையுருபுகள் அமைந்து வரும் சொற்றொடர்களும் வேற்றுமைத் தொடருள் அடங்கும். ]

| | பெயர் | உதாரணம் | விளக்கம் |
|---|---|---|---|
| 4. | வினைமுற்றுத் தொடர் | வருகின்றான் முருகன். | 'வருகின்றான்' என்ற தெரிநிலை வினைமுற்றைத் தொடர்ந்து வந்தது. |
| | | நல்லன் அவன். | 'நல்லன்' என்ற குறிப்பு வினைமுற்றைத் தொடர்ந்தது. |
| 5. | பெயரெச்சத் தொடர் | ஆடிய மகள். | 'ஆடிய' என்ற தெரிநிலை வினைப் பெயரெச்சத்தைத் தொடர்ந்தது. |
| | | அழகிய பெண். | 'அழகிய' என்ற குறிப்பு வினைப் பெயரெச்சத்தைத் தொடர்ந்தது. |
| 6 | வினையெச்சத் தொடர் | அடித்து நின்றான். | 'அடித்து' என்ற தெரிநிலை வினையெச்சத்தைத் தொடர்ந்தது. |
| | | இன்றி முடிந்தது. | 'இன்றி' என்னும் குறிப்பு வினையெச்சத்தைத் தொடர்ந்தது. |
| 7. | இடைச்சொற்றொடர் | இனிச் செய்வது. | 'இனி' என்ற இடைச் சொல்லைத் தொடர்ந்தது. |
| 8. | உரிச்சொற்றொடர் | நனி பேதை. | 'நனி' என்ற உரிச்சொல்லைத் தொடர்ந்தது. |
| 9. | அடுக்குத்தொடர் | பாம்பு பாம்பு. | 'பாம்பு' என்ற பெயர் தொடர்ந்து அடுக்கிவந்தது. |
| | | அடி அடி. | 'அடி' என்ற ஏவல்வினை தொடர்ந்து அடுக்கிவந்தது. |
| | | நன்று நன்று. | 'நன்று' என்ற குறிப்புவினை தொடர்ந்து அடுக்கிவந்தது. |

2. தொகைநிலைத்தொடர்.

இஃது ஆறு வகைப்படும். அவற்றின் பெயரும் உதாரணமும், விளக்கமும் வருமாறு :

| பெயர் | உதாரணம் | விளக்கம் |
| --- | --- | --- |
| 1. வேற்றுமைத்தொகை — | i. வீடு கட்டினன். | 'ஐ' வேற்றுமையுருபு தொக்கு வந்தது. *(2) (வீட்டைக் கட்டினன்.) |
| | ii. கை வேலை. | 'ஆல்' உருபும் செய்யும் என்னும் சொல்லும் தொக்கன. (3) (கையாற்செய்யும்வேலை) இவ்வாறு உருபோடு சொல்லும் தொக்கு வருவதை 'உருபும் பயனும் உடன் தொக்க தொகை' என்பர். |
| | iii. இராமன் தம்பி. | 'கு' வ்வுருபு தொக்கு வந்தது. (4) (இராமனுக்குத் தம்பி) |
| | iv. உயிர் நீங்கியவன். | 'இன்' உருபு தொக்கு வந்தது. (5) (உயிரில் நீங்கியவன்) |
| | v. என் புத்தகம். | 'அது' உருபு தொக்கது. (எனது புத்தகம்) (6) |
| | vi, மேற்குத் திசை. | 'கண்' உருபு தொக்கது. (7) (மேற்குக்கண் உள்ள திசை) |
| 2. வினைத்தொகை | — கொல்யானை. | காலங் காட்டும் ('ற்', 'கின்று', இடைநிலைகளும் 'உம்' விகுதியும்) உறுப்புக்கள் தொக்கன. (கொன்றயானை, கொல்கின்ற யானை, கொல்லும் யானை என இவற்றுள் ஒன்றாய் விரிக்கலாம்) |

* (2) - இரண்டாம் வேற்றுமையைக் குறிக்கும். ஏனைய எண்களையும் இவ்வாறே கொள்க.



| பெயர் | உதாரணம் | விளக்கம் |
| --- | --- | --- |
| 3. (அ) பண்புத்தொகை. | i. கருங்கடல். | 'மை' விகுதியும், 'ஆகிய' என்னும் உருபும் தொக்கன. கருமையாகிய கடல். |
| (ஆ) இருபெயரொட்டுப் பண்புத்தொகை. | ii. தமிழரினம். | தமிழராகிய இனம் என விரியும். இங்கு இனத்தின் முன் அடையாக ஒட்டி நின்று வேறினத்திலின்றும் பிரித்தபெயர் தமிழர் என்பதாகும். எனவே இஃது இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. |
| 4. உவமைத் தொகை | மலர் விழி. | 'போன்ற' என்ற உவம உருபு தொக்கது. (மலர்போன்ற விழி) |
| 5. உம்மைத் தொகை. | i கண்காது. | 'உம்' இடைச்சொல் மறைந்து வந்தது. (கண்ணும் காதும்) |
| | ii. இராமலக்குமணர். | ஷ (உயர்திணைப்பெயர்களிடையே 'உம்'மை இடைச்சொல் தொகும் இடத்தில் அவற்றின் இறுதியில் வந்த பால்காட்டும் விகுதி பலர்பாலாக விளங்குவதை நோக்குக. |
| 6. அன்மொழித் தொகை. | i. வெண்சட்டை. (சிரித்தான்) | வெண்மையாகிய சட்டை என்பது வெண்சட்டை எனத் தொக்கு அதற்குப் புறத்தே சிரித்தான் என்ற சொல்லும் தொக்கு வந்தது. |

## அன்மொழித்தொகை விளக்கம்

வேற்றுமைத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை உவமைத்தொகை, உம்மைத்தொகை என்பன தத்தம்புறத்தே வேறு சொல் தொக்கு நிற்கப் பெறுமானால் அவ்வாறு தொக்கு நிற்கும் சொற்றொடர் அன்மொழித்தொகை எனப்படும்.

உ - ம்:

i. **மணிமாலை** (பாடினன்) மணியைக்கோத்த மாலையைச் சூடிய பெண் என இரண்டாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

ii. பொன்முடி (சிரித்தான்) பொன்னாலாகிய முடியினை அணிந்தவன் என மூன்றும் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

iii. இலக்கிய விமர்சனம் (வெளியாயிற்று) இலக்கியத்திற்கு விமர்சனம் செய்யும் நூல் என நான்காம் வேற்றுமைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

iv. வடக்கெல்லை (தமிழர் வாழிடம்) வடக்கின் எல்லை யாகிய யாழ்ப்பாணம் என ஐந்தாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

v. தமிழரினம் (வாக்குரிமை இழந்தது) தமிழரது இனத்தைச் சேர்ந்த மக்கள் என ஆறும் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

vi. வயிற்றுவலி (வந்தான்) வயிற்றின்கண் வலியினை உடையவன் என ஏழாம் வேற்றுமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

vii. இடிசோறு (அழுதான்) இடித்து அளிக்கும் (பழித்துப்பேசி அளிக்கும்) உணவு உண்பவன் என வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

viii. அருந்திறல் (வென்றான்) அருமையாகிய திறலை உடைய வீரன் எனப் பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

ix. முல்லைநகை (சிரித்தாள்) முல்லைப்பூப்போன்ற சிரிப்பினை உடைய பெண் என உவமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

x. பூமாலை (வந்தாள்) பூவும் மாலையும் அணிந்தவள் வந்தாள் என உம்மைத் தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை.



## அன்மொழித்தொகை பற்றிய தவறான கருத்து

(அ) அன்மொழித்தொகையானது செய்யுள் வழக்கு மட்டுமே என்ற தவறான கருத்தொன்று நிலவுகின்றது. ஆனாற் பேச்சு வழக்கிலும் அவ்வப்போது அன்மொழித் தொகையை மக்கள் கையாள்வதுண்டு. ''நீ ஒரு செஞ்சட்டையா?'' என்று ஒருவனை வினவின் அது செஞ்சட்டையைப் பெரும்பாலும் தனது அடையாளமாக அணியும் பொதுவுடைமைவாதியைக் குறிக்கின்றது. எனவே ''செஞ்சட்டை'' என்பது பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. வாக்குக்கண் வந்தான், அந்த வெள்ளிமயிர் யார் ? என்று உரையாடலிற் கையாளப்படுவதுண்டு. இங்கு 'வாக்குக்கண்' என்பது வாக்குக்கண்ணை உடையான் (உடையாள்) எனவும், வெள்மயிர் என்பது வெள்ளிபோன்ற நரைத்த மயிரை உடையான் (உடையாள்) எனவும் முறையே இரண்டாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகையும், உவமைத் தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகையும் தோன்றல் காணலாம். எனவே தாழ்குழல், பொற்றொடி, தகரஞாழல், தேன்மொழி, மதிமுகம் முதலாகிய செய்யுட்கண் அமையும் அன்மொழித் தொகைகளை மட்டும் உதாரணங்காட்டி அவற்றை எழுத்துவழக்கோடு நிறுத்திக் கொள்வது இயைபுடையதன்று.

(ஆ) அன்மொழித் தொகை, விளித்துக் (அழைத்து) கூறும் பொழுதும், வினைமுற்றுக் கொடுத்து வாக்கியமாக்கும் பொழுதுமே தனக்குரிய இலக்கணம் உடையதாகும். தாழ்குழல், மதிமுகம், பொற்றொடி எனத் தனித்துக் கூறின் அவை முறையே வினைத்தொகை, உவமைத்தொகை, வேற்றுமைத் தொகையாகவே அமையும். இதனாலேயே மேலே தரப்பட்ட உதாரணங்களை முடிக்கும் வினைகளைப் பிறைவடிவினுள் அமைத்துக் காட்டினோம்.

## ஆகுபெயரும் அன்மொழித்தொகையும்

I. ஆகுபெயரும் அன்மொழித்தொகையும் குறிப்பாற் பொருளுணர்த்தும் வகையிலே ஒற்றுமையுடையன. எனினும் இரண்டற்கும் சிறுச்சிறு வேற்றுமைகளும் உள்ளன. அவை வருமாறு:

ஆகுபெயர்: பெயராற்றலாலே தொடர்புடைய பொருளை உணர்த்துவதும் தொன்றுதொட்டு வருவதுமாகும்.

அன்மொழித்தொகை: தொகையாற்றலாலே தொடர்புடைய பொருளை உணர்த்துவதும் புதிது புதிதாக ஆக்கப்படுவதுமாகும்.

II. ஆகுபெயர்:- அடைபடுத்த ஆகுபெயராகத் தொகைகள் கையாளப்படுதலும் உண்டு.

உ-ம்: வெற்றிலை நட்டான். இங்கு வெறுமை, தனித்து அடையாக நிற்க இலை என்ற பெயரே ஆகுபெயராய் அமையும்.

அன்மொழித்தொகை:- தொகையாய் நிற்கும் சொற்றொடர் முழுவதும் சேர்ந்தே புறத்திலே, தொடர்புடைய பொருளைக் காட்டும்.

உ-ம்: தாழ்குழல் (வந்தாள்)

இங்குத் தாழ்ந்தகுழல் என்ற கருத்துடைய சொற்றொடர் முழுதும் சேர்ந்தே புறத்தில் அன்மொழித் தொகையைப் பிறக்கச் செய்கிறது.

இவையிரண்டும் வெவ்வேறானவையல்ல என்றும் இலக்கண ஆசிரியர் சிலர் உரைப்பர்.

### தொகைநிலைச் சொற்றொடர்கள் பலபொருள் தருதல்

ஒரு தொகை நிலைத்தொடர் ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்கள் தொக்குநிற்கும் வகையில் அமைவதும் உண்டு.

உ-ம்; i. கொல் யானை — 1. கொன்றயானை (செய்வினைப்பொருளில் வந்தது.)
2. கொல்லப்பட்ட யானை (செயப்பாட்டு வினைப் பொருளில் வந்தது.)

ii. மலர்முகம் — 1. மலர்போன்ற முகம் (உவமை உருபு தொக்கு வந்தது)
2. மலரதுமுகம் (ஆறும் வேற்றுமையுருபு தொக்கது.)
3. மலரும் முகமும் - 'உம்' மை இடைச்சொல் தொக்கது.
4. மலர்ந்த முகம் - காலம் காட்டும் இடைநிலை தொக்கது.



iii. முத்துமாலை — 1. முத்தாலாகிய மாலை (மூன்றும் வேற்றுமையுருபு தொக்கது.)
2. முத்தினது மாலை (ஆறும் வேற்றுமையுருபு தொக்கது.)
3. முத்தோடுகூடிய மாலை (மூன்றும் வேற்றுமையுருபு தொக்கது.)
4. முத்தும் மாலையும் ('உம்' மை இடைச்சொல் தொக்கது.)

எனவே தொகைநிலைத் தொடர்களை விரிக்கும்பொழுது அவை அமைந்துள்ள வாக்கியத்தின் பொருத்தப்பாட்டினை உளங்கொண்டு விரித்தலே உகந்ததாகும்.

## உவமைத்தொகையும் உருவகமும்

மதிமுகம் என்ற தொகைநிலைத் தொடர் மதிபோன்றமுகம் என விரியும்பொழுது அஃது உவமைத் தொகாநிலைத் தொடராகின்றது. இத்தொடரில் மதி என்பது உவமிக்க எடுத்துக்கொண்ட பொருள். இதனை உவமானம் என்பர். முகம் உவமிக்கப்பட்ட பொருள். இதனை உவமேயம் என்பர். இவ்வாறு உவமிக்கும்பொழுது உவமானம் உயர்ந்த பொருளாகவும் உவமேயம் சற்றுத் தாழ்ந்த பொருளாகவும் வருவதே பெரும்பான்மை. சில வேளைகளிலே உவமானத்திலும் உவமேயம் சிறத்தலும் உண்டு.

உ-ம்: சூரியனை ஒத்தவன் முருகப்பெருமான். அகர உயிர்போல இறைவன் அறிவு வடிவாய் எங்கும் நிறைந்து நிற்பான்.

உவமேயப் பொருளை மிகுதியும் சிறப்பித்துக் காட்ட வேண்டிய தேவை நேருமாயின் அதனை உவமைக்குச் சமமாக ஆக்குவதும் புலவர்கள் கையாளும் ஓர் உத்தியாகும். இத்தகைய சமத்துவ நிலையை உருவகம் எனக் கூறுவர்.

மதி போன்ற முகம், முகமாகிய மதி என்று உருவகப்படும்பொழுது இரு பொருளும் தமது பொதுத்தன்மைகளான ஒளி, அழகு ஆகியவற்றிற் சமமாகின்றன.

முகமாகிய மதி என்ற உருவகச் சொற்றொடரிலே ஆகிய என்னும் உருபு மறைந்தால் அது முகமதி என்றாகும். எனவே,

i. மதிமுகம் — உவமைத்தொகை
ii. முகமதி — உருவகம்.

ஆகிய என்ற உருபு ,தொக்குநிற்கும் உருவகத் தொடரை உருவகத்தொகை என்று அழைக்கும் மரபு இல்லை. உருவகங்களுக்கு மேலும் சில உதாரணங்கள் வருமாறு :

முகமலர், விழிவாள், பாதமலர், புருவவில், கைக்காந்தன், விழிச்சுடர், நெற்றிப்பிறை.

## புணர்ச்சி

பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை சந்தியாகிய உறுப்புக்களைத் தன்னிடத்தே பெற்றுள்ள பகுபதமும், ஒருசொல்லோடு ஒருசொல் தொடர்கின்ற சொற்றொடரும் புணரும் பொழுது இயல்பாக நிற்றலும் உண்டு; விகாரம் அடைதலும் உண்டு. (புணர்தல் - கலத்தல், சேர்தல்.) இயல்பாக நிற்றலை நிலையை இயல்பு புணர்ச்சி யென்றும், விகாரமடைந்து சேர்தலை நிலையை விகாரப் புணர்ச்சி என்றும் கூறுவர்.

உ - ம் : (1) வலைஞன் — வலை + ஞ் + அன்.

பகுபதமான 'வலைஞன்' புணரும்பொழுது 'ஞ்' ஆகிய மெய் யெழுத்துடன் 'அன்' இல் வரும் 'அ' ஆகிய உயிர் சேர்ந்து இயல் பாகவே 'ஞ' என்னும் உயிர்மெய்யெழுத்தாயிற்று. ஆகவே இஃது இயல்பு புணர்ச்சி.

(2) உண்டான் — உண் + ட் + ஆன்.

இங்கும் இயல்பு புணர்ச்சியே நிகழ்ந்தது. பின்வரும் சொற் றொடர்கள் யாவும் இயல்பாகப் புணர்ந்துள்ளமையை நோக்குக.

1. கந்தன் வந்தான்.
2. வந்த கந்தன்.
3. வந்து போனான்.

சொல்லாகிய பகுபதமும், சொல் தொடர்ந்த சொற்றொடரும் விகாரப்படுதலுக்கு உதாரணம் வருமாறு :

(1) வந்தான் — வா + த் + த் + ஆன்.

மேற்குறித்த பகுபதத்திலே வா என்ற எழுத்திலுள்ள 'ஆ' 'அ' ஆகக் குறுகிற்று, 'த்', 'ந்' ஆய் விகாரமடைந்தது;



2. தாடலை — தாள் + தலை.

மேலே வந்துள்ள தாடலை என்ற சொற்றொடரிலே தாள் என்ற சொல்லின் ஈற்றெழுத்துக் கெட்டுத் தலை என்ற சொல் லின் முதல் எழுத்தாகிய 'த்', 'ட்' ஆகித் தாடலை என 'விகா ரப்பட்டு வந்துள்ளதையும் நோக்குக.

ஆக, தமிழ் மொழியிலுள்ள சொற்களும் சொற்றொடர்களும் புணர்ச்சி என்ற இன்றியமையாத நிலைக்கு உள்ளாகின்றன என் பது மேலே காட்டிய உதாரணங்களினாலே புலனாகின்றது. எமது மொழியின் ஓசைச் சிறப்பினைப் பாதுகாக்க மேற்கொண்ட முயற் சியின் வெளிப்பாடே 'புணர்ச்சி' எனலாம்.

புணர்ச்சியின்போது ஏற்படும் விகாரங்களாகிய மாறுநிலைகள் முத்திறப்படும். அவையாவன : (i) தோன்றல் (ii) திரிதல் (iii) கெடுதல்.

(i) தோன்றல் : புணர்ச்சியின்போது புதிய எழுத்தொன்று தோன்றல்.

உ - ம் : பற்று + கோடு = பற்றுக்கோடு. 'க்' தோன்றியது.

(ii) திரிதல் : ஓரெழுத்து வேறோர் எழுத்தாக மாறுதல்.

உ - ம் : கல் + கோயில் = கற்கோயில். 'ல்', 'ற்' ஆய் மாறிற்று.

(iii) கெடுதல் : நிலம் + வரட்சி = நிலவரட்சி. 'ம்' கெட் டது.

### புணர்ச்சியிற் கையாளும் சில சொற்றொடர்கள்

(i) சொற்றொடரிலே முதற் சொல் — நிலைமொழி.
(ii) அதனோடு புணரவரும் சொல் — வருமொழி
(iii) முதற் சொல்லின் ஈற்றெழுத்து உயிர் எழுத்தாயின் அதனைக் குறிக்கும் சொல் — நிலைமொழி ஈற்றுயிர்
(iv) அது மெய்யெழுத்தாயின் — நிலைமொழி ஈற்றுமெய்
(v) இரண்டாவது சொல்லின் முத லெழுத்து உயிரெழுத்தாயின் — வருமொழித் தொடக்க உயிர்
(vi) அது மெய்யெழுத்தாயின் — வருமொழித் தொடக்க மெய்

(vii) நிலைமொழியின் இடையில் நிற்பன. — நிலைமொழியின் இடைநின்ற உயிர் அல்லதுமெய்

(viii) வருமொழியின் இடைநிற்பன — வருமொழியின் இடைநின்ற உயிர் அல்லது மெய்.

இவற்றுக்குப் பதிலாக நிற்கும் இடத்தைக் கூறி அதனோடு குறித்த எழுத்தின் சாரியையும் சேர்த்து வழங்கும் வழக்கமும் உள்ளது.

உ - ம் : நிலைமொழி ஈற்று அகரம்.
நிலைமொழி ஈற்று யகரஒற்று.
வருமொழி தொடக்க அகரம்.
வருமொழித் தொடக்க யகரஒற்று.

புணர்ச்சி விதிகளைக் கையாளும் பொழுதும் கற்கும் பொழுதும் இந்தச் சொற்கள் சொற்றொடர்களை நினைவில் வைத்திருப்பது நன்று.

### நால்வகைப் புணர்ச்சிகள்

தமிழிலக்கணத்திலே பல்வேறு தலைப்புக்களிற் புணர்ச்சி விதிகளை எடுத்து விளக்கும் மரபு உண்டு. ஆனால் இவற்றைப் பருமட்டமாக நான்கு தலைப்புக்களிலே அமைத்துக்கொண்டு இந் நூலில் விளக்கம் தரப்படும். அவையாவன:

1. உயிர்முன் உயிர் புணர்தல்
(குற்றியலுகரப் புணர்ச்சியும் இதனுள் அடக்கப்படும்)
2. உயிர்முன் மெய் புணர்தல்.
3. மெய்ம்முன் உயிர் புணர்தல்.
4. மெய்ம்முன் மெய் புணர்தல்

### 1. (அ) உயிர்முன் உயிர் புணர்தல்

(அ) அ, ஆ, உ, ஊ, ஒ, ஓ, ஔ ஆகிய உயிரெழுத்துக்களை ஈற்றிலுடைய நிலைமொழியின் முன்பு வருமொழித் தொடக்கத்திலே உயிரெழுத்துக்கள் வருமாயின் இரண்டு உயிர்களையும் உடம்படுத்த 'வ்' என்னும் மெய் தோன்றும். இதனை 'வகர உடம்படுமெய்' என்பர்.

உ - ம் :

i. பல + அடி = பல + வ் + அடி = பலவடி
ii. விலா + எலும்பு = விலா+வ்+எலும்பு= விலாவெலும்பு
iii. பசு+அழகு = பசு+வ்+அழகு = பசுவழகு



iv. பூ+இது = பூ+வ்+இது = பூவிது
v. *நொ+அழகு = நொ+வ்+அழகு = நொவ்வழகு
[*நொ - துன்பம். இது நாவலர் தமது இலக்கணச் சுருக்கத்திற் கையாண்டுள்ள உதாரணம்]
vi. கோ+அருமை = கோ+வ்+அருமை = கோவருமை
vii. *கௌ+இதை = கௌ+வ்+இதை = கௌவிதை
(*கௌ = கவ்வு)

(ஆ) இ, ஈ, ஐ ஈறாக அமையும் நிலைமொழிகள், தொடக்கத்தில் உயிரெழுத்தமைந்த வருமொழிகளோடு புணருகையில் இடையிலே 'யகர உடம்படுமெய்' தோன்றப் பெறும்.

உ - ம்:

i. பனி+இரவு = பனி+ய்+இரவு = பனியிரவு
ii. தீ+எரியும் = தீ+ய்+எரியும = தீயெரியும்
iii. கலை+இன்பம் = கலை+ய்+இன்பம் = கலையின்பம்.

(இ) ஏகாரத்தை ஈற்றிலுடைய நிலைமொழி முன்பு வருமொழித் தொடக்கத்திலே உயிரை முதலாகக்கொண்ட வருமொழி வருமாயின் யகர உடம்படுமெய்யோ, வகர உடம்படுமெய்யோ தோன்றும்.

உ-ம்: தேன்+ஆரம் = தேவாரம்
சே+அடி = சேவடி, சேயடி

**கோயில் ஒரு சிறப்புவிதி**

கோ + இல் = கோ + ய் + இல் = கோயில். இது சிறுபான்மை வகர உடம்படுமெய்பெற்றுக் கோவில் எனவும் வரும்.

(ஆ) குற்றியலுகரத்தை ஈற்றிலுடைய வருமொழிமுன்பு உயிர் வந்து புணரல்.

(i) குற்றியலுகர ஈற்றையுடைய நிலைமொழி முன்பு உயிரை முதலாயுடைய வருமொழி வருமாயின் குற்றியலுகரம் கெடும்.

உ + ம் : காடு + எரிந்தது = காட் + (உ) + எரிந்தது.
காடெரிந்தது — (அல்வழிப்புணர்ச்சி)
காட் + (உ) + எரிந்தது
வண்ட் + (உ) + இரைச்சல்
வண்டு + இரைச்சல் = வண்ட்+(உ)+இரைச்சல்=
வண்டிரைச்சல் - (வேற்றுமைப்புணர்ச்சி)

இவ்விடத்தில் வேற்றுமைப் புணர்ச்சி, அல்வழிப்புணர்ச்சி ஆகிய இரண்டும் பற்றி அறிந்து கொள்வது நன்று.

வேற்றுமைப்புணர்ச்சி : வேற்றுமையுருபுகள் வெளிப்பட்டு நின்றோ, தொக்குநின்றோ வருமொழியோடு புணர்வதே வேற்றுமைப் புணர்ச்சி.

| | | |
|---|---|---|
| உ - ம் : | வேற்றுமை தொக்கு நின்று புணரல் | வேற்றுமையுருபு வெளிப்பட்டு நின்று புணரல். |
| | | (இது வேற்றுமைவிரி எனப்படும்) |
| i. | வீடு கட்டினான் - ஐ | - வீட்டைக் கட்டினான். |
| ii. | வாளெறிந்தான் - ஆல் | - வாளாலெறிந்தான். |
| iii. | புலவர்க்கொடுத்தான் - கு | - புலவருக்குக் கொடுத்தான் |
| iv. | ஊர் நீங்கினான் - இன் | - ஊரினீங்கினான். |
| v. | என் புத்தகம் - அது | - எனது புத்தகம். |
| vi. | மலையருவி - கண் | - மலையின்கண் அருவி. |

அல்வழிப்புணர்ச்சி :

தொகைநிலைத் தொடர்களிலே வேற்றுமைத் தொகை தவிர்ந்த ஐந்து தொடர்களும் தொகாநிலைத் தொடர்கள் ஒன்பதுமாகப் பதினான்கு தொடர்களும் நிலைமொழி வருமொழியாய் நின்று புணரும் புணர்ச்சியே அல்வழிப்புணர்ச்சி.

ii. தகர, டகர, றகர ஒற்றுக்களை ஏறிவரும் உயிர்த்தொடர்க் குற்றியலுகரங்கள் வேற்றுமையுருபேற்கும்போதும் வருமொழித் தொடக்க உயிரோடு புணரும்போதும் வல்லொற்று இரட்டிப்பதுண்டு.

உ-ம் : எருது+ஐ = எருத்தை
எருது+உழவு = எருத்துழவு
* பகடு+ஐ = பகட்டை
பகடு+உழவு = பகட்டுழவு
வயிறு+ஐ = வயிற்றை
வயிறு+ உளைவு= வயிற்றுளைவு

(* பகடு-எருமை)

(பகடு — எருது, ஆண் யானை ஆண் எருமை)
[— அல்லது மாடு, யானை, எருமை இவற்றின் ஆண்]

iii. டகர, றகர ஒற்றுக்களேறிவரும் நெடிற்றொடர்க் குற்றியலுகரங்களும் இவ்வாறே வல்லொற்று இரட்டிக்கப் பெறுதல் உண்டு.

உ-ம் : நாடு+ஐ = நாட்டை
நாடு+ஆட்சி = நாட்டாட்சி
ஆறு+ஐ = ஆற்றை
சேறு+உழக்கல் = சேற்றுழக்கல்



iv. முற்றியலுகர ஈற்றுநிலைமொழியும் வருமொழித் தொடக்கத்திலே உயிர்வருமாயின் சிறுபான்மை முற்றியலுகரம்கெடும்.

உ - ம் : கதவு+அடித்தான் — கதவடித்தான்.
கதவு+அடைப்பு — கதவடைப்பு

(இ). அ, இ, உ என்னும் சுட்டெழுத்துக்களும் எகர வினாவும் மொழித்தொடக்கத்தில் வந்து உயிரோடு கூடுகையில் நிகழ்வன.

இந்நான்கு மொழி முதலெழுத்துக்களின் முன்பும் உயிர்வரின் இடையில் வகரமெய் தோன்றும்.

உ - ம் :

| | | | |
|---|---|---|---|
| 1, | அ+உயிர் | = அ+வ்+உயிர் | = அவ்வுயிர் |
| 2 | இ+உரிமை | = இ+வ்+உரிமை | = இவ்வுரிமை |
| 3 | உ+ஏறு | = உ+வ்+ஏறு | = உவ்வேறு |
| 4 | எ+அரசு | = எ+வ்+அரசு | = எவ்வரசு. |

இங்கு அவ்வுயிர், இவ்வுரிமை, உவ்வேறு, எவ்வரசு என்றன்றோ புணரும் ?

அவ்வுயிர் என்று புணர்ந்தது எவ்வாறு? இடையிலே வேறொரு வகர ஒற்று எவ்வாறு தோன்றியது?

இவ்வைய வினாக்களுக்கு விடை பின்வருமாறு:

அ+உயிர் = அ + வ் + உயிர் எனவந்து, பின் அவ் + உயிர் எனநிற்கும்.

அகரம் தனிக்குறில், அதன்முன் ஓர் ஒற்று (வ்) வந்துள்ளது. இவ்வாறு தனிக்குறில் முன்பு வரும் ஒற்றுத் தன்முன் உயிர்வருமானால் இரட்டிக்கும் என்பது விதி. அந்த விதிக்கமைய அவ்+வ்+உயிர் என 'வ'கர ஒற்று இரட்டித்து அவ்வுயிர் என்றாயிற்று.

(ஈ) குற்றுகரவீற்று நிலைமொழி முன்பு உயிரை முதலாயுடைய எண்ணுப் பெயர்வரின் நிகழ்வன :

(i) ஒன்று + ஆயிரம் — ஒன்று என்ற நிலைமொழியின் ஈற்றில் நின்ற றகரஒற்றும் குற்றியலுகரமும் கெட்டு, னகரஒற்று ரகரஒற்றாய்த் திரிந்து தொடக்கத்திலுள்ள குறில்நெடிலாய்நீண்டு ஓராயிரம் என ஆயிற்று.

(ii) இரண்டு + ஆயிரம் = இரண்டு என்ற நிலைமொழியின் ணகரஒற்றும், டகரஒற்றும் குற்றியலுகரமும் ரகரத்தின் உயிரும்

கெட்டு, முதல் நீண்டு (இகரம் ஈகாரமாகி) ஈராயிரம் என ஆயிற்று.

(iii) மூன்று + ஆயிரம் — ஈற்றுக்குற்றியலுகரம், அஃது ஏறிய றகரஒற்று, அயல்நின்ற னகரஒற்று என்பன கெட்டு இடையிலே வகர உடம்படுமெய் தோன்றி மூவாயிரம் ஆயிற்று.

(iv) நான்கு + ஆயிரம் — ஈற்றுக்குற்றியலுகரம், அது ஏறிய ககரஒற்று என்பன கெட்டு னகரஒற்று லகரஒற்றாகி நாலாயிரம் ஆயிற்று.

(v) ஐந்து + ஆயிரம் — குற்றியலுகரம் தகரம், நகரஒற்று ஆகியன கெட்டு யகர உடம்படுமெய் தோன்றி ஐயாயிரம் ஆயிற்று.

(vi) ஆறு + ஆயிரம் — குற்றியலுகரம் வருமொழி முதலில் உயிர்வரக் கெட்டு ஆறாயிரம் ஆயிற்று.

(vii) ஏழு + ஆயிரம் — முற்றியலுகரமும் சிறுபான்மை வருமொழித் தொடக்கத்தில் உயிர்வரக்கெடும் என்ற விதிக்கமையக் கெட்டு ஏழாயிரம் ஆயிற்று.

(viii) எட்டு + ஆயிரம் — குற்றியலுகரமும் டகரஒற்றும் கெட்டு டகரமெய் ணகரமெய்யாகி, தனிக்குறில்முன்பு உயிர்வர இரட்டித்து எண்ணாயிரம் ஆயிற்று.

(ix) ஒன்பது + ஆயிரம் — ஈற்றுக்குற்றியலுகரம் கெட்டு, இன்சாரியை கூடி ஒன்பதினாயிரம் ஆயிற்று. ஒன்பதாயிரம் எனவும் வரும்.

(x) பத்து + ஆயிரம் — குற்றியலுகரமும், தகரஒற்றும் கெட்டு 'இன்' சாரியை இடையிலே தோன்றிப் பதினாயிரம் என்றாயிற்று. இது குற்றியலுகரப் புணர்ச்சிப்படி பத்தாயிரம் எனவும் புணரும்.

(xi) பத்து + ஒன்று — (பதினாயிரத்தின் புணர்ச்சி விதி இதற்கும் பொருந்தும்) பதினொன்று. இது பதிற்றொன்று என இடைநின்ற தகரஒற்றுக்கெட்டு இற்றுச் சாரியை பெற்றும் வரும். அவ்வாறு வருவது பெருக்கலெண்ணைப் பத்தைதக் குறிக்கும்.

(xii) பத்து + இரண்டு — ஈறுகெட்டுத் தகரஒற்று னகர ஒற்றாகி, தனிக்குறில் முன்ஒற்று இரட்டித்துப் பன்னிரண்டு என வரும். பதிற்றிரண்டு எனவும் வரும். (பதிற்றிரண்டு = இருபது)

(xiii) பத்து + ஐந்து — ஈறுகெட்டுத் தகரஒற்றோடு இன் சாரியை சேர்ந்து பதினைந்து ஆயிற்று.



முதற்கூறிய விதிகளைக் கீழே தரப்பட்டுள்ளவற்றிற்கும் பிரயோகிக்கலாம்.

| | | கூட்டுத்தொகை | பெருக்குத்தொகை |
|---|---|---|---|
| 1: | பத்து + ஆறு | = பதினாறு (16) | (பதிற்றாறு) (60) |
| 2. | பத்து + ஏழு | = பதினேழு | (பதிற்றேழு) |
| 3. | பத்து + எட்டு | = பதினெட்டு | (பதிற்றெட்டு) |
| 4. | பத்து + ஒன்பது | = பத்தொன்பது | (பதிற்றொன்பது) |
| 5. | பத்து + ஆயிரம் | = பதினாயிரம் | (பதிற்றாயிரம்) |
| 6. | நூறு + ஒன்று | = நூற்றொன்று | (பகுதி இரட்டித்தது) |
| 7. | நூறு + இரண்டு | = நூற்றிரண்டு | ( ,, ,, ) |
| 8. | நூறு + ஐந்து | = நூற்றைந்து | ( ,, ,, ) |
| 9. | நூறு + ஆறு | = நூற்றாறு | ( ,, ,, ) |
| 10. | நூறு + ஏழு | = நூற்றேழு | ( ,, ,, ) |
| 11. | நூறு + ஒன்பது | = நூற்றொன்பது | ( ,, ,, ) |
| 12. | ஒன்பது + ஆறு | = ஒன்பதினாறு | (ஒன்பதிற்றாறு) |
| 13. | ஒன்பது + ஏழு | = ஒன்பதினேழு | (ஒன்பதிற்றேழு) |
| 14. | ஒன்பது + எட்டு | = ஒன்பதினெட்டு | (ஒன்பதிற்றெட்டு) |
| 15. | ஒன்பது + ஒன்பது | = ஒன்பதினொன்பது | (ஒன்பதிற்றொன்பது) |
| 16. | ஒன்று + ஒன்று | = | ஓரொன்று |
| 17. | ஒன்று + இரண்டு | = | ஓரிரண்டு |
| 18. | ஒன்று + ஐந்து | = | ஓரைந்து |
| 19. | ஒன்று + ஆறு | = | ஓராறு |
| 20. | ஒன்று + ஏழு | = | ஓரேழு |
| 21. | ஒன்று + எட்டு | = | ஓரெட்டு |
| 22. | இரண்டு + ஒன்று | = | ஈரொன்று |
| 23. | இரண்டு + இரண்டு | = | ஈரிரண்டு |
| 24. | இரண்டு + ஐந்து | = | ஈரைந்து |
| 25. | இரண்டு + ஆறு | = | ஈராறு |
| 26. | இரண்டு + ஏழு | = | ஈரேழு |
| 27. | இரண்டு + எட்டு | = | ஈரெட்டு |
| 28. | இரண்டு + ஒன்பது | = | ஈரொன்பது |
| 29. | ஏழு + ஏழு | = | ஏழேழு (ஏழேழ்) |

இவைபோல் வரும் மூன்று — ஒன்பது — இருபது — இருநூறு — எண்ணூறு முதலாகிய சகல குற்றியலுகர வீற்றெண்களும் உயிர்முதலாய்வரும் எண்களோடு சேர்கையிலே மேற்குறித்த விதிகளுக்கமையப் புணரும்.

**2. (அ) உயிர்முன் மெய் புணர்தல்:**

அ, இ, உ என்னும் சுட்டெழுத்துக்களின் முன்பும் எகரமாகிய வினாவெழுத்தின் முன்பும் யகரமல்லாத மற்றைய மெய்

யெழுத்துக்கள் வரும்பொழுது வருமொழித் தொடக்க மெய்யெழுத்து மிகும்.

(i) அக்குயில், இக்குயில், உக்குயில், எக்குயில் (ட, ற ஆகியன மொழிமுதலாகா) ச, த, ப ஆகியன மொழிமுதலாய் வருகையில் மேற்குறித்தவாறே புணரும்.

(ii) அஞ்ஞான்று, இஞ்ஞான்று, உஞ்ஞான்று, எஞ்ஞான்று (ண, ன மொழி முதலாகா. ஞ, ம, ந என்பன மொழிமுதலாகி வரும்பொழுது மேற்குறித்தவாறே புணரும்.)

(iii) அவ்வழி, இவ்வழி, உவ்வழி, எவ்வழி (ர, ல ழ ள நான்கும் மொழிமுதலாகா. 'ய'கரமெய்க்குச் சிறப்புவிதி கீழே தரப்படுகிறது:)

(iv) யகரமெய், வருமொழி முதலாயின் அது சுட்டெழுத்தோடும் வினாவெழுத்தோடும் புணருகையில் யகரமெய் தோன்றும்.

உ-ம்: அவ்யானை, இவ்யானை, உவ்யானை, எவ்யானை.

(v) அந்த, இந்த, உந்த என வருகின்ற சுட்டு மருவிய பதங்களும், எந்த என்ற வினா மருவிய பதமும் அங்கு, இங்கு, உங்கு, எங்கு, யாண்டு, ஈண்டு என வரும் குற்றுகர ஈறுடைய இடைச்சொற்களும், வருமொழித் தொடக்கம் வல்லினமாயின் மிகும். (இரட்டிக்கும்.)

உ-ம்: அந்தச் சேனை, இந்தச் சேனை, உந்தச் சேனை, அங்குப் போனான், இங்குச் சென்றான், உங்குச் சென்றான், எங்குச் சென்றான் யாங்குச் சென்றான், யாண்டுச் சென்றான், ஈண்டுச் சென்றான்.

(இக்காலத்தில் அங்கு, இங்கு முதலாயின, வருமொழித் தொடக்கத்தில் வல்லினம் வரின் இரட்டிக்காது. அங்கு சென்றான், இங்கு சென்றான் என்று எழுதப்படும் வழக்கமே பெருவரவிற்றாயுள்ளது. சிலர் அங்கே சென்றான், இங்கே போனான் என ஏகாரச்சாரியை வழங்கி எழுதுவர்.)

(ஆ) வினாப்பெயர் முன் வல்லினம் புணர்தல் :

ஆ, ஏ, ஓ ஆகியவற்றை ஈறாகக்கொண்ட வினாப்பெயர்கள் வல்லின மெய்யினை முதலாய்க் கொண்ட வருமொழிமுன்பு மிகாது இயல்பாய் நிற்கும்.

உ-ம்: அவனா சென்றான். அவனோ தந்தான்.
நீயே கொடுத்தாய்.



(இ) உயிரீற்றுப் பெயரெச்சத்தின் முன் வல்லினம் புணர்தல் :

செய்த, செய்கின்ற, செய்யாநின்ற என்னும் வாய்பாட்டுத் தெரிநிலை வினைப்பெயரெச்சத்தின் முன்னும் இன்மை குறிக்கும் எதிர்மறைப் பெயரெச்சமான இல்லாத, அல்லாத ஆகியவற்றின் முன்னும் வல்லினம் வந்தால் அது திரிபடையாது இயல்பாகவே புணரும்.

உ-ம்: வந்த பெரியன், வருகின்ற கந்தன், வராநின்ற சான்றோன், இல்லாத குதிரை, அல்லாத குதிரை.

இல்லா, செய்யா எனவரும் எதிர்மறை வினையெச்சங்கள் (ஆகாரவீறுடையவை) வல்லினமெய்யை வருமொழிமுதலாகக் கொள்ளும்போது அவ்வல்லினம் மிகும்.

உ-ம்: இல்லாக் கொடியவன்.

(ஈ) உயிரீற்று வினையெச்சத்தின் முன் வல்லினம் புணரல் :

இ, ஆ, ஊ, என, அ, ஆகிய உயிரீறு பெற்றுவரும் வினையெச்சங்கள் வருமொழிமுதலில் வல்லினம் வருமாயின் மிகும். (இரட்டிக்கும்.)

உ-ம்: தேடிச் சென்றான். — இ
உண்ணாச் சென்றான். — ஆ
உண்ணூப் போனான். — ஊ
உண்டெனப் போனான். — என
உண்ணச் சென்றான். — அ

இ, இய, மே, மை ஆகிய உயிரீறு பெற்றுவரும் வினையெச்சங்கள் வல்லினத் தொடக்க வருமொழியோடு புணர்கையில் இயல்பாகும்.

உண்ணிய சென்றான். உண்ணாமை சென்றான்.
உண்ணாமே சென்றான். (இயர் வாய்பாட்டெச்சமும் இயல்பாகும்.)

(உ) வன்றொடர்க் குற்றியலுகரத்தை ஈறாயுடைய வினையெச்சங்கள் வருமொழித் தொடக்கத்தில் வல்லினம்வரின் நிகழ்வன :

வன்றொடரீற்றுக் குற்றியலுகர வினையெச்சங்கள் வல்லினம் வர மிகும். (இரட்டிக்கும்.)

உ-ம்: கடித்துத் தின்றான்.
விட்டுச் சென்றான்.
கற்றுத் தெளிந்தான்.

(ஊ) ஏனைய குற்றியலுகரங்களின் நிலை (வினையெச்சங்கள்).

மற்றைய குற்றியலுகரங்கள், வருமொழி வல்லினமாயின் மிகாது இயல்பாகும்.

உ-ம்: வந்து போனான், எய்து கொன்றான்.

(எ) துவ்விகுதி கெடநின்ற எதிர்மறைத் தெரிநிலை வினையெச்சம் அடையும் நிலை.

துவ்விகுதிகெட்ட எதிர்மறைத் தெரிநிலை வினையெச்சம் வருமொழித் தொடக்கம் வல்லினமாயின் மிகும்.

உ-ம்: உண்ணாக் கொடுத்தான்.

(ஏ) பல, சில என்னும் அகரவீற்றுப் பெயர்கள் புணரல்.

i. வல்லினம் வரும்பொழுது இவை மிகா.
பல போயின. சில சென்றன.

ii. இவை அடுக்குத் தொடராய் வருகையில் இயல்பாக நின்றும் லகர றகரம் ஒற்றாய்த் திரிந்தும், லகர உயிர் மெய்யிலிருந்து அகர உயிர் மறைந்தும் வருமொழித் தொடக்க வல்லினம் இரட்டித்தும் வரும்.

| | | | |
|---|---|---|---|
| பலபல | பற்பல | பல்பல | பலப்பல |
| சிலசில | சிற்சில | சில்சில | சிலச்சில |

iii. பண்புத்தொகையாக அமையும்போது 'இயல்பாகவும் நிலைமொழி ஈற்று அகரம் கெட்டும் வருதல் உண்டு.

உ-ம்: பல + கலை = பல்கலை.
சில + கலை = சில்கலை.

(ஐ) பூப்பெயர் முன்பு இனமெல்லினம் தோன்றல்.

vi. பூப்பெயர் முன்பு வல்லினம் வரின் இடையில் இன எழுத்தாகிய மெல்லினந் தோன்றும்.

உ-ம்: பூங்கொடி பூஞ்செடி பூந்தொட்டி.

(பூஞ்செடி - பூச்செடி என வல்லினமாயும் இரட்டிக்கும். பூந்தொட்டியும் அவ்வாறே இவை இன்றைய வழக்குகள்.

(ஒ) குற்றியலுகரவீற்று எண்ணுப்பெயர் வருமொழித் தொடக்கத்தில் மெய்பெற்று அடையும் மாறுதல்கள்:

i. ஒன்று + கோடி = ஈற்றுயிர்மெய் கெட்டு னகர, ஒற்று ரகர ஒற்றாகிப் பின் உகரம் பெற்று 'ஒருகோடி' என்றாகும், உகரந் தவிர்ந்த உயிரெழுத்துவரின் முதல் நீளும்.

உ-ம்: ஓர் + ஆயிரம் = ஓராயிரம்.



ii. இரண்டு + கோடி = இருகோடி.

iii. மூன்று + கோடி = முக்கோடி (இடைநின்ற னகர ஒற்று, ஈற்றுக்குற்றியலுகரம் ஆகியன கெட்டு முதல் குறுகியது.)

நான்கு + கோடி = இயல்பாகும். நான்குகோடி. நாற்கோடி, எனவும் வரும்.

(அ) தொண்ணூறு, தொள்ளாயிரம் என்பனவற்றின் புணர்ச்சிக்கான சிறப்பு விதி:

| | | |
|---|---|---|
| ஒன்பது + பத்து | = ஒன் + பத்து | — பது கெட்டது. |
| த் + ஒன் + பத்து | = தொன் + பத்து | — தகரஒற்று நிலைமொழித் தொடக்க உயிருடன்கூடிற்று. |
| தொள் + நூறு | = தொண் + நூறு = தொண்ணூறு | — தொடக்க உயிர்மெய்யை தொடர்ந்த ளகரஒற்று ணகரத் ஒற்றாயிற்று. பத்து நின்ற இடத்திலே நூறு வந்தது. வருமொழி நகரஒற்று நிலைமொழிக்கேற்ப ணகரஒற்றாய் மாறிற்று. |
| 2 ஒன்பது + நூறு | = ஒன் + நூறு | — பது கெட்டது. |
| த் + ஒன் + நூறு | = தொன் + நூறு | — தகரஒற்று நிலைமொழித் தொடக்க உயிருடன்கூடிற்று. |
| தொள் + ஆயிரம் | = தொள்ளாயிரம் | — தொடக்க உயிர்மெய்யைத் தொடர்ந்த ளகரஒற்று ளகர ஒற்றாகி உயிர்வந்தமையால் இரட்டித்துத் தொள்ளாயிரம் ஆயிற்று. இதனைத் தொளாயிரம் எனப் பேச்சுவழக்கில் அழைப்பர். |

[இவ்விரு எண்களும் அமைந்த முறை மிகவும் புதுமையாய் உள்ளது இலக்கண ஆசிரியர் இவை புணருமாற்றை எடுத்துக் காட்டினரேயன்றி அவ்வாறு புணரக்காரணம் என்னவென்று விளக்கவில்லை. நூற்றுக்குப் பழைமையான (முன்னாக வரும்) எண் என்னும் பொருளிலே 'தொன்மை + நூறு' எனவும், ஆயிரத்துக்குப் பழமையான (முன்னாக வரும்) எண் என்னும் பொருளிலே, 'தொன்மை + ஆயிரம்' எனவும் அமைந்து பண்புப் பெயர்ப் புணர்ச்சியாக இப் புணர்ச்சி நிகழ்ந்திருக்கலாம் என்று

ஊகிக்க இடம் உள்ளது. தொன்மை — 'தொல்' என்ற அடியாய்ப் பிறந்து பின் 'தொன்' ஆகியிருக்கலாம்.]

(ஆ) இருபது, முப்பது முதலாம் எண்களுடன் ஒன்று, இரண்டு முதலான எண்ணுப் பெயர்கள் புணரல்.

1. இருபது + ஒன்று = இருபத்து+ஒன்று=இருபத்தொன்று.
2. முப்பது+இரண்டு=முப்பத்து+இரண்டு=முப்பத்திரண்டு.
3. நாற்பது+மூன்று=நாற்பத்து+மூன்று=நாற்பத்துமூன்று.

இவ்வாறே பிறவும் புணரும்.

**இக்காலப் பிரயோகம் :**

இக்காலத்திலே இருபத்திமூன்று, முப்பத்திநான்கு எனக் குற்றியலுகரத்தை முற்றியலிகரமாய் மாற்றி வழங்குவர். இவ் வழக்குப் பொருந்தாது. இகரம், யகரம் என்பன வருமொழி முதலெழுத்தானால் மட்டுமே குற்றியலுகரம் முறையே முற்றியலுகரமாயும், குற்றியலிகரமாயும் மாறும் எனவே,

உ + ம் : ஐம்பத்து மூன்று, இருபத்தைந்து என்றாங்கு வழங்குதலே முறை.

(இ) குற்றியலுகரத் திசைப் பெயர்கள் வருமொழிகளாய் வரும் திசைப்பெயர்களோடு புணரும் வகை :

i. வடக்கு + கிழக்கு = ஈற்றுநின்ற குற்றியலுகரமேறிய ககர ஒற்றும் அதற்கு முன்னுள்ள ககர ஒற்றும் கெட்டு, வடகிழக்கு என்றாகும். இதுபோன்றே வடதிசை, வடமலை, வடமேரு என வரும்.

குணக்கு, குடக்கு என்னும் கிழக்கு, மேற்குத் திசைகளைக் குறிக்கும் பதங்களும் இவ்வாறே புணரும்.

ii. கிழக்கு + திசை = ஈற்று நின்ற ககர ஒற்றேறிய குற்றியலுகரமும் ககர ஒற்றும் அதன் முன்னின்ற ககர ஒற்றும் கெட்டு ழகர உயிர்மெய்யின் உயிராகிய அகரம் மறைந்து 'கீழ்' என்றாகி அதனோடு திசை புணர்கையில் வருமொழித் தொடக்கத் தகர ஒற்று மிகுந்து நின்று கீழ்த்திசை எனவரும். பக்கத்தைக் குறிக்கும் பால் என்ற சொல்லோடு புணர்கையிலே தகர ஒற்று மிகாது.

உ - ம் : கீழ்பால்.

iii. தெற்கு + கிழக்கு : ஈற்றுக்குற்றியலுகரத்தோடு ககர ஒற்றும் கெட்டு முன்னின்ற 'ற்'கர ஒற்று 'ன்'கர ஒற்றாகித் 'தென் கிழக்கு' என்றாகும். 'தென்' முன்வரும் திசையின் முதலெழுத்



தாகிய தகர ஒற்று னகர ஒற்றுக்கு இனமான றகர ஒற்றாகத் திரியும். உ - ம் : தென்றிசை.

iv. மேற்கு + கடல் - நிலைமொழி ஈறுகெட்டு 'ற்'கர ஒற்று லகர ஒற்றாகி மேல்கடல் என்றாகும். திசையொடு புணர்கையில், 'ல்'கர ஒற்றும் வருமொழித் 'த்'கர ஒற்றும் றகர ஒற்றுக்களாகும்.

உ - ம் : மேற்றிசை.

இக்காலப் பிரயோகம்

இவை இக்காலத்திலே கிழக்குத்திசை, மேற்குத்திசை, வடக்குத்திசை, தெற்குத்திசையென வருமொழித் தொடக்கத் 'த்'கர ஒற்று இரட்டித்து வழங்குவதே பெரும்பான்மை.

திசைப் பெயர்கள் நாடு, தேசம் என்பவற்றோடு புணரல்.

v மேற்கு + நாடு, மேற்கு + தேசம் என்பன புணர்கையில் ஈறுகெட்டு 'ற்'கர ஒற்று லகர ஒற்றாகி ஐகாரச் சாரியை பெற்று மேலைநாடு எனவும், இதனோடு வருமொழித் தொடக்கத் தகர ஒற்று இரட்டித்து மேலைத்தேசம் எனவும் வழங்கும். மேற்கு நாடு, மேற்குத்தேசம் எனவும் புணர்வதுண்டு. இவை போலவே கீழைநாடு, கீழைத்தேசம் (கிழக்குநாடு, கிழக்குத்தேசம்) என்பனவும் புணரும்.

(ஈ) தகர, டகர, றகர ஒற்றுக்களோடு கூடிய நெடிற்றொடர், உயிர்த்தொடர்க் குற்றியலுகர ஈற்றுநிலை மொழிகள் வல்லின முதல் வருமொழிகளோடு புணரல்.

i. ஆடு + கால் - } — ஆட்டுக்கால் } —பகுதி இரட்டித்தன
ii. சேறு + கால் - } — சேற்றுக்கால் }
i. பகடு + கால் — பகட்டுக்கால் ,, ,,
ii. எருது + கால் — எருத்துக்கால் ,, ,,
iii. பயறு + கொழிப்பு — பயற்றுக்கொழிப்பு ,, ,,

இவை தனிப்பதங்களாய் நின்று வேற்றுமையுருபேற்கும் பொழுது ஐந்தாம் வேற்றுமை தவிர்ந்த மற்றையிடங்களிலே பகுதி இரட்டித்தலோடு இன்சாரியையும் பெறும்.

உ - ம்: ஆற்றினை, ஆற்றிற்கு, ஆற்றினால், ஆற்றினது, ஆற்றின்கண்.

(உ) குற்றியலுகர ஈற்றுநிலைமொழி முன் யகரம் வரின் நிகழ்வது.

குற்றியலுகரவீற்று நிலைமொழிமுன்பு வருமொழித் தொடக்கத்திலே யகரஒற்று வருமாயின் குற்றியலுகரம் குற்றியலிகரமாகத் திரியும்.

உ - ம்: நாடு + யாது = நாடியது.

(இக்காலத்தில் இந்தப் புணர்ச்சி கவனிக்கப்படுவதில்லை)

(ஊ) மென்றொடர்க் குற்றியலுகரவீற்று நிலைமொழிகள் சில, வருமொழித் தொடக்கத்தில் வல்லினம் வரின் அடையும் மாற்றம்.

இடைநின்ற மெல்லொற்று வல்லொற்றாக மாறும்.

i. மருந்து + பை = மருத்துப்பை
குரங்கு + இனம் = குரக்கினம்
அன்பு + தளை = அற்புத்தளை

ii. இடையின ஒற்றும் உயிரும் வருமிடங்களிலும் இடைநின்ற மெல்லொற்று வல்லொற்றாய் மாறுவதுண்டு.

உ - ம்:- கரும்பு + வில்லி = கருப்புவில்லி (மன்மதன்)
கன்று + ஆ = கற்றா (உயிர்வந்தபொழுது வலித்தது)

iii. சில மென்றொடர்க் குற்றியலுகர வீறுகள் ஐகாரச் சாரியை பெறுதலும் உண்டு

உ - ம்: பண்டு + காலம் = பண்டைக்காலம்
அன்று + திங்கள் = அற்றைத்திங்கள்.

இரண்டாவது சொற்றொடரிலே இடைநின்ற மெல்லின ஒற்று வல்லினமாய்த் திரிந்துள்ளது.

(எ) மரப்பெயர்முன் வல்லினம் புணரல்:

i நிலைமொழியீற்றில் உயிரெழுத்தமைந்தவற்றின் முன்பு வல்லினம் வரின் அது மெல்லினமாய் மாறும்

உ - ம்: மா + காய் = மா + ங் + காய் = மாங்காய்
விள + காய் = விள + ங் + காய் = விளங்காய்

கனியும் இவ்வாறே புணரும்.

(ii) இகர உகர வீற்று மரப்பெயர் முன்பு வல்லினம் வரின் அம்முச்சாரியை வரும்,

உ - ம்: புளி + கனி = புளி + அம் + கனி = புளியங்கனி
புன்கு + கனி = புன்கு + அம் + கனி=புன்கங்கனி

(லகர ஒற்று ஈற்றில் வரினும் இவ்வாறே புணரும்.)

உ - ம்: ஆல் + காய் = ஆல் + அம் + காய் = ஆலங்காய்

iii. சில உயிரீற்று மரப்பெயர்கள் முன்பு இன வல்லினம் தோற்றும்.

உ - ம்: வாழை + கனி = வாழைக்கனி



பலா + கனி = பலாக்கனி
அன்னாசி + பழம் = அன்னாசிப்பழம்.

iv. ஐகாரவீற்று மரப்பெயர்கள் முன் வல்லின மெய்வரின் நிலைமொழியீற்று ஐகாரங் கெடும்; அம்முச்சாரியை தோன்றும்.

உ - ம்: தோடை + பழம் = தோட + அம்+பழம்=தோட+ம் + பழம் = தோடம்பழம்.

மாதுளை + கனி = மாதுள + அம் + கனி = மாதுள + ம் + கனி = மாதுளங்கனி.

3. மெய்ம்முன் உயிர்வரின் நிகழ்வன :

i. நிலைமொழியீற்றிலே மெய்யெழுத்து வந்து வருமொழித் தொடக்கத்திலே உயிர் வருமாயின் இயல்பு புணர்ச்சியாக இரண்டுங்கூடி உயிர்மெய்யெழுத்தாகும்

உ - ம்: கால் + உடைந்தது = காலுடைந்தது.

2 நிலைமொழியானது தனிக்குற்றெழுத்தும் அதனைத் தொடர்ந்து ஒற்றெழுத்தும் பெற்று வருமொழித் தொடக்கத்தில் உயிர் வருமாயின் குறித்த ஒற்று இரட்டிக்கும்.

உ - ம்: கல் + உடைந்தது = கல்லுடைந்தது.

இவை பற்றிய விளக்கம் முன்னரும் தரப்பட்டது.

4. மெய்ம்முன் மெய்புணரல்.

உயர்திணையில் னகர, ரகர வீற்றுப்பெயர்கள் நிலைமொழியாக நின்று வருமொழிகளோடு புணரும்பொழுது ஏற்படும் சில மாற்றங்கள் கீழே தரப்படுகின்றன. (இவை எல்லாப் பெயர்களுக்கும் உரிய புணர்ச்சியல்ல.)

(i) இருபெயரொட்டுப் பண்புத்தொகை

1. முருகன்+பெருமான் — முருகப்பெருமான் — னகர ஒற்றுக்கெட்டு வருமொழித் தொடக்க வல்லினம் இரட்டித்தது.
2. சிவன்+பெருமான் — சிவபெருமான் — நிலைமொழியீற்று னகர ஒற்றுக் கெட்டது.
3. சபாபதி + நாவலன் — சபாபதிநாவலன் — இயல்பாக நின்றது.
4. பொன்னம்பலம் + வாணர் - பொன்னம்பலவாணர் - நிலைமொழி ஈற்று மெய் கெட்டது.

5. முருகன் + வேள் — முருகவேள் — நிலைமொழி ஈற்றுமெய் கெட்டது.

6. கந்தையா + உபாத்தியாயர்-கந்தையா வுபாத்தியாயர் —வகர உடம்படு மெய் தோன்றியது.
(கந்தையவுபாத்தியாயர் என ஈறு குறுகி (ஆ, அ வாகி) வகர உடம்படுமெய் பெறுதலுமுண்டு )

ii. உம்மைத்தொகை

7. சேரன் + சோழன் + பாண்டியன் — சேரசோழபாண்டியர்-னகர ஒற்றுக்கள் கெட்டு ஈற்று னகர ஒற்று ரகர ஒற்றாயிற்று. ('உயர்திணை உம்மைத் தொகை பலர் ஈறே'.)

iii. வேற்றுமைத்தொகை

உ - ம் : கந்தன் + கோட்டம் — கந்தகோட்டம் (நிலைமொழியீறு கெட்டது கந்தக்கோட்டம் எனவும் வரும்.)

கந்தன் + புராணம் — கந்தபுராணம் (நிலைமொழியீறு கெட்டது. கந்தப்புராணம் என வகர வொற்று இன வல்லெழுத்தாய்த் திரியவும் பெறும்.)

கந்தன் + மடம் — கந்தமடம்
செட்டி + தெரு — செட்டித்தெரு, செட்டிதெரு.

iv. யகர, ழகர மெய்யீற்றுப் பெயர்கள் முன் வல்லினம் புணர்தல் :

i. வேய் + குழல் = வேய் + ங் + குழல் = வேய்ங்குழல்
வருமொழிமுதல் வல்லினத்திற்கு இனமான மெல்லினம் தோன்றியது.

ii. பாழ் + கிணறு = பாழ் + ங் + கிணறு = பாழ்ங்கிணறு
வருமொழிமுதல் வல்லினத்திற்கு இனமான மெல்லினம் தோன்றியது.

சில இடங்களில் இவை இயல்பாய்நின்றும் வருமொழி வல்லினம் இரட்டித்தும் வரலும் உண்டு.

உ - ம் : பாய் + கொடு = பாய்கொடு
பேய் + கோட்பட்டான் = பேய்க்கோட்பட்டான் (பேயாற் பிடிக்கப்பட்டவன்)
பேய் கோட்பட்டான் எனவும் வரும்.



ரகர ஒற்றீற்று வருமொழியும் இவ்வாறே புணரும்.

உ - ம் : தேர் + கொண்டான் = தேர்கொண்டான், தேர்க்கொண்டான்.

(iii) தனிக்குற்றெழுத்தோடு யகர ஒற்றுப் பெற்ற நிலைமொழி முன்பு மெல்லினம் வருமொழித் தொடக்கத்தில் வரின் அந்தமெல்லினம் இரட்டும்

உ - ம் : செய் + நன்றி = செய்ந்நன்றி.
பொய் + மை = பொய்ம்மை.

(இ) ணகர னகர விறுப் புணர்ச்சி :

(i) இவற்றின் முன் வல்லினம் வரின் இயல்பாகப் புணரும். (இஃது அல்வழிப்புணர்ச்சிக் கண்நிகழும்)

உ - ம் : மண் + சரிந்தது = மண் சரிந்தது.
பொன் + குறைந்தது = பொன் குறைந்தது.

(ii) ணகரம் டகரமாகவும் னகரம், றகரமாகவும் புணர்வதும் உண்டு. (இது வேற்றுமைப் புணர்ச்சிக்கண் நிகழும்.)

உ - ம் : மண் + சரிவு = மட்சரிவு
பொன் + குறைவு = பொற்குறைவு

(இன்று இப்புணர்ச்சி கவனிக்கப்படுவதில்லை. இயல்பாகவே புணரும்.)

(iii) அல்வழிப்புணர்ச்சியிலே பண்புத்தொகை, உவமைத்தொகை ஆகியவற்றிலே வல்லினமாய் மாறல் நிகழ்வதுண்டு.

உ - ம் : கண் + பொலிவு = கட்பொலிவு } பண்புத்
பொன் + கோடு = பொற்கோடு } தொகை

கண் + செவி = கட்செவி } உவமைத்
பொன் + கணங்கு = பொற்கணங்கு } தொகை

( * கட்செவி — பாம்பு * கணங்கு — தேமல் )

(iv) ணகர னகரங்களின்முன் நகரம்வரின் முறையே ணகரமாகவும் னகரமாகவும் திரியும்.

உ - ம் - கண் + நன்று = கண்ணன்று
பொன் + நன்று = பொன்னன்று

(v) நெட்டெழுத்தினைத் தொடர்ந்து ணகர னகர ஒற்றுக்கள் அமைந்த நிலைமொழிகளின் முன்பு வரும் நகரமெய் கெட்டுப் போகும்.

உ-ம் - தூண் + நன்று = தூண் + (ந்) அன்று = தூணன்று
வான் + நன்று = வான் + ந் (அன்று) = வானன்று

(vi) தன், என் எனத்திரிந்து வரும் தான், நான் ஆகிய பெயர்களின் முன்பு வல்லினம் வரின் இயல்பாகியும் னகர ஒற்று றகரஒற்ருகத் திரிந்தும் புணரும்.

தன் + பற்று = தன்பற்று — இயல்பு
தற்பற்று — விகாரம்.

என் + போல = என்போல — இயல்பு
எற்போல — விகாரம்.

(ஈ) மகரவீற்றுப் புணர்ச்சி :

I. வேற்றுமை, பண்பு, உவமைத் தொகைகளாய் அமையும் மகரவீற்று நிலைமொழிகள், வருமொழித் தொடக்கத்தில் வல்லினம் வருமாயின் அவற்றிற்கு இனமாய்த் திரியும்.

i. மரம் + காட்சி = மரக்காட்சி. (வேற்றுமைத் தொகை)

ii. சதுரம் + பெட்டி = சதுரப்பெட்டி. (பண்புத்தொகை)

iii. தாமரை + கண் = தாமரைக்கண். (உவமைத்தொகை)

II. உம்மைத்தொகையிடத்தே வருமொழித் தொடக்க வல்லினத்திற்கு இனமாகத் திரியும்.
நிலம் + தீ = நிலந்தீ. (உம்மைத்தொகை)

III. எழுவாய், பெயரெச்சம், வினைமுற்று, இடைச்சொல் அமைந்த தொடர்களாய் வருகையிலும் வருமொழித் தொடக்கவல்லினத்திற்கு இனமாகத் திரியும்.

உ-ம் :

1. மரம் + குறிது = மரங்குறிது — எழுவாய்த்தொடர்,
2. செய்யும் + காரியம் = செய்யுங்காரியம்-பெயரெச்சத்தொடர்
3. வந்தனம் + சிறியோம் = வந்தனஞ்சிறியோம் — வினைமுற்றுத் தொடர்
4. சாத்தனும் + கொற்றனும் = சாத்தனுங்கொற்றனும் — இடைச்சொற்றொடர்.

இவ்வறே சகரஒற்று, தன்னினமாகிய ஞகரஒற்ருயும், தகர ஒற்று, தன்னினமாகிய நகரஒற்ருயும் திரியும்.

உ-ம் : உண்டனஞ் சிறியோம்.
உண்டனந் தெரிந்தோம்.



IV. இரண்டாம் வேற்றுமைத் தொகையாகவும், எழுவாய்த் தொடராகவும் வருமிடங்களிலும் வருமொழி வல்லினத்திற்கு இனமாகும்.

உ-ம் : கலம் + கொண்டான் = கலங்கொண்டான்.
நிலம் + சிறிது = நிலஞ்சிறிது.

V. மகரஒற்றின்முன் உயிரும், வகரமெய்யும் வரின் மகரஒற்றுக் கெடும்.

உ-ம் : மரம் + அடி = மரவடி
அறம் + வலிமை = அறவலிமை.

சில இடங்களில் மகரத்தின் முன்வகரம் கெடாதும் வரும்.
ஆரும் + வாய்ப்பு = ஆரும் வாய்ப்பு.
(இது பெயரெச்சத் தொகாநிலைத்தொடர்.)

(உ) லகர ளகரவீற்றுப் புணர்ச்சி :

I. வேற்றுமைத்தொகை, பண்புத்தொகை, உவமைத்தொகைகளிலே வருமொழியீற்றில் லகர ளகர ஒற்றுக்கள் வந்து வருமொழித் தொடக்கத்திலே வல்லினம் வரின் லகரம் றகரமாகவும் ளகரம் டகரமாகவும் திரியும்.

1. வேல் + கை = வேற்கை — வேற்றுமைத்தொகை.
2. பால் + சொல் = பாற்சொல் — உவமைத்தொகை.
3. கால் + கடவுள் = காற்கடவுள் — பண்புத்தொகை.
*(கால் — காற்று — வாயுதேவன்)
1. அருள் + பயன் = அருட்பயன் — வேற்றுமைத்தொகை.
2. வாள் + கண் = வாட்கண் — உவமைத்தொகை.
3. வேள் + பெரியன் = வேட்பெரியன் — பண்புத்தொகை.
(வேளாகிய பெரியன் – இருபெயரொட்டுப் பண்புத்தொகை)

II. எழுவாய்த்தொடர், உம்மைத்தொகை ஆகியவற்றிலே திரியாது இயல் பாகும்.

1. மயில் + பெரிது — மயில்பெரிது — எழுவாய்த்தொடர்.
மயில் + குயில் — மயில்குயில் — உம்மைத்தொகை.
2. அருள் + பயந்தது – அருள்பயந்தது—எழுவாய்த்தொடர்.
அருள் + புகழ் — அருள்புகழ் — உம்மைத்தொகை.

III. இரண்டாம் வேற்றுமைத் தொகை, மூன்ரும் வேற்றுமைத் தொகை வருமிடங்களிலும் திரியா.

உ-ம் :

(i) வால் காட்டாதே } தேள் கொன்ருன் } இரண்டாம் வேற்றுமைத் தொகை.

(ii) வேல் குற்றினன் / தேள் கடிக்க விட்டான் } மூன்றும் வேற்றுமைத்தொகை

IV. தனிக்குற்றெழுத்தைச் சார்ந்துவரும் லகரளகர ஒற்றுக்கள் எழுவாய்த்தொடரிலும், உம்மைத் தொகையிலும் இயல்பாக வருவதோடு திரிந்தும் வரும்.

உ - ம் : பல் + சிறிது = பற்சிறிது / கள் + கொடிது= கட்கொடிது } எழுவாய்த் தொடர்

கல் + பல் = கற்பல் / கள் + சாராயம் = கட்சாராயம் } உம்மைத் தொகை.

V. நெல், செல், கொல், சொல் என்பன எழுவாய்த் தொடரிலே திரிந்தே வரும் என்பர் நாவலர். அவர் தரும் உதாரணம் : நெற்கடிது, செற்கரிது (செல் - மேகம்) கொற்கரிது (கொல்- கொல்லன்), சொற்பெரிது.

VI. அல்வழித் தொடர்களிலும், வேற்றுமைத் தொடர்களிலும் வருமொழித் தொடக்கத்திலே தகரம் வருமாயின் லகரம் றகரமாகவும் டகரம் தகரமாகவும் மாறுவதோடு, தகரமும் முறையே றகரமாகவும் டகரமாகவும் மாறும்.

| அல்வழி | வேற்றுமை |
|---|---|
| பல் + தீது = பற்றீது | பல் + தூய்மை = பற்றூய்மை |
| முள் + தீது= முட்டீது | கள் + தீமை = கட்டீமை. |

VII. தனிக்குற்றெழுத்தைச் சார்ந்து வரும் லகர ளகரங்கள் அல்வழித் தொடர்களிலே றகர டகரமாக மட்டுமன்றி ஆய்தமாகவும் திரியும்.

i. பல் + தீது = பற்றீது, பஃறீது.

ii. கள் + தீது = கற்றீது, கஃடீது.

VIII. நெட்டெழுத்தைத் தொடர்ந்து வருவனவும், குற்றெழுத்தைச் சாராதனவுமான லகர ளகர ஒற்றுக்களோடு கூடிய நிலைமொழிகள் தகர ஒற்றினை வருமொழித் தொடக்கத்திலே பெறும்போது கெடுவதோடு தகர ஒற்றுமுறையே றகர மாகவும் டகரமாகவும் திரியும்.

உ - ம் ; வேல் + தீது = வேறீது / வாள் + தீது = வாடீது } எழுவாய்த் தொடர்

ii. அண்ணல் + தாராய் = அண்ணறாராய் / மக்காள் + தலைப்படும்= மக்காடலைப்படும் } விளித் தொடர்



iii. வால் + தலை = வாறலை / தாள் + தலை = தாடலை } உம்மைத்தொகை

iv. நடப்பல் + தக்கோய் = நடப்பறக்கோய் / வந்தாள் + தேவி = வந்தாடேவி } வினைமுற்றுத் தொடர்

IX. லகரளகர ஒற்றீற்று நிலைமொழிகள் மெல்லின ஒற்றுக்களை முதலாகவுடைய வருமொழிகளோடு புணருகையில் மெல்லின எழுத்துக்களாய் வேற்றுமை அல்வழி ஈரிடங்களிலும் மாறும்.

கல் + நன்று = கன்னன்று / கள் + நன்று = கண்ணன்று } எழுவாய்த்தொடர்;

கல் + நன்மை = கன்னன்மை / கள் + நன்மை = கண்ணன்மை } வேற்றுமைத்தொகை

இவ்வாறு லகர ளகரங்களை ஈற்றிற் கொண்ட நிலைமொழிகள் விகாரங்களை அடைவது பழங்கால வழக்கு. இன்று இவற்றின் புணர்ச்சி விதி இறுக்கமாகக் கடைப்பிடிக்கப்படுவதில்லை.

### 5. வடசொற் புணர்ச்சி

(அ) உயிரீறும் முதலுமாய் வரும் நிலைமொழி வருமொழி வடசொற்கள் புணருதல் :

தமிழ்ச்சொற்கள் நிலைமொழியீற்றிலும் வருமொழித் தொடக்கத்திலும் உயிர்வரப் பெறுமாயின் 'வ'கர'ய'கர உடம்படுமெய்களைப் பெறும் எனக் கண்டோம். தமிழிலே வந்து வழங்கும் வடமொழிச் சொற்றொடர்கள் சில நிலைமொழியீற்றிலும் வருமொழித் தொடக்கத்திலும் தமக்குரிய உயிர்களைப் பெறுமாயின் அவை புணரும் வகை கீழே தரப்படுகின்றது.

வடசொற்கள் பல தமிழிற் பயின்று வருவதால் இப்புணர்ச்சியினையும் அறிந்திருப்பது நன்று.

1. அ, ஆ வின் முன்பு அ, ஆ வரின் நிலைமொழியினதும் வருமொழியினதும் ஈறும் முதலுங்கெட்டு 'ஆ' தோன்றும்.

உ - ம் : சிவ + ஆலயம் = சிவாலயம்
தேச + அதிபதி = தேசாதிபதி
ஜன + அதிபதி = ஜனாதிபதி (சனாதிபதி)
சேநா + அதிபதி = சேநாதிபதி (சேனாதிபதி) எனவும் எழுதுவர்)

இக்காலத்தில் நினைவு + அஞ்சலி என்ற தொடர் தமிழ்நிலைமொழியோடு வருமொழியாக வடமொழிவந்து புணர்ந்து

'நினைவாஞ்சலி' என்ற புதியதொரு சொற்றொடர் அமைகின்றது. இது வடமொழி தமிழ்மொழிக் கலப்பாகும். இதனை நினைவஞ்சலி எனக் குற்றியலுகரப் புணர்ச்சி விதி (நினைவு + அஞ்சலி) யினைக் கையாண்டு புணர்த்துதலே சிறப்பு.

(இ) இ ஈயின் முன்பு ஈ, வரின் இரண்டும் கெட்டு 'ஈ' தோன்றும்.

உ - ம் ; சனி + ஈசுவரன் = சனீசுவரன்.
நதி + ஈசன் = நதீசன்.

(ஈ) உ, ஊ வின் முன் உ, ஊ வரின் ஈறுமுதல் இரண்டுங்கெட்டு 'ஊ' தோன்றும்.

உ - ம் : குரு + உபதேசம் = குரூபதேசம் (குருவுபதேசம் எனவும் இக்காலத்திற் புணர்த்துவர்.)
வதூ + உத்துவாகம் = வதூத்துவாகம், (வதூ-மணப்பெண். உத்துவாகம் திருமணம்.

(உ) அ, ஆ முன் இ, ஈ, வரின் ஈறு முதல் இரண்டும் கெட்டு 'ஏ' தோன்றும்.

உ - ம் ; நர + இந்திரன் = நரேந்திரன்;
நாக + இந்திரன் = நாகேந்திரன்.
மகா + ஈசுவரன் = மகேசுவரன்.

(ஊ) அ, ஆவின் முன் உ, ஊ வரின், ஈறு முதல் இரண்டும் கெட்டு 'ஓ' தோன்றும.

உ - ம் : இராச + உபசாரம் = இராசோபசாரம்.
யமுனா + உற்பத்தி = யமுனோற்பத்தி.

(எ) அ, ஆ வின் முன் ஏ, ஐ வரின் ஈறு முதல் இரண்டுங்கெட்டு 'ஐ' தோன்றும்.

உ - ம் : லோக + ஏகநாயகன் = லோகைகநாயகன்.
மகா + ஐசுவரியம் = மகைசுவரியம்.

(ஏ) அ, ஆ வின் முன் ஓ, ஔ வரின் ஈறு முதல் இரண்டும் கெட்டு 'ஔ' தோன்றும்.

உ - ம் :
கங்கா + ஓதம் = கங்கௌதம். (ஓதம் - நீர்)
திவ்விய + ஔடதம் = திவ்வியௌடதம். (ஔடதம் - மருந்து)

# 4. வாக்கியவியல்

"என்னை, எழுத்தும் சொல்லும் யாப்பும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே. பொருளதிகாரம் பெறேமேயெனின், இவை பெற்றும் பெற்றிலேம்."

— இறையனார் அகப்பொருளுரை.

பாண்டிநாட்டிலே ஒருகாலத்திலே பெரும் பஞ்சம் உண்டாயிற்று. பாண்டியமன்னன் தன்னாலே ஆதரிக்கப்பட்டுவந்த புலவர்கள் யாவரையும் அழைத்து, "இப்பஞ்சகாலத்தில் என்னால் உங்களை ஆதரிக்க முடியாதிருக்கிறது. எனவே நீங்கள் எங்காவது சென்று நாட்டின் பஞ்சம் நீங்கியதும் வாருங்கள்" என்று அவர்களை அனுப்பிவைத்தான். இவ்வாறு பன்னிரண்டாண்டுகள் கழிந்தன. பாண்டிநாட்டிலே மீண்டும் வசியும் வளமும் சுரக்கலாயின. பாண்டியன் தன் ஏவலரை அழைத்து, "நாட்டின் பஞ்சம் நீங்கிவிட்டது. நீங்கள் சென்று தமிழ் வல்லாராகிய புலவர்களை அழைத்து வாருங்கள்" என்று அனுப்பினான்.

அவ்வாறே சென்ற ஏவலர் எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமும் வல்ல புலவர்களை அழைத்து வந்தனர். "பொருளதிகாரத்திலே வல்ல புலவர்களை எம்மால் அழைத்துவரல் இயலவில்லை" என்று அவர்கள் மன்னனுக்குக் கூறியபொழுது, அவன் கூறிய கூற்றே இந்த இயலின் தொடக்கத்திலே தரப்பட்டது.

மன்னனின் கூற்று நூற்றுக்கு நூறு உண்மையே. ஒரு மொழியிலுள்ள எழுத்தியலையும் சொல்லியலையும் கற்பதன் முதன்மையான நோக்கம் அதன்கண் பொதிந்துள்ள பொருளினை அறிதற்கேயாம். பொருளினை வெளிப்படுத்தும் கருவியாயுள்ளது வாக்கியம். எனவே நாம் இதுவரை தெரிந்துகொண்ட எழுத்தும் சொல்லும் சொற்றொடரும் வாக்கியவமைப்பிற்கு உறுதுணையான உறுப்புக்கள் மட்டுமே என்பதை நாம் நினைவிற் கொள்ளல் வேண்டும்.

நாம் பிறர்க்கு எமது கருத்தினைப் புலப்படுத்த வாக்கியங்களைக் கையாள்கின்றோம். உரையாடலின்போது கையாள்வதும் வாக்கியமே. எழுதும்பொழுது கையாள்வதுவும் வாக்கியமே. ஆனால் இரண்டிற்கும் வேறுபாடு உண்டு. உரையாடும்பொழுது எமது உரையாடல், சொற்கூட்டங்களிலே மட்டும் தங்கியிருப்பதில்லை. முகபாவம், சைகை, உணர்வின் வெளிப்பாடான ஒலி என்பனவும் உரையாடலுக்குத் துணைக்கருவிகளாகின்றன.

இவற்றின் உதவியால் முழுவாக்கியங்களைக் கூறாமலே சில சொற்களாலும் சொற்றொடர்களாலும் எமது கருத்துக்களை, உணர்வுகளை நாம் புலப்படுத்திவிடலாம்.

ஆனால் எழுதும்பொழுதோ மேற்குறித்த துணைக்கருவிகள் இருப்பதில்லை. எனவே நாம் எம்கருத்துக்களை முழுமையான வாக்கியங்களிலே அமைக்க வேண்டிய கட்டப்பாடு எமக்கு உண்டாகின்றது. கேட்போர், வாசகராய் மாறிவிடும் நிலையிலே நாம் எழுதுவன யாவும் அவர்களுக்கு முழுமையான விளக்கத்தினைத் தரல்வேண்டும். இல்லையேல் எமது எழுத்தால் எவ்வித பயனும் இல்லை என்பதே பொருள்.

பேச்சுவழக்கினையும் எழுத்துவழக்கினையும் உறுப்புக்களாய்க் கொண்டது மொழியியல். எழுத்து வழக்கிற்கே முதன்மை வழங்குவது இலக்கணம். ஈராயிரம் ஆண்டுகளுக்கு மேலாய் எழுத்தில் வடிக்கப்பட்ட கருத்துக்களையும் உணர்வுகளையும் அவ்வக் காலத்தில் வாழ்ந்தோரும் இக்காலத்தில் வாழ்வோரும் விளங்கிக்கொள்ள எழுத்தே துணைபுரிவதால் காலவிடைப்பட்ட பொருள்கள் யாவற்றையும் தெரிவதற்கு அந்த எழுத்து மட்டுமன்றி அதன் ஒழுங்கினை விளக்கி நிற்கும் இலக்கணமும் உதவுகின்றதெனலாம். உதாரணமாகச் ''சாத்தா கேண்மியா'' என்ற இச்சிறு வாக்கியத்தை இன்று நாம் விளங்கிக்கொள்வதற்கு ''மியா'' என்பது அசைச்சொல் என்று எடுத்துக்காட்டும் இலக்கணமே உதவுகின்றது. இலக்கணம் இல்லையேல், நாம் ஊகித்து விளங்கிக் கொள்வன பலவும் பிழையாய் அமைந்துவிடவும் நேரலாம். ஆக, வளர்ந்து செல்லும் ஒரு மொழியினது தொடர்ந்தேர்ச்சியான கருத்துக்களைப் பிழையின்றித் தெரிந்துகொள்ள இலக்கணம் இன்றியமையாததாகின்றது. இதனாலேதான் எம்முன்னோர் இலக்கணக்கல்வியைக் கட்டாயமாக்கினர். எனவே, இன்றைய தலைமுறையினர் தமிழிலுள்ள பழைமையான நூல்களையும் அவை கூறும் கருத்துக்களையும் பிழையின்றி விளங்கிக் கொள்ள ஓரளவாவது இலக்கணக்கல்வி இன்றியமையாததே.

**1. உரைநடையும் கவிதையும் :**

முற்காலத்திலே தமிழிலக்கணக்கல்வி யாவும் பெரும்பாலும் கவிதையமைப்பையும் பொருளையும் அறிவதற்கே பயன்பட்டன. தொல்காப்பியம், உரைநடைபற்றிக் குறித்துள்ளபோதும், சிலப்பதிகாரம் என்ற காப்பியத்திலே ஆங்காங்கு உரைநடை கையாளப்பட்டுள்ளபோதும் முதன்முதல் உரைநடையிலேயே அமைந்த நூலாய் எமக்குக் கிடைப்பது நக்கீரர் என்ற புலவர் 'இறைய



னார் அகப்பொருளுக்கு எழுதிய உரையேயாகும். ஐரோப்பியரின் ஆட்சி தமிழ்கூறும் நல்லுலகிலே ஏற்படும் வரை தமிழிலே கையாளப்பட்ட உரைநடையாவும் கவிதை நூல்களுக்கும் இலக்கண நூல்களுக்கும் சமய தத்துவ நூல்களுக்கும் எழுதப்பட்ட உரைகளுக்கே பயன்பட்டு வந்தன. இலக்கிய நுண்ணுணர்வுகளைப் புலப்படுத்த உரைநடை ஏற்றதன்று என்ற கருத்தே கற்றறிந்தோரிடையே நிலவியது. சென்ற நூற்றாண்டிலே 'இலக்கணச் சுருக்கம்' எழுதிய ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் 'வசனநடை கைவந்த வல்லா'ளராய், விளங்கியபோதும் அவர்தம் இலக்கண நூலில் எடுத்தாண்ட உதாரணங்களிலே பெரும்பான்மையானவை முற்காலக் கவிதை நூல்களிலிருந்தே பெறப்பட்டுள்ளதை நோக்கினால் 'வல்லோர் அணிபெறச் செய்யும்' செய்யுள்களுக்கே இலக்கணம் உரியது என்ற கருத்தே தொடர்ந்து நிலவியது என்பது கொள்ளக் கிடக்கிறது.

இக்காலம் சனநாயக காலம்; கவிதைகூட உரைநடைப் பாங்கிலே அமையவேண்டும் என்ற முழக்கம் எழுந்துள்ள காலம். இலக்கியம் என்பது உரைநடையில் அமைந்த நூல்களையே சுட்டுமளவிற்கு உரைநடை செல்வாக்கடைந்து வருகின்றது. இந்நிலையிலே பழந்தமிழ்க் கவிதையிலக்கியங்களை விளங்கிக் கொள்வதற்கு மட்டுமன்றி, இலக்கியமென்றாலே உரைநடையென்ற எண்ண வளர்ச்சியை உள்வாங்கி, இன்றைய வசனநடைக்குப் பொருத்தமானதும் வரையறைசெய்ய வல்லதுமான இலக்கணத்தைக் கற்பது இன்றியமையாது தேவைப்படுகின்றது. ஆக, பழைமையையும் புதுமையையும் இணைக்கவல்லதும் பழைமையிலே வேண்டப்படுவனவற்றை ஏற்றுப் புதியனவற்றிற்கும் வழிகாட்ட வல்லதுமான ஓர் இலக்கணநூல் செய்வார் தமிழ்மொழிக்கு நல்லாக்கம் அளிக்க வல்லார் என்பதற்கு ஐயமில்லை.

'வாக்கியவியல்' என்னும் தலைப்பின் அமைந்துள்ள இவ்வியலிலே வாக்கிய ஆக்கத்திலே நாம் கவனிக்கவேண்டிய பல அமிசங்களும் விளக்கப்படும்.

**2. எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்:**

யானை புலியைக் கொன்றது.

இவ்வாக்கியத்திலே மூன்று சொற்கள் உள்ளன. அவை ஓர் ஒழுங்கில் அமைந்திருக்கின்றன. முதற்சொல் செயலைச் செய்த கருத்தாவைக் குறிப்பது அஃது எழுவாய். அதன் செயலைப் பட்ட (அநுபவித்த) பொருள் புலி செயப்படுபொருளா? பயனி

லையா ? அது பயனிலை. கருத்தா செய்த வினை — செயல் — இறுதியிலே உள்ளது. இவ்வாறு எழுவாய், செயப்படுபொருள், பயனிலை என்ற ஒழுங்கில் அமைவதே தமிழ் முறைமை.

1. கொன்றது யானை புலியை.
2. புலியைக் கொன்றது யானை.
3. கொன்றது புலியை யானை.
4. புலியை யானை கொன்றது.
5. யானை கொன்றது புலியை.

என்று இச்சொற்களை மாற்றியமைப்பதனாலே பொருள் வேறுபடவில்லை என்பது உண்மையே. ஆனால், தமிழுக்குள்ள ஒழுங்குமுறை மாறுவதாலே கருத்தமைதியும் வாக்கியத்திற்கு வாகக்கியம் வேறுபடுகின்றது.

ஒரு செயலுக்கு முதன்மையாக வேண்டப்படுவது கருத்தா. இங்குத் தரப்பட்ட வாக்கியத்திலே (1) கொல்லலாகிய செயலே கருத்தாவிலும் முதன்மை பெறக் காண்கின்றோம்.

இரண்டாவது வாக்கியத்திலே கருத்தாவிலும் செய்ததைப் பட்டபொருளுக்கு (செயப்படுபொருளுக்கு) முதன்மை வழங்கப்பட்டுள்ளது.

மூன்றாவது வாக்கியத்திலே செயல், செய்ததைப் பட்ட பொருள், கருத்தா என்று ஒழுங்குமுறை மாறுகின்றது.

நான்காவது வாக்கியத்திலே செய்ததைப் பட்டபொருள், கருத்தா, செயல் என்ற ஒழுங்கமைப்பு வந்துள்ளது.

ஐந்தாவது வாக்கியத்திலே கருத்தா, செயல், செய்ததைப் பட்ட பொருள் என்ற ஒழுங்குமுறை உள்ளது.

சில சந்தர்ப்பங்களிலே இவ்வாறு முதன்மைகள் மாறும் நிலைகளைக் காட்டுதற்கான நுட்பவேறுபாடுகள் வேண்டப்படலாம். கவிதையிலே ஓசைகிசைய இவ்வாறான ஒழுங்குகள் அமையலாம். ஆனால் உரை நடையிலே எழுவாய், செயப்படுபொருள், பயனிலை என்ற ஒழுங்கே உகந்ததாகும். நீண்டவாக்கியங்களிலே இம்முறை பொருளின் தெளிவுக்கு மிகவும் இன்றியமையாததாகும். மொழியைக் கையாள்வதற்கு இம்முறை எளிதானது என்பதையும் நாம் மறுத்தலியலாது.

3. தோன்றா எழுவாய் :

இராமன் மிகவும் நல்லவன்.

மேலே தரப்பட்டது ஒரு வாக்கியமாகும். இவ்வாக்கியத்திலே செயப்படுபொருள் இல்லை. எனினும் இவ்வாக்கியம் முழுமையான பொருள் தந்து நிற்கின்றது. எனவே எல்லாச் சந்தர்ப்



பங்களிலும் எல்லா வாக்கியங்களிலும் முழுமையான கருத்தைத் தருவதற்குச் செயப்படுபொருள் இன்றியமையாததன்று என்பது புலனாகின்றது. வாக்கியப்பொருட் புலப்பாட்டுக்கு எழுவாயும் பயனிலையுமே இன்றியமையாதவை. எந்தவாக்கியமும் எழுவாய், பயனிலை என்ற ஈருறுப்புக்களையும் பெறுதல் கட்டாயமாகும். இருப்பினும் எழுவாய் வெளிப்படத் தோன்றாமல் நிற்குமிடங்களும் உள்ளன.

உ - ம் : 1. ஓதாமல் ஒருநாளும் இருக்கவேண்டாம்.
2. பட்ட காலிலே படும்.
3. ‘வாக்கியப் பொருளமைதிக்கு எழுவாயும் பயனிலையும் வேண்டும்’ என்பர்.

இம்மூன்று வாக்கியங்களிலும் முறையே ‘எவரும்’, ‘கல்,’ ‘இலக்கண ஆசிரியர்’ என்பன தோன்றா எழுவாய்களாய் மறைந்து நின்றன. இவை இவற்றையே எழுவாய்களாகப் பெறும் என்ற முன்னறிவு, உணர்வு எமக்கிருப்பதால் எழுவாய் மறைந்த நிலையிலும் இவை முழுமையான கருத்தையே தருகின்றன என்று நாம் கொள்கின்றோம்.

4. தோன்றாப் பயனிலை :

நாம் முன்பு பெயர், வினை பற்றிக் கற்றபொழுது திணை, பால், எண், இடம் ஆகியவற்றைத் தீர்மானிப்பதற்குப் பெயரிலும் வினையே இன்றியமையாதது எனக் கண்டோம். வாக்கியங்களிலே பெரும்பாலும் வினைமுற்றுக்களே பயனிலைகளாக வருகின்றன. (சிறுபான்மை பெயரும் வினுவும் பயனிலைகளாக வருதலும் உண்டு என்பது முன்னரே காட்டப்பட்டது.) ஒரு வாக்கியத்தின் கருத்து. முற்றிநிற்பது (முடிவடைந்து நிற்பது) பயனிலையிலேயே. இராமன், சந்தன் என்று எவ்வளவு பெயர்களை அடுக்கிக் கொண்டு சென்றாலும் பயனிலை இல்லாவிடத்து அப்பெயர்கள் வெறும் அறிகுறிகளாய் நிற்குமேயன்றி முழுமையான பொருள் தரமாட்டா. ஆகவே வாக்கியங்கள் எப்பொழுதும் பயனிலைகளை அவாவி நிற்கின்றன.

மிக அருமையான சந்தர்ப்பங்களிலே பயனிலைகள் தொக்கு நிற்பனவாயும் வாக்கியங்கள் அமைவதும் உண்டு.

உ - ம் : 1. மின்னுக் கெல்லாம் பின்னுக்கு மழை.
2. நலத்துக்கும் தீங்குக்கும் அவனே.
3. இவ்வாறு கூறுவதாலாம் பயன் ?

இவற்றுள் முதலாம் வாக்கியத்திற்குப் பெய்யும் என்பதும் இரண்டாம் வாக்கியத்திற்குக் காரணன் என்பதும், மூன்றாம் வாக்கியத்திற்கு யாது? என்பதும் பயனிலைகளாக மறைந்து நின்றன.

இயன்ற அளவு பயனிலையமைய வாக்கியங்கள் அமைப்பதே சிறப்பு.

தனித்தனிச் சொற்கள் சொற்றொடர்கள் கூடச் சில வேளைகளிலே வாக்கியங்கள் போல முழுக் கருத்துத் தந்து நிற்கும்.

உ-ம்: இரவு ....... நடுயாமம் ......, கனத்த இருள் ......,
நிசப்தம் ......, பயங்கரம் ...... .

இவை முறையே, அஃது இரவாகும், அப்பொழுது நடுயாமப் பொழுதாயிருந்தது, எங்கும் கனத்த இருள் மண்டிக்கிடந்தது, நிசப்தம் நிலவியது. அது பயங்கரமான ஒரு சூழ்நிலை என வர வேண்டிய வாக்கியங்களே.

கதைகள், வருணனைக்கட்டுரைகள் முதலானவற்றிலே வாக்கியங்களின் குறியீடுகளாக இத்தகைய சொற்களும் சொற்றொடர்களும் அமைவதைத் தவிர்த்தல் இயலாது. ஏனெனில் எழுதுபவன், தான் உணர்த்த விரும்பும் உணர்வுகளை உறைப்பாகப் படிப்பவனின் மனத்திலே ஏற்படுத்துவதற்கு இஃது ஒரு சிறந்த உத்தியாகும். எனினும் பொதுவாக அறிவியல் சார்ந்தனவும் விளக்கம் வேண்டப்படுவனவுமான இடங்களில் இத்தகைய உணர்வுக் கலவை வாக்கியக் குறியீடுகளைத் தவிர்த்தல் விரும்பத்தக்கதே.

5. சொற்கள் தொடர்வதும் புணர்ச்சித் தேவையும்.

தமிழ்மொழியிலே புணர்ச்சி முதன்மையான இடம் பெறுகின்றது. இதுபற்றிச் சொற்றொடரியலிலே விரிவான விளக்கம் தரப்பட்டது. பகுபதம், பகாப்பதம், சொற்றொடர் ஆகிய மூன்றின் கண்ணும் புணர்ச்சிகள் நிகழ்கின்றன.

I. பகாப்பதமானது, வேற்றுமையுருபுகள் பிற இடைச்சொற்கள் சேரும்பொழுது புணர்ச்சிக்குள்ளாகின்றது.

உ-ம்: அவை + கு = அவற்றிற்கு, அவற்றுக்கு.
பழம் + ஐ = பழத்தை.
அவன் + உம் = அவனும்.

இவை நெடுங்காலமாகப் பயின்று வருவதால் இலக்கணம் அறியாதாரும் பெரும்பாலும் இப்பதங்களை அவை புணர்ச்சியின் விளைவுகள் என்பதை உணராமலே கையாள்கின்றனர். எவரும்



'அவைகு' என்றோ, 'பழதை' என்றோ, 'அவன் உம்' என்றோ எழுதுவதில்லை. ஆனால், புணர்கின்ற உறுப்பு எது எனத் தெரியாமையாலே அவற்றிற்கு என்பதை அவற்றிற்க்கு என்றாங்கு எழுதக் காண்கின்றோம்.

II. பகுபதத்திலே பகுபத உறுப்புக்களாகிய பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி ஆகியன ஒன்று சேர்கையிலே புணர்ச்சி விகாரங்கள் நிகழலாம்.

உ-ம்: வந்தான் — வா + த் + த் + ஆன்.
படித்தான் — படி + த் + த் + ஆன்.

எவரும் 'வதான்' எனவோ 'படிதான்' எனவோ எழுதுவதில்லை. இவையும் அநுபவங்காரணமாகப் பிழைக்கு அப்பாற்பட்டவையாகின்றன.

III. இருசொற்கள் ஒன்றுடன் ஒன்று சேரும்பொழுதுதான் புணர்ச்சியிலே பிழை ஏற்படுவதற்கு அதிக வாய்ப்புக்கள் ஏற்படுகின்றன.

முள் + தாள் = முட்டாள்.
நாள் + தோறும் = நாடோறும்.
நொ + ஞெள்ளா = நொஞ்ஞெள்ளா.

என நிகழும் புணர்ச்சிகள் உண்மையிலே மிகக் கடினமானவைதாம். ஓசை நயங்கூட இவற்றில் இல்லை இக்காலத்தில் இவை வழக்கிழந்துபோயின என்பதே இவற்றின் கடினத்தன்மைக்கும். பயன்பாட்டின்மைக்கும் சிறந்த சான்று.

ஆனால், புணர்ச்சிகள் இன்றியமையாத தேவைகளாய் அமையும் இடங்களும் உள்ளன. அவற்றைச் சரியாகக் கவனியாது பிரித்தெழுத்துவதாலே பிழையான கருத்துக்களைத் தரக்கூடிய ஆபத்தும் நேர்ந்து விடுகின்றது.

உ-ம்: மேற்கு திசை.
மேற்குத் திசை.

இவற்றில், முதற்சொற்றொடர் மேற்கும் திசையும் என்ற பொருளையும் இரண்டாவது சொற்றொடர் மேற்கின்கண் உள்ள திசை எனவும் இருவேறு பொருள் தருகின்றன.

'மேற்கு திசையிலே சென்றான்' என எழுதினால் மேற்கும் திசையுமாகிய ஈரிடங்களுக்கும் (இவை ஒன்றல்ல, வெவ்வேறு என்ற விபரீதமான பொருள் ஏற்படுகின்றது) சென்றான் எனப் பொருள் ஏற்பட்டுவிடும்.

'கடையவனேனை' என்ற சொற்றொடரைக் கடையவனே என்னை என்று பிரித்துப்படிப்போர் கடையவனாகிய என்னை என்ற கருத்திற்குப் பதிலாகத் தாம் வழிபடுகின்ற இறைவனையே 'கடையவனே!' என்று விளிக்கும் பாவத்திற்கு உள்ளாகின்றனர்.

ஆடு கால் என்பதும் ஆட்டுக்கால் என்பதும் வெவ்வேறு பொருளுடையன.

ஆடும் கால் = ஆடுகால். இணற்றுத் துலாவோடு தொடர்புடைய மரம்.

ஆட்டுக்கால் என்பது ஆட்டினது கால் எனப் பொருள்படும். 'ஆடுகால்' உண்டேன் என்றெழுதினால் அது தரக்கூடிய பொருள் வேறுபாட்டினை நோக்குங்கள். எனவே தேவையையும் கருத்தையும் நோக்கிச் சொற்களிடையே புணர்ச்சி விதியைக் கையாளுதல் தவிர்க்கவியலாததே.

சில சந்தர்ப்பங்களிலே நாம் சொல்வது ஒன்றாயும் எழுதுவது ஒன்றாயும் அமையும் விபரீதமும் நிகழ்கின்றது.

உ - ம்: வீட்டுக்குப் போனான் என்று சொல்லுவோம். எழுதும்போதோ 'வீட்டுக்கு போனான்' என்று எழுதுவோம். பின்பு இதனை வாசிக்கும்போது தமிழ் தெரியாதவரைப்போலப் பிறமொழியினரைப்போல, அச்சொற்றொடரை வாசிக்கவேண்டிய இடர்ப்பாடு உண்டாகின்றது.

தமிழ்மொழிக்கென்று சிறப்பான ஓசை உள்ளது. அடிப்படையான சில புணர்ச்சிகளை அறியாது அவற்றைப் புணர்த்தாது எழுதியும், வாசித்தும் வந்தால் எம்மையறியாமலே தமிழின் சிறப்போசைத் திறத்தினை நாம் அழித்துவிடுகின்றோம் என்பதுதான் பொருள்.

உ - ம்: பாழ்ங்கிணறு — பாண்கிணறு ஆகின்றது.
தைத்திங்கள் — தைதிங்கள் ஆகின்றது.
பூங்கொடி — பூக்கொடி ஆகின்றது
தேடிக்கண்டான் — தேடிகண்டான் ஆகின்றது.
உண்டாற் கொடுப்பேன் — உண்டால் கொடுப்பேன் என்றாகின்றது.

(லகர ஒற்று நிலைமொழியீற்றிலே வந்து வருமொழித் தொடக்கத்தில் வல்லினம் வந்தால் லகர ஒற்று றகர ஒற்றாகும்,

உ - ம்: தன்னால் + கெட்டான் = தன்னாற் கெட்டான்.

இதனைத் தன்னால் கெட்டான் என்றோ தன்னால்க் கெட்டான் என்றோ எழுதாது தன்னாலே கெட்டான் என்று எழுதினால் ஏகாரச்



சாரியை அமைந்து பிழைநேராது. கடினமான புணர்ச்சிகள் வருமிடங்களிலே வேண்டியவிடத்திலே சாரியைசேர்த்து வழங்குவதன் மூலம் பிழையினின்று தவிரலாம்,

ழ், ய், ர் ஆகியன சொல்லிடையில் வந்தால் மேலும் ஓர் ஒற்றெழுத்துத் தொடர்ந்து வரல்வேண்டும் என்பது விதி.

உ - ம்: வாழ்த்து, பொய்த்தது, பார்த்தான்.

இவ்விதியினைத் தெரியாதார் யாழ்பாணம், காய்சல், பார்தான் என்றே எழுதுவர்

இவற்றையெல்லாம் நோக்கும் பொழுது, சொல் சொற்றொடர்களைப் புணர்த்தும் புணர்ச்சி விதிகளை ஓரளவாவது அறிந்திருப்பதன் கட்டாயத்தினை நாம் உணர்ந்து கொள்ளலாம்.

புணர்ச்சி விதிகளை அறிந்து கையாள்வதால் ஏற்படக் கூடிய தன்மைகள்:

1. கருதிய கருத்தைப் பிழையின்றி வெளிப்படுத்தலாம்:
2. தமிழிற்கேயுரிய சிறப்போசைகளை உணர்ந்து அவற்றை நன்முறையிலே கையாளலாம்.
3. நாம் எதைக் கருத்திற்கொண்டு எழுதுகின்றோமோ அதே கருத்தினை, வாசிப்பவரும் பெற வாய்ப்பு உண்டாகும்.

6. வாக்கியங்களிலே கையாளப்படும் சொற்களும் அவற்றின் பொருளுணர்ச்சியும்.

நாம் கையாளுஞ் சொற்கள் யாவும் பொருள் கொண்டவை. தொடக்கத்திலே ஒருபொருளே தந்த சொற்கள் பல, காலப் போக்கிலே வேறு வேறு பொருள்களைத் தருவனவாய் வளர்ச்சியடைவதையும் சில சொற்கள் தாம் பெற்றிருந்த பொருளை இழப்பதையும், நாம் அநுபவவாயிலாகக் காண்கிறோம்.

உ - ம்:
i. மணம் — இச்சொல் தொடக்கத்திலே நல்ல மணத்தையே குறித்தது. பின்பு காரணப் பெயராய்த் திருமணத்தைக் குறிக்கப் பயன்பட்டது. இன்று இவற்றோடு அருவருப்பை உண்டாக்கும் தீய மணத்தையும் (துர்க்கந்தம்) அது குறிக்கிறது. "சீ! இந்தச்சாய்கடை மணக்கிறது" என்னும் வாக்கியத்தை நோக்குக.
ii. நாற்றம் — இன்று இது நன்மணம் என்ற கருத்தினை இழந்துள்ளது.

இவை போலவே காமம் (முற்காலத்திலே காதலுக்குப் பயன் பட்டசொல்.), மாண்டது (மாட்சிமைப்பட்டது என்பதும் முன்னைய பொருள்), இறும்பூது (புதுமை, வியப்பு என்பன முன்னைய கருத்துக்கள்) முதலாக வரும் சொற்களையும் நோக்குக.

பெரும்பான்மையரான மக்களாலே (பிழையான சொல்லா யிருப்பினும் மீண்டும் மீண்டும் கையாளப்படுவதால் ஒரு சொல் புதிய கருத்தைத் தருவதும் உண்டு

உ - ம் : பாவனை. இதன் உண்மையான பொருள், ஒன்றை வேறொன்றாகக் கருதிக் கையாளல் என்பதே. இன்று இந்தச் சொல், பயன்பாடு என்ற புதுப்பொருளைப் பெற்றுள்ளதை நோக்கலாம்.

உ - ம் : இந்தப் புடவை சிறந்த பாவனைக்குரியது.
இது நல்லாய்ப் பாவிக்கும்.

எனினும் இத்தகைய சொற்களை மிகவும் நெகிழ்ச்சியான வகையிலே வாக்கியங்களிலே கையாள்வதால் ஏற்படக்கூடிய தீமையையும் நாம் கருத்திற் கொள்ளல்வேண்டும். ' அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு '. இன்று ஆங்கிலச் சொற்கள், வடசொற்கள் ஆகியவற்றை இவ்வாறு கலப்புச் சொற்களாய் அமைத்துத் தமிழுக்கு வேண்டாத பல சொற்களைச் சேர்க்கும் விபரீதம் நடந்து தருகின்றது.

| | | |
|---|---|---|
| உ - ம் : | சீக்காளி | = Sick - (நோய்) + ஆளி. |
| | க்ஷீணித்தது | = க்ஷீணம் - தேய்வு |
| | பிறக்கிராசியார் | = Proctor ஓடு ஆர்' மரியாதைப் பன்மை சேர்க்கப்பட்டுள்ளது. |
| | தனித்துவம் | = தனி என்ற தமிழ்ச்சொல்லோடு 'துவம்' என்ற வடமொழி விகுதியைச் சேர்த்தமைத்த சொல் இத்தகைய சொற்களைக் கலப்புச் சொல் (Hybrid) என்பர். |

7 தொழிற்பெயர் வினையடியாதல் :

தொழிற்பெயர் வினையடியாகப் பிறப்பது வினையடியிலிருந்தே தெரிநிலைவினைமுற்றுப் பிறக்கின்றது.

உதாரணம் : அடித்தான் - அடி-வினையடி.

சிலவேளைகளிலே வினையடிக்குப் பதிலாகத் தொழிற்பெயரையே வினையடியாக்கி வாக்கியங்களிற் கையாள்வர்.



உ - ம் : முயற்சி + கிறு + ஆன் = முயற்சிக்கிறான். இதனை முயல் + கிறு + ஆன் எனப் புணர்த்தி முயல்கிறான் என அமைத்துக்கொள்வதே சிறப்பு:

8. சில இலக்கண வழுக்கள் வாக்கியங்களிலே இடம்பெறுதல் :

i. சொற்கள் வெளியே வராமல் குழற, கண்களால் தாரை தாரையாக நீர் வடிந்தபடி அவள் உயிர் பிரிந்தது.

இவ்வாக்கியத்திலே ' கண்களால் நீர் வடித்தபடி ' எனப் பிறவினையில் அமைக்கவேண்டிய கருத்தைத் தன்வினையில் அமைத்துள்ளமை வழுவாகும்.

ii. அப்படிப்பட்ட ஒருவர்தான் நம்முடைய பாரதியார்.

ஒருவர் என்ற சொல்லிலே 'அர்' என்ற பன்மை விகுதி வந்துள்ளது ஒருவரையே இங்கு மரியாதைப் பன்மையில் 'அர்' விகுதி கொடுத்து அழைத்துப் பின் தான் என்ற ஒருமை இடைச்சொல்லை அளித்தது எண் வழு 'அவர் தன் மகனை இழந்தார்' என்று வேற்றுமைத் தொகையாகக் கையாண்டவிடத்தும் எண்வழு நிகழ இடம் ஏற்பட்டுள்ளது.

iii. இந்த நாட்டிலே வறுமையும், துன்பமும் நோயும் தாண்டவமாடுகின்றது.

இங்கு எழுவாயாக மூன்று சொற்கள் வருகின்றன. மூன்றுஞ் சேர்ந்து கூட்டெழுவாயாக அமைந்தபின் ஒருமைப் பயனிலையைக் கையாண்டது எண்வழு.

iv. நீண்டகாலம் நிலைக்கக்கூடியதும் எவராலும் போற்றக்கூடியதும் எமக்குப் புகழ்தரக் கூடியதுமான அறங்களையே நாம் செய்தல்வேண்டும்.

இங்குக் 'கூடியதும்' என்ற சொல் மூன்றுமுறை கையாளப் படினும் அம்மூன்றும் ஓரே பொருளைக் குறிக்கவருவனவே. ஆனால், இவ்வாக்கியத்திலே இவற்றை அடைகளாகப்பெற்ற பொருள், (அறங்கள்) பன்மையில் அமைந்திருப்பதால் எண்வழு நேர்ந்துள்ளது.

v. எம்முடைய செயல்கள் பிறர்க்கு நன்மையாகவும் துன்பம் தராதனவாகவும் பயனுடையவையாயும் இருத்தல்வேண்டும்.

'உம்'மையிடைச்சொல் கொண்டு சொற்களை இணைக்கும் பொழுது அச்சொற்கள் ஓரேதன்மையனவாயிருத்தல் வேண்டும்'

நன்மையாகவும், துன்பம் தராதனவாகவும் பயனுடையன வாகவும் என்று மூன்றும் மூன்று வெவ்வேறு வடிவங்களில் வந்துள்ளமை வழுவாம்;

நன்மை தருவனவாகவும் துன்பம் தராதனவாகவும் பயன் தருவனவாகவும் இருத்தல் வேண்டும் என அமைவதே சிறப்பு.

vi. ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரவர்கள் யாழ்ப்பாணத்து நல்லூரிலே அவதரித்தார்.

நாவலரவர்கள் என எழுவாய் அமைந்துள்ளது. அவ்வாறு யின் பயனிலையும் அவதரித்தார்கள் என்றிருப்பதே பொருத்தம். வேறுவகையில் எழுதுவதாயின், 'ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் யாழ்ப்பாணத்து நல்லூரிலே அவதரித்தார்' என எழுதலாம்.

vii. அவர்கள் அவனுடன் நடந்து கொள்ளும் முறையை நோக்கினால் அவர்கள் அவனை எவ்வளவு வெறுக்கிறார்கள் எனத் தெரியும்.

இவ்வாக்கியத்தின் பயனிலை 'தெரியும்' என்பது. 'எது தெரியும்?' என்ற வினாவிற்கு விடை கிடைத்தால் மட்டுமே இஃது எழுவாயமைந்த வாக்கியம். தோன்றா எழுவாய் அமைவதற்கும் இவ்வாக்கியத்திலே இடமில்லை. 'என' என்னும் இடைச் சொல்லிற்கு மாற்றாக 'என்பது' என்ற சொல்லை அமைத்துக் கொண்டால் இஃது எழுவாயுடைய பிழையற்ற வாக்கியமாய் அமைந்திருக்கும்,

viii. இந்த நூல், பேராசிரியராலே பல்லாண்டுகள் முயன்று எழுதியது.

'பேராசிரியரால்' என்ற மூன்றும் வேற்றுமைக் கருத்தா அமைந்த இவ்வாக்கியத்திலே நூல் என்னும் செயப்படுபொருள் எழுவாயாய் வந்துள்ளது. எனவே செயப்பாட்டு வினைக்குரிய 'படு' என்ற விகுதிபெற்று 'எழுதப்பட்டது' எனப் பயனிலை அமைக்கப்பட்டிருத்தல் வேண்டும். வேறுவகையாய் அமைப்பதாயின் 'இந்த நூல், பேராசிரியர் பல ஆண்டுகள் முயன்று எழுதியது' என அமைத்துக் கொள்ளலாம். (செயப்பாட்டு வினையைச் செய்வினையாகக் கூறும் மரபும் உள்ளது.) ஆனால், பேராசிரியரால் என்ற மூன்றும் வேற்றுமைக் கருத்தா, வாக்கியத்தில் இடம்பெற்றால், எழுதப்பட்டது என்ற செயப்பாட்டு வினைமுற்றே வரல் வேண்டும்.



ix. ஒரு மனிதன் என்னைச் சந்திக்க வந்தான்.

'ஒரு' என்னுஞ் சொல் அஃறிணைக்கே வரும். உ-ம்: ஒரு வீடு, ஒருபுத்தகம், ஒருபேனை, உயர்திணையில் வரும்பொழுது அச் சொல்லோடு அஃது எந்தப்பாலைக் குறிக்குமோ அந்தப் பாலுக்குரிய விகுதி சேர்க்கப்பட்டு வழங்கல் வேண்டும்.

ஒருவன் மனிதன்.
மனிதன் ஒருவன்.

என்ற இவ்விரு வடிவங்களிலே ஏதாவதொன்றைக் கையாளலாம் (ஒருவன் என்பதற்குப் பெண்பால் ஒருத்தி, ஒருவள் அன்று என்பதும் கவனிக்கத்தக்கதே.)

x. கம்பன் யாத்த இராமகாவியத்தில் தேவர்முதல் விலங்கு வரை பல பாத்திரப்படைப்புக்கள் இருக்கின்றனர்.

இவ்வாக்கியத்திலே பயனிலையாய் வந்துள்ள சொல் இருக்கின்றனர் என்பது. எழுவாயாகப் 'பாத்திரப் படைப்புக்கள்' என்ற சொற்றொடர் அமைந்துள்ளது. படைப்புக்கள் - அஃறிணை. இருக்கின்றனர் - உயர்திணை. எனவே இவ்வாக்கியத்திலே திணை வழு ஏற்பட்டுள்ளது.

கம்பன் யாத்த இராமகாவியத்தில்(லே) தேவர்முதல் விலங்கு வரை அவனாலே படைக்கப்பட்ட பாத்திரங்கள் பலர் இருக்கின்றனர். (பாத்திரங்கள்-வடமொழிச்சொல். அஃது அஃறிணைக்கே உரியது. எனினும் இன்று வழக்கிலே இஃது உயர்திணை அஃறிணை இரண்டிற்கும் பொதுப்பெயராகக் கையாளப்படுகின்றது.)

'பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல.' இஃது உண்மையே. காலமாற்றம் மகத்தானது என்பதை நாம் மறுக்கவில்லை. எனினும் பகுத்தறிவுக்குகந்த இலக்கண விதிகளை மீறல் வேண்டியதில்லை. 'இலக்கணம் மொழியின் அளவையியல்' என்பர். அளவையியல் (Logic) சிந்தனையோடு சார்ந்தது. எனவே அளவையியற்றன்மை வாய்ந்த இலக்கணத்தினை எவ்வித காரணமுமின்றி மீறுதல் சிந்தனையின் பாற்பட்டதாகாது.

### 9. வாக்கிய அமைப்பிலே மயக்கம் ஏற்படல்.

i. இராமன் இலக்குமணன் சீதை ஆகியவரோடு வனத்துக்குச் சென்றான்.

இவ்வாக்கியத்திலே மூன்று பெயர்கள் அடுத்தடுத்து வருகின்றன. குறியீடுகள் (Punctuation) எவையும் கையாளப்படவில்லை.

வாக்கியப்பொருள் புலப்பட்டாலும் எழுவாய் பற்றிய மயக்கம் உண்டாகிறது. இதே வாக்கியத்தை,

i. இராமன், இலக்குமணன் சீதை, ஆகியவரோடு வனத்திற்குச் சென்றான எனக் குறியீடிட்டு விளககம் ஏற்படுததலாம். இராமனானவன் இலக்குமணன் சீதை ஆகியவரோடு வனத்துக்குச் சென்றான் என எழுவாய்ப் பெயருக்குச் சொல்லுருபினை அளித்துத் தெளிவையுண்டாக்கலாம்.

ii. மகாத்மாகாந்தி அகழ்வாரைத் தாங்கும நிலம்போலத் தம்மைக கொனறவனையும மனனிததார்

இவ்வாக்கியத்திலே 'கொன்றவனை'யும் என்ற சொல், மயக்கத்தை ஏற்படுத்துகின்றது. கொன்றவனை (கொன்றபின்) எவ்விதம் மன்னிப்பது ?)

''மகாத்மா காந்தி அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மைச் சுட்டவனையும் (கொல்லமுன்வந்தவனையும்) மன்னித்தார்'' என எழுதுவதே முறை.

iii. பத்திவெளளம் கரைபுரண்டோடிக் கொழுந்து விட்ட காலம் பல்லவர் காலம் எனலாம்.

இவ்வாக்கியத்திலே வெள்ளம் கரைபுரண்டோடியதற்கும் கொழுந்து விட்டதற்கும் எவ்வித தொடர்புமில்லை. உருவகங்களை எவ்வித கருத்துணர்வுமின்றிக் கையாள்வதும் மயக்கத்தை ஏற்படுத்துவதேயாகும.

iv. காலஞ்சென்ற பிரதமர் டி. எஸ். சேனநாயக்க இந்நாட்டின் மீது மிகுந்த பற்றுக் கொண்டிருந்தார்.

இவ்வாக்கியத்திலே காலஞ்சென்றவர் பிரதமரா, டி. எஸ். சேனநாயக்கவா என்ற கேள்வி எழுகின்றது. பாடல்களிலே பொருள் கொள்வது போன்று சொற்களைக் கொண்டுகூட்டிப் பொருள்கொள்ள வேண்டிய தேவை, உரைநடை வாக்கியத்திற்கு வேண்டியதில்லை.

'முன்னாட் பிரதமர், காலஞ்சென்ற டி. எஸ். சேனநாயக்க' என எழுதினால் மயக்கத்திற்கு இடமிராது.

iv. இந்நாடு முன்னேற அயரா முயற்சியும் நாட்டுப் பற்றும் கொண்ட இளைஞர் முயலவேண்டுமென்று உறுதியாக, திட்டவட்டமாக, உள்ளங்கை நெல்லிக்கனியாக, திடமாக, துணிவாக எடுத்துரைக்க விரும்புகின்றேன்.

இவ்வாக்கியத்திலே உறுதியாக என்ற ஒரே சொல்லிற் சொல்ல வேண்டியதைத் திட்டவட்டமாக, உள்ளங்கை நெல்லிக்



கனியாக, திடமாக, துணிவாக என்று பல சொற்களையும் சொற்றொடர்களையும் கையாண்டு நீட்டியதனாலே கருத்து உறுதிப்பட்டுவிட்டது என்று சொல்லல் இயலாது.

vi. செல்வநாயகம் கந்தையா, முன்னாள் அதிபர், தலத்து ஓயா மகாவித்தியாலயம் காலமானார்.

இவ்வாக்கியத்திலே தலத்துஓயா மகாவித்தியாலயம் காலமாகவில்லை. காலமானவர் செல்வநாயகம் கந்தையாவே !

vii. அவனுடைய உளளத்திலே அறிவு ஒளிவிட்டுப் பிரகாசித்தது.

ஒளிவிடுவதும் பிரகாசிப்பதும் ஒரே கருத்தினையே தருவதாற் கூறியது கூறல் என்னும் குற்றம் ஏற்படுகின்றது.

viii. இல்லம் என்ற சொல்லினை அந்நாட்டவர் குறிப்பு வினைமுற்றாக என்றும் கையாளாது இடப்பெயராகவே கையாள்வதிலிருந்து அவர்களின் சொல்வளம் புலனாகின்றதன்றோ ?

' இல்லம் ' என்ற சொல் குறிப்பு வினைமுற்றானால் ( நாம் பொருள்) 'அற்றோம்' என்று அது பொருள்படும். அந்நாட்டிலே வறியவர் இல்லாமையாலே அவர்கள் அச்சொல்லை அப்பொருளிலே கையாளார். வீடு என்ற இடப்பெயர்ச் சொல்லாகவே கையாள்வர் என்ற உண்மை எத்தனை பேர்க்கு விளங்கும் ? தமிழிலக்கணத்தில் அடிப்படை அறிவு பெறாதவர்களுக்கு இந்நீண்ட வாக்கியம் எவ்வித பொருளையும் தராது. எனவே எழுதும் கருத்து, எல்லார்க்கும் புலனாகக்கூடிய வகையிலே வாக்கியங்கள் அமைக்கப்படல்வேண்டும்.

ix. அவள் கர்ணகடூரமான குரலிலே கம்பீரமாகவும் இனிமையாகவும பாடினாள்.

இவ்வாக்கியத்திலே 'கர்ணம், கடூரம்' என்ற இரு புதுச் சொற்கள் கையாளப்பட்டுள்ளன. அவை வடசொற்கள் கர்ணம் என்பது காது, கடூரம் என்பது கடுமை. காதுக்குக் கடுமையான குரல் கம்பீரமாகவும் இனிமையாகவும் இருத்தல் கூடுமோ ? இதிலே நாம் கவனிக்கவேண்டியது யாதெனில் எமக்கு விளங்காத சொற்களைப் பொருளுணர்வின்றி வெறும் ஓசைச் சிறப்பிற்காகக் கையாளல் கூடாது என்பதே.

x. நாவலர், காசிவாசி செந்திநாதையர் போன்ற பெரியார்கள் தோன்றியிராவிடில் இலங்கையிலே சைவசமயம் என்றோ அழிந்து போயிருக்கும்.

'போன்ற பெரியார்கள்' எனில் மேற்குறித்த பெரியார்களை ஒத்த வேறு பெரியார்கள் என்ற பொருள் உண்டாக்கும். இவர்களே

சைவம் காத்தோர் எனில் ஆகிய பெரியார்கள் எனவும், வேறும் பெரியார்கள் உளராயின் முதலிய பெரியார்கள் எனவும் எழுதுதல் வேண்டும்.

xi. மழை பெய்ததன் காரணமாகப் பயிர் விளைந்தது.

இவ்வாக்கியத்தில் மழை பெய்தமையே காரணம். பயிர் விளைந்தமை காரியம். இதனை மாற்றி மழைபெய்தது காரியமாகவும் பயிர் விளைவுகாரணமாகவும் காட்டப்பட்டுள்ளன.

'மழை பெய்ததனாலே பயிர் விளைந்தது' என்பதே சரியான பிரயோகம்.

xii. அங்கு வீசு தென்றலும் வீங்கிள வேனிலும் உணர்ந்தன. மாசில் வீணையும் மாலைமதியமும் இனிய ஒலியும், ஒளியும் நல்கின; பற்றற்றான் பற்றினைப் பற்றிநின்ற பழவடியார்க்குத் தீதும் நன்றாகும் என்பதற்கு ஐயமும் உளதோ?

இங்கு மூன்று வாக்கியங்கள் தொடர்ந்து ஒரே வாக்கிய வடிவில் அமைந்து பொருள் தருகின்றன. இவற்றின் கண்ணே, 'வீசுதென்றலும் வீங்கிள வேனிலும்' 'மாசில் வீணையும் மாலை மதியமும்' 'பற்றற்றான் பற்றினைப் பற்றல்' என்பன, எழுதியவருக்கு உரிமையான சொற்றொடர்களல்ல, வேறு கவிதைகளிலிருந்து கடன் பெற்றவை; தமது மன ஆற்றலையும், வித்துவத் திறத்தையும் புலப்படுத்தக் கையாளப்பட்டவை. இத்தகைய ஆடம்பரச் சொற்கூட்டங்களை அளவுமீறிக் கையாள்வதால் எவ்வித பயனுமில்லை. எதுகை மோனைகளைக் கையாண்டு எழுதும் வாக்கியங்களும் 'மலையைக்கல்லி எலியைப் பிடிக்கும்' வெற்று முயற்சியின் வெளிப்பாடுகளே. இவற்றைத் தவிர்த்துச் சொற் செட்டுடன் தெளிவாக அறிவியலுக்குப் பொருந்தும் வண்ணம் வாக்கியங்களை அமைப்பதே சிறந்தது.

10. பேச்சுத் தமிழ்ச் சொற்களைக் கையாளல்

இலக்கண விதிக்கமைந்த செந்தமிழ்ச் சொற்களோடு, இக் காலத்திலே பெருமளவு பேச்சுத்தமிழ்ச் சொற்களையும் கையாள்வது வழக்கமாயிருந்து வருகிறது. ஆக்க இலக்கியங்களிலே கதாபாத்திரங்களின் உரையாடல்களை இயற்கையாகக் கையாண்டு சுவையினை ஏற்படுத்துவது வரவேற்கத் தக்கதே. சிறப்பாகச் சமூக



நாடகங்களிலே பாத்திர உரையாடல்கள் பேச்சுத் தமிழில் அமைவதே சிறப்பு. பேராசிரியர் க. கணபதிப்பிள்ளை இதுபற்றிக் கூறியுள்ளது பின்வருமாறு :

"......அன்றியும் நாடகம் என்பது உலக இயல்பை உள்ளது உள்ளபடி காட்டுவது ஆகவே வீட்டிலும் வீதியிலும் பேசுவது போலவே அரங்கிலும் ஆடுவார் பேசல் வேண்டும்."

பேராசிரியரின் கூற்று நாடகத்திற்கு மட்டுமன்றிச் சிறுகதை, நாவல் ஆகியவற்றுக்கும் பொருந்துவதே.

எனினும் பாத்திரங்களின் உரையாடல்களோடு பேச்சுத் தமிழ் நின்றுவிடுவதே நன்று. கதாசிரியர் எழுதும் தங்கூற்று வாக்கியங்களிலும் ( தங்கூற்று — தமது கூற்று ) பாத்திரங்களின் இயக்கம்பற்றிய வாக்கிங்களிலும் பேச்சுத் தமிழ் இடம்பெறுதலை வரவேற்கத் தக்கது.

11. வாக்கியங்களிலே பிறமொழிச் சொற்களைக் கையாளுதல்.

பிறமொழிச் சொற்களைத் தமிழிற் கையாள்வதற்கான சில காரணங்கள் பின்வருமாறு :

I. அச்சொற்களுக்குரிய பொருள் தமிழுக்குப் புதியன.

உ - ம் : பஸ், கார், ரெலிவிஷன், அலவாங்கு.

இவை காலகதியிலே தமிழினின்று பிரிக்கமுடியாத அளவிற்குத் தமிழே ஆகிவிடுவதுமுண்டு. 'அலவாங்கு' இதற்கு உதாரணம். மற்றைச் சொற்களுக்கு முறையே பேருந்து, சிற்றுந்து, தொலைக்காட்சி என்ற தமிழ்ச்சொற்கள் ஆக்கப்பட்டுள்ளன. எனினும் பழக்கம் காரணமாக இவையே எம்மைவிட்டு நீங்காத வாழ்வைப் பெற்றுவிட்டன.

II. தத்துவம் சார்ந்தும் அறிவியல் சார்ந்தும் வருவன :

i. ஆன்மா, ஆணவம், மாயை — வடமொழியிலிருந்து வந்தவை.

ii. ஒட்சிசன், ஐதரசன், காபோனிக்கமிலம் — இவை ஆங்கிலத்தினூடாக வந்தவை.

இவை தவிர்க்கவேண்டாதவை; ஏற்கவேண்டிய கட்டாயத் தேவை எமக்கு உண்டு.

III. ஒலிநயக் கவர்ச்சியாலும் அவற்றைக் கையாள்வது தம்மை அறிவுடையவராகவும் நாகரிகமுடையவராகவும் காட்ட உதவும் எனக் கருதும் கருத்தாலும் தொற்றுநோயாகித் தமிழைப் பீடித்து வருவன.

இவை பேச்சில் மட்டுமன்றி எழுத்திலும் கையாளப்பட்டுத் தமிழை மணிப்பிரவாளமாக்கிக் கொண்டிருக்கின்றன

உ-ம்: "இந்த நாவலில் ஒரு False conflict தான் காட்டப்பட்டிருக்கிறது. Authentic Crisis கிடையாது. அதனால் தான் Authentic Choice இல்லை".

இவ்வாறு தமிழகத்திலிருந்து வெளியாகிவரும் சஞ்சிகைகளிலே வடசொற்கள் மட்டுமன்றி ஆங்கிலச் சொற்களும் கையாளப்படுகின்றன. மேலேயுள்ள உதாரண வாக்கியங்களிலே ஆங்கிலச் சொற்கள் ஆங்கில எழுத்துகளிலேயே எழுதப்பட்டுள்ளமையை நோக்குக. இப்பிரயோக முறை படிப்படியாகக் கூடிக் கொண்டு வருவதையும் தமிழகத்துச் சஞ்சிகைகளிலே நாம் அவதானிக்கலாம். இம்முறையினைத் தவிர்ப்பது நன்று. இயன்ற அளவு தமிழிலுள்ள இயற்சொற்களைக் கையாண்டு, இலக்கண வழுவற்ற நடையில் எழுதுவதே விரும்பத்தக்கது.

## 12. ஆங்கிலச் சொற்றொடர்கள் சில தமிழ்க் கருத்துவடிவம் பெறல்:

ஆங்கிலச் சொற்கள் மட்டுமன்றி ஆங்கிலச்சொற்றொடர்கள் சிலவும் தமிழிலே மொழிபெயர்க்கப்பட்டுத் தமிழ்க் கருத்து வடிவங்களாயுள்ளன.

உ-ம்:
1. A few — ஒரு சில.
2. To face (a problem) — முகங்கொடுத்தல் (பிரச்சனைக்கு)
3. Healthy atmosphere — ஆரோக்கியமான சூழ்நிலை.
4. (Spread like) wild fire — காட்டுத்தீ போலப் (பரவியது.)
5. A decade — ஒரு தசாப்தம்
6. Under the influence — செல்வாக்கினால்
7. * Under the Presidentship (Chairmanship)— தலைமையில்.



8. Welcome change — வரவேற்கக்கூடிய மாற்றம்
9. Golden oppertunity — பொன்னான வாய்ப்பு. (சந்தர்ப்பம்)
10. Nacked truth — நிருவாண உண்மை.

(* இதனைத் 'தலைமையின் கீழ்' என்று நேரடி மொழிபெயர்ப்புச் செய்வதும் உண்டு. இது போன்றே 'All are cordially invited' என்பதையும் அனைவரும் அன்புடன் அழைக்கப்படுகின்றனர்' என்பர். 'தலைமையில்' எனவும், 'அன்புடன் அழைக்கிறோம்' எனவும் கையாள்வதே சிறப்பு)

மேற்குறித்த வகையில் இன்னும் பல எடுத்துக்காட்டுக்கள் உள்ளன. விரிக்கிற் பெருகும். இவை வெறும் மொழிபெயர்ப்புச் சொற்றொடர்களாய் அமையாமல், கருத்தாழத்தைக் கூட்டுவனவாய் அமைதல்வேண்டும், மொழியின் வளர்ச்சிக்கும் வளத்திற்கும் வேண்டிய யாவும் பல திசைகளிலுமிருந்து காலத்திற்குக்காலம் கிடைத்துக் கொண்டேயிருக்கின்றன. அவற்றைப் பயன்பாடும் தேவையும் நோக்கிக் கையாள்வதாலே எமது மொழி மேலும் சிறக்கும் என்பதற்கு ஐயம் இல்லை.

சென்றிடுவீர் எட்டுத் திக்கும் — கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்குச் சேர்ப்பீர்

-பாரதி

# 5. பொதுவியல்

## 1. வழக்கு

தமிழிலே பண்டுதொட்டுக் கையாளப்பட்டுவரும் சொற்கள், சொற்றொடர்கள் என்பன வழக்கின் பாற்படும் வழக்கினை இயல்புவழக்கு. தகுதி வழக்கு என இருவகையாகப் பிரிப்பது இலக்கண ஆசிரியர்களின் முறைமையாகும். தகுதி வழக்குப் பற்றிய விளக்கமும் உதாரணங்களும் பெயரியலிலே தரப்பட்டன. இங்கு இயல்புவழக்கு இன்னதெனக் காண்போம். இயல்பு வழக்கானது இலக்கணமுடையது, இலக்கணப் போலி, மரூஉ என மூன்று பிரிவுகள் கொண்டது.

i. இலக்கணமுடையது.

இலக்கண விதிக்கு முரணாகாத சொற்களும் சொற்றொடர்களும் இலக்கணமுடையவற்றின் பாற்படும்.

உ-ம்: நிலம், நீர், பாற்காவடி.

ii. இலக்கணப் போலி:

சொற்றொடர்களிலமைந்த சொற்களை முன்பின்னாக மாற்றினாலும் சொற்களினிடையிலே வரும் எழுத்துக்கள் சிலவற்றிற்கு மாற்றெழுத்துக்கள் கையாளப்படினும் அவ்வாறமையும் சொற்றொடர்களும் சொற்களும் இலக்கணப் போலியின் பாற்படும்.

உ-ம்: i. இல்முன் — முன்றில் (இல்லத்தின் முன்னுள்ள இடம்.)
நகர்ப்புறம் — புறநகர் (நகரத்திற்குப் புறத்திலுள்ள பகுதி)

ii. கோவில் — கோயில்.
பொதுஇல் — பொதியில்.
(பொதுவில்)

iii. மரூஉ:

சொற்றொடரினிடையே சில எழுத்துக்கள் குறைந்து அச்சொற்றொடர் குறுகிய வடிவில் அமைவது.

உ-ம்: i. அருமருந்தன்ன பிள்ளை — அருமந்தபிள்ளை.
(அரிய அமிர்தம் போன்ற பிள்ளை)

ii. நல்லூர் — நல்லை.
கோப்பாய் — கோவை.



ஒருவரின் பெயர் குறுகி வழங்கப்படும்போதும் அதனை மரூஉ எனலாம்.

உ-ம்: சுப்பிரமணியம் — சுப்பு.
கலைவாணி — கலா

## 2. வழாநிலை, வழு.

திணை, பால், எண், இடம், காலம், வினா, விடை மரபு ஏழும் வழுவாது இலக்கணவிதிப்படி அமைவது வழாநிலை. அவ்வாறன்றி இலக்கண விதியினின்று வழுவியவை வழு எனப்படும்.

| உ-ம்: | வழாநிலை | வழு | |
|---|---|---|---|
| 1. | அவன் வந்தான் | அவன் வந்தது | திணைவழு |
| 2. | கந்தன் வந்தான் | கந்தன் வந்தாள் | பால்வழு |
| 3. | நான் வந்தேன் | நான் வந்தாய் | இடவழு |
| 4. | நாளை வருவேன் | நாளை வந்தேன் | காலவழு |
| 5. | பிறக்கப் போகும் குழவி ஆணா, பெண்ணா? | பிறக்கப் போகும் மகன் ஆணா, பெண்ணா? | வினா வழு |
| 6. | வட்டுக் கோட்டைக்கு வழி யாது? இந்தத் தெருவாற் சென்றால் வட்டுக்கோட்டையை அடையலாம். | வட்டுக்கோட்டைக்கு வழி யாது? துட்டுக்கு இரண்டு கொட்டைப்பாக்கு | விடை வழு |
| 7. | ஆட்டின் இளையது — குட்டி பறவையின் இளையது - குஞ்சு | ஆட்டின் இளையது கன்று பறவையின் இளையது குட்டி | மரபு வழு |

## 3. வழுவமைதி

குறிப்பிட்ட சில சூழ்நிலைகளிலே வழுவையும் விதிவிலக்காக ஏற்கநேரின் அதனை வழுவமைதி என்பர்.

I. திணைவழுவமைதி:

(i) உயர்வுகாரணமாக அஃறிணைப் பொருளை உயர்திணைப் பொருளோடு சார்த்தி இரண்டிற்கும் உயர்திணைமுடிவு கற்பிக்கப்படலாம்.

உ-ம்: அங்கண் விசும்பில் அகனிலாப் பாரிக்கும்
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன் ......

இங்குத் திங்களும் அறிஞரும் ஒப்பர் என்ற உயர்திணை முடிக்கும் சொல் பெற்றது. திங்கள் — அஃறிணை.

(ii) இழிவுகாரணமாக உயர்திணைப் பொருளும் அஃறிணைப் பொருளும் அஃறிணை முடிவினைப் பெறும்.

உ - ம்; மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா.

II. திணை, பால் வழுவமைதி :

உவப்பு, உயர்வு, கோபம், இழித்தல் இவை காரணமாகத் திணையும் பாலும் வழுவி வரலும் இடம்பெறலாம்.

(அ) பால் வழுவமைதி :

உவப்பு : i. 'என் இராசாத்தி வந்தாள்' என்று தன்மகனை மகள்போலப் பாவித்துக் கூறுதல் பால் வழுவமைதியின் பாற்படும்.

உயர்வு : ii. ஒருவனை மதிப்பினாலோ அன்பினாலோ அவர் என அழைப்பதும் பால்வழுவமைதியே.

கோபம் : iii. இவன் ஆணல்லன்; பெண், கோபம் காரணமாக ஆண்பாலைப் பெண்பாலாய்க் கூறியதும் பால்வழுவமைதியேயாகும்.

இழிப்பு : iv. இவள் வெட்கத்தைத் துறந்த ஆண் - பெண்ணை இழித்து ஆண் என அழைத்த பால்வழுவமைதி.

(ஆ) திணை வழுவமைதி :

உவப்பு : ஒரு நாயை என் செல்வன் வந்தான் என்பது உவப்பினால் அஃறிணையினை உயர்திணையாகக் கூறியது.

உயர்வு : கிளியார் வந்தார் — உயர்வுகாரணமாக அஃறிணைக்குரிய கிளி உயர்திணைக்குரிய மரியாதைப் பன்மையாக ஆர் விகுதி பெற்று உயர்திணைப் பலர்பாற் பயனிலையையும் பெற்றது.

சிறப்பு : எங்கள் பொருள் எங்கள் பிள்ளைகள் தாம் — சிறப்பினால் உயர்திணையை அஃறிணையாகக் (பொருள்) கூறல்.

'மடாதிபதி எழுந்தருளியது' — என்பதும் சிறப்பினால் உயர்திணையை அஃறிணையாகக் கூறலே.

கோபம் : இவன் ஒரு நாய் — கோபம் காரணமாக உயர்திணையை அஃறிணையாகக் கூறல்.



III. பால், இடவழுவமைதி :

(அ) ஒன்றன்பாலுக்குரியதைப் பலவின்பாலாகக் கூறுவது பால்வழுவமைதி. இதனை எண்வழுவமைதி எனவும் கூறலாம்.

உ - ம் : நீரெல்லாம் அசுத்தமாயிற்று.

(ஆ) மதிப்புக்காரணமாக முன்னிலையிடத்தாரைப் படர்க்கையிடத்தாராக வழங்கல் இடவழுவமைதியாகும்.

உ - ம் : தங்கள் வரவு நல்வரவாகுக.

(தாங்கள் என்ற படர்க்கைப் பன்மையின் திரிபே தங்கள் என்பது)

IV. காலவழுவமைதி :

விரைவு, மிகுதி, துணிவு ஆகிய காரணங்களாலும் வழக்கே காரணத்தாலும் ஒரு காலத்திற்குரியதை வேறொருகால வாய்பாடு கொண்டு கூறுவது காலவழுவமைதியாகும்.

(அ) விரைவு : விரைந்து வருவேன் என்ற கருத்தில், இன்னும் வராதிருப்பவன், "வந்துவிட்டேன், வந்துவிட்டேன்" எனல்.

(ஆ) மிகுதி : பெரும்பாலும் ஒருசெயல் நிகழும் சூழ்நிலை கருதி அந்நிகழ்வு நிகழ்ந்துவிட்டது எனல்.

உ - ம் : நீ அந்த வழியாற் போனால் உன் பொருளை இழந்துவிட்டாய். (ஏனெனில் அங்குச் செல்வாரிற் பெரும்பாலானவர் — மிகுதியானவர் — பொருளை இழந்தனர்.

(இ) துணிவு : நீ பரீட்சைக்குக் கவனமாகப் படிக்கா விட்டால் தோல்வியடைந்தாய் தோல்வியடைவது உறுதி என்ற துணிவுகாரணமாக எதிர்காலம் இறந்தகாலமாகக் கூறப்பட்டது.

(ஈ) வழக்கு : (i) நாங்கள் இப்பாடசாலையிலே படித்த பொழுது இந்த மைதானத்திலேதான் விளையாடுவோம்.

வேறு எக்காரணமும் பற்று வழக்கே காரணமாக இறந்தகாலம் எதிர்காலமாகக் கூறப்பட்டது.

(ii) முக்காலத்தும் (இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம்) அழியாதிருக்கும் பொருளினை நிகழ்காலத்திற் கூறுவதும் வழக்காகும்.

உ - ம் : மலை நிற்கிறது. கடவுள் இருக்கின்றார். ஆறு விளங்குகின்றது

(iii) நாடகம், நவீனம், சிறுகதை ஆகியவற்றிலும் கதைச்சுவைக்காக இறந்தகாலத்தை நிகழ்காலத்திற் கூறுவதுண்டு.

V. மரபு வழுவமைதி :

மரபு என்பது உயர்ந்தோரால் வகுக்கப்படும் ஒன்று. அவர்கள் எப்பொருளை எச்சொல்லினால் வழங்கினார்களோ அப்பொருளை அச்சொல்லினால் வழங்குவதே மரபு.

உ - ம் : பெண், பிள்ளைப் பெறுவாள்.

இங்குப் பெறுதல் என்பது உயர்திணைப் பெண்பாலுக்கே உரியது. இவ்வாறு கூறுவதற்கு யாது காரணம் எனல் இயலாது. பண்டுதொட்டுப் பெரியோர் வழங்கிவரும் மரபு உண்மையே இவ்வாறு நாமும் கூறுவதற்குக் காரணம்.

'பசு கன்று ஈனும்' என்பதும் மரபால் அமைந்த ஒரு வழக்கே. எனினும் திருவள்ளுவர்,

'ஈன்றாள் பசிகாண்பாளாயினும் என்று உவப்புக் காரணமாகப் பெண்ணை 'ஈன்றாள்' என்றதை மரபுவழுவமைதியாகவே கொள்ளல்வேண்டும்.

"உனையொருத்தி போட்டாளே வேலையற்றுப்போய்" என்று காளமேகப்புலவர் கோபம் காரணமாகச் சோழியப் பிராமணனை வைதமையும் மரபு வழுவமைதியாகக் கொள்ளப்படவேண்டியதே;

இவ்வாறு சான்றோரின் மரபுகளும் அவ்வப்போது போதிய காரண அடிப்படையிலே மீறப்பட்டே வந்துள்ளன.

### 4 ஈ தா, கொடு என்ற சொற்களின் பிரயோகம்

'ஈதல்' என்பது உயர்ந்தோன், தன்னிலும் தாழ்ந்தோனுக்கு வழங்குவதையும், 'தருதல்' என்பது தனக்குச் சமமானவனுக்கு வழங்குவதையும் கொடுத்தல் என்பது தாழ்ந்தோனிடம் உயர்ந்தோன் பெறுவதையும் குறிக்கவரும் சொற்களாகும்.

(ஈ, தா. கொடு என்பன முன்னிலை வினையாயின் முறையே தாழ்ந்தோன் உயர்ந்தோனையும், சமமானவன் சமமானவனையும், உயர்ந்தோன் தாழ்ந்தோனையும் வேண்டும் சொற்களாம்.)

உ - ம் : செல்வன் ஏழைகளுக்குப் பொருள் ஈந்தான்.
இராமன் தன் நண்பர்களுக்குப் பொருள் தந்தான்.
அமைச்சன் அரசனுக்குப் பரிசில் கொடுத்தான்.

இப்பிரயோகங்கள் இன்று தமது முன்னைய வழக்காற்றினை இழந்துவிட்டன.



### 5. இனைத்தென்று அறிபொருளுக்கும் உலகினில் இல்லாப் பொருளுக்கும் உம்மையிடைச்சொல் வழங்கல்

I. இவை இத்தனை என்று அறிந்த பொருளுக்கு வினைமுற்றுக்கொடுத்து வாக்கியமாக்கும்பொழுது முற்றும்மை அளித்தல் வேண்டும்.

உ - ம் : (i) வகுப்பிலே மாணவர் இருபதின்மரும் இருந்தனர்.
(ii) ஐம்புலன்களையும் அடக்குவதே ஞானியின் கடன்.

II. உலகில் இல்லாத கற்பனைப் பொருளைக் கூறும்பொழுதும் முற்றும்மை அளித்தல் வேண்டும்:

உ - ம் ; (i) முயற்கொம்பு எங்கும் இல்லை.
(ii) ஒளிமுன் இருள் யாண்டும் இல்லை.

### 6. செயப்படுபொருளைச் செய்பொருளாகக் கூறல் :

செயப்படுபொருளைக் கருத்தாவைப்போல வைத்துச் செய்வினை முடிவு கொடுத்து வழங்கலாம்.

உ - ம் : (i) இந்தத் தோட்டம் நான் வாங்கியது.
(ii) இந்தப் பசு நான் விற்றது.

### 7. குறியீடுகள் (Punctuation) :

ஆங்கில மொழியினை எம்மனோர் கற்றதன் பயனாகத் தமிழிலே இன்று குறியீடுகள் கையாளப்படும் நன்மை ஏற்பட்டுள்ளது. இடைச் சொற்கள் போலச் சொற்கள், சொற்றொடர்கள் வாக்கியங்களாகியவற்றின் பொருட்பேற்றிற்கும் விளக்கத்திற்கும் குறியீடுகள் பெரிதும் பயன்படுவதால், அவற்றின் இலக்கணத்தினை அறிந்து கொள்ளலும் அவசியமே. குறியீடுகளின் வகைகளாவன:

1. முடிப்பிசைக் குறி ( . )
2. மேற்கோட்குறி ( ' ' )
3. உரையாடற்குறி (" ")
4. உறுப்பிசைக்குறி ( , )
5. வியப்பிசைக்குறி ( ! )
6. தொடரிசைக்குறி ( ; )
7. பிறையடைப்புக்குறி ( )
8. வினாக்குறி ( ? )

1. முடிப்பிசைக்குறி :

எழுவாய் பயனிலையாகிய வாக்கிய உறுப்புக்களோடு கூடிக் கருத்து முற்றுப்பெற்று நிற்கும் வாக்கியத்தின் இறுதியிலே இடப் படும் குறியாகும்.

உ - ம் : இராமன் அயோத்திக்கு மீண்டான்.

2. மேற்கோட்குறி :

பழமொழிகள், மேற்கோள்கள் ஆகியவற்றை வேறுபடுத்திக் காட்ட வழங்கப்படும் குறி.

உ - ம் : 'அறஞ்செய விரும்பு' என்பது ஔவையின் பொன் மொழி.

3. உரையாடற்குறி :

ஒருவர் தமது கூற்றினை வெளிப்படுத்தும்பொழுது அக்கூற் றினைப் பிரதான வாக்கியத்தினின்று வேறுபடுத்த வழங்கும் குறி

உ - ம் : இராமன் இலக்குமணனை நோக்கி, "நீ பொறுமை யைக் கடைப்பிடிக்காவிடில் எமது குறிக்கோள் பாழாகிவிடும்" என்றான்.

4. உறுப்பிசைக்குறி :

ஒரு வாக்கியத்தில் இரு பெயர்கள் அடுத்துவருமாயின் அவற்றை வேறுபடுத்தித் தெளிவாக்கவும், ஓர் இனமாகிய பொருள்களை எண்ணுப் பொருள்களாகத் தொடர்ந்து எழுத நேருகையில் இறுதிக்கு முன்னுள்ளவற்றைத் தனித்துக் காட்டவும், கடிதத்தில் விளிக்கப்படுபவரின் விளிக்கு இறுதியாகவும் இடப் படுவது உறுப்பிசைக் குறியாகும்

உ - ம் : (i) சந்தையா, செல்லையாவை அழைத்துக் கொண்டு சென்றான்

(ii) இலங்கையிலே வடமாகாணம், கீழ்மாகாணம், மேல்மாகாணம், வடமத்திய மாகாணம் முதலிய ஒன்பது மாகாணங்கள் உள்ளன.

(iii) அன்பார்ந்த நண்ப,

5. வியப்பிசைக்குறி :

விளித்தல், வியப்பு, அச்சம், அவலம் ஆகியவற்றைப் புலப் படுத்த இடுங்குறி.

உ - ம் : தம்பி ! இங்கே வா.
ஆஹா ! என்னே அற்புதம் !
ஐயோ ! என்னை அடிக்கிறான்.
அந்தோ ! என்வாழ்வு முடிந்தது.



6 தொடரிசைக்குறி :

ஓரெழுவாய், பல பயனிலைகள் அமையும் வசனங்களிலே பயனிலைகள் தோறும் தொடரிசைக்குறி கையாளப்படும்.

உ - ம் : இராமன் காடு சென்றான்; பதினான்காண்டுகள் காடுறைந்தான்; பின்னர் நாடு திரும்பினான்; பரதனின் வேண்டு கோட்படி முடிசூடி அயோத்தியை ஆளலானான்.

7. பிறையடைப்புக்குறி :

ஒரு வாக்கியத்தினிடையிலே பிறமொழிச்சொல் ஒன்றை விளக்கத்திற்காகக் கையாள நேரும்பொழுதும், பிரதான வாக்கியப் பகுதியிற் கூறப்படுவனவற்றிற்கு மேலதிக விளக்கம் தர நேரும் பொழுதும் பிறையடைப்புக்குறி கையாளப்படும்.

உ - ம் : (i) இலக்கியம் என்பது வாழ்க்கையின் நாடக மாக்கலே (Dramatization of Life).

(ii) உலக நாடுகள் பலவற்றிலும் பொருளாதார மந்தம் (பொருளுற்பத்தியிலே தேக்கம்) ஏற் பட்டு வருகிறது.

# பின்னிணைப்பு

## நினைவில் இருத்தவேண்டிய சில இலக்கணச் சூத்திரங்கள்

[ தமிழிலே காலத்துக்குக் காலம் பல இலக்கண நூல்கள் தோன்றியுள்ளன. இவற்றுள்ளே காலத்தால் முற்பட்ட தொல்காப்பியமும் பின்னெழுந்த நன்னூலும் முதன்மையானவை. முன்னதன் மூலம் பழந்தமிழ் இலக்கண மரபையும் பின்னதன் மூலம் இடைக்காலத் தமிழ் இலக்கண மரபையும் தெளிவாக அறியலாம். 'இலக்கணத் தெளிவு' என்ற இந்நூலிலே இவ்விரண்டு நூல்களிலிருந்தும் இலக்கண முடிபுகள் எடுத்தாளப்பட்டுள்ளன. இன்றியமையாதனவும் நினைவில் நிறுத்த வேண்டுவனவுமான சில சூத்திரங்களை இந்நூல்களிலிருந்து தெரிந்து கீழே தந்துள்ளோம். இவற்றைப் பொருளுணர்ந்து மனனம் செய்துகொள்வது நல்லது. ]

[தொல் — தொல்காப்பியம். நன் — நன்னூல் ]

### எழுத்து

எழுத்தெனப் படுவ
அகர முத(ல்)
னகர இறுவாய் முப்பஃதென்ப
சார்ந்துவரன் மரபில் மூன்றலங் கடையே. 1
(தொல். எழுத்ததிகாரம், நூன்மரபு-1)

அவைதாம்
குற்றிய லிகரம் குற்றிய லுகரம்
ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன. 2
( ஷை 2 )

மொழிமுதற் காரண மாம்அணுத் திரளொலி
எழுத்தது முதல்சார் பெனவிரு வகைத்தே. 3
(நன். எழுத்தியல் 2)

உயிர்மெய் யாய்தம் உயிரள பொற்றள(பு)
அஃகிய இஉ ஐஔ மஃகான்
தனிநிலை பத்தும் சார்பெழுத் தாகும். 4
( ஷை 3 )



### சொல்

உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை என்மனார் அவரல பிறவே
ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே. 5
(தொல். சொல்லதிகாரம். கிளவியாக்கம் 1)

எழுத்தே தனித்துந் தொடர்ந்தும் பொருள்தரிற்
பதமாம் அதுபகாப் பதம்பகு பதமென
இருபா லாகி இயலும் என்ப. 6
(நன். பதவியல் 1)

(நன்னூலார் சொல் என்பதற்குப் பதிலாகப் 'பதம்' என்ற வடசொல்லைக் கையாண்டுள்ளார்.)

### சொல்லின் வகை

சொல்லெனப் படுப பெயரே வினையென்(று)
ஆயிரண் டென்ப அறிந்திசி னோரே. 7
(தொல். சொல். பெயரியல் 4)

இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும்
அவற்றுவழி மருங்கிற் றோன்றும் என்ப. 8
( ஷை 5 )

அதுவே,
இயற்சொல் திரிசொல் இயல்பிற் பெயர்வினை
எனவிரண் டாகும் இடையுரி அடுத்து
நான்குமாம் திசைவட சொலணு காவழி.
(நன். பெயரியல் 13)

### பெயர்

அவற்றுள்,
பெயரெனப் படுபவை தெரியுங் காலை
உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்
ஆயிரு திணைக்கும் ஓரன்ன உரிமையும்
அம்மூ வுருபின் தோன்ற லாறே. 10
( தொல். சொல். பெயரியல் 6)

இடுகுறி காரண மரபோ டாக்கம்
தொடர்ந்து தொழிலல காலந் தோற்றா
வேற்றுமைக் கிடனாய்த் திணைபா லிடத்தொன்(று)
ஏற்பவும் பொதுவும் ஆவன பெயரே. 11
(நன். பெயரியல் 18)

### வினை

வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும். 12
(தொல். வினையியல் 1)

செய்பவன் கருவி நிலஞ்செயல் காலம்
செய்பொரு ளாறும் தருவது வினையே. 13
( நன். வினையியல் 1)

பொருள்முத லாறினும் தோற்றிமுன் னாறனுள்
வினைமுதல் மாத்திரை விளக்கல் *வினைகுறிப்பே 14
(நன். வினையியல் 2)

* வினைக்குறிப்பு — குறிப்புவினைச்சொல்.

### பெயரெச்சம்

செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டிற்
காலமும் செயலும் தோன்றிப் பாலொடு
செய்வ தாதி அறுபொருட் பெயரும்
எஞ்ச நிற்பது பெயரெச் சம்மே.
(நன். வினையியல் 20)

### வினையெச்சம்

தொழிலும் காலமும் தோன்றிப் பால்வினை
ஒழிய நிற்பது வினையெச் சம்மே. 16
(நன். வினையியல் 23)

### வினையெச்ச வாய்பாடுகள்

செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச் செயச் செயின் செய்யிய செய்யியர்
வான்பான் பாக்கின வினையெச் சம்பிற
ஐந்தொன் றாறும்முக் காலமும் உணர்த்தும், 17
(நன். வினையியல் 24)

ஐந்து — முதல் ஐந்து வாய்பாடுகள்
('செய்தென'வரை இறந்தகாலத்துக்குரியன)

ஒன்று — ஆறாவது வாய்பாடு.
('செய' என் எச்சம். முக்காலமும் உணர்த்தும்)

ஆறு — இறுதி ஆறு வாய்பாடுகள்
(எதிர்காலம் உணர்த்தும்)



### ஆகுபெயர்

பொருள்முத லாறோ டளவைசொல் தானி
கருவி காரியம் கருத்த னாதியுள்
ஒன்றன் பெயரால் அதற்கியை பிறிதைத்
தொன்முறை உரைப்பன ஆகு பெயரே 18
(நன். பெயரியல் 33)

### அன்மொழித்தொகை

ஐந்தொகை மொழிமேற் பிறதொகல் அன்மொழி 19
(நன். பொதுவியல் 18)

### வினைத்தொகை

காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை 20
(நன். பொதுவியல் 13)

### இடைச்சொல்

வேற்றுமை வினைசா ரியையொப் புருபுகள்
தத்தம் பொருள்இ சைநிறை அசைநிலை
குறிப்பெனெண் பகுதியிற் றனித்திய லின்றிப்
பெயரினும் வினையினும் பின்முன் ஓரிடத்(து)
ஒன்றும பலவும்வந் தொன்றுவ திடைச்சொல். 21
(நன். இடையியல் - 1)

### உரிச்சொல்

பலவகைப் பண்பும் பகர்பெய ராகி
ஒருகுணம் பலகுணம் தழுவிப் பெயர்வினை
ஒருவா செய்யுட் குரியன உரிச்சொல். 22
(நன். உரியியல் - 1)

### வடசொல்

வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே. 23
(தொல். சொல். எச்சவியல் - 5)

### திசைச்சொல்

செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்திலும்
ஒன்பதிற் றிரண்டினில் தமிழொழி நிலத்தினும்
தங்குறிப் பினவே திசைச்சொல் என்ப. 24
(நன். பெயரியல் 16)

புணர்ச்சி

உயிர்முன் உயிர் புணர்தல்

இ ஈ ஐ வழி யவ்வும் ஏனை
உயிர்வழி வவ்வும் ஏமுன்இவ் விருமையும்
உயிர்வரின் உடம்படு மெய்யென் றாகும். 25

(நன். உயிரீற்றுப் புணரியல் 12)

குற்றியலுகரப் புணர்ச்சி

உயிர்வரின் உக்குறள் மெய்விட் டோடும்
யவ்வரின் இய்யாம் முற்றும் அற்றொரேவழி 26

(நன். உ. ஈ. பு. 13)

பண்புப்பெயர்ப் புணர்ச்சி

ஈறு போதல் இடையுகரம் இய்யாதல்
ஆதி நீடல் அடியகரம் ஐயாதல்
தன்னொற் றிரட்டல் முன்னின்ற மெய்திரிதல்
இனமிகல் இனையவும் பண்பிற் கியல்பே. 27

(நன். பதவியல் - 10)

வினா, சுட்டு ஆகியவற்றின்முன்பு உயிரும் மெய்யும் புணர்தல்

எகர வினாமுச் சுட்டின் முன்னர்
உயிரும் யகரமும் எய்தின் வவ்வும்
பிறவரின் அவையும் தூக்கிற் சுட்டும்
நீளின் யகரமும் தோன்றுதல் இயல்பே. 28

(நன். உ. ஈ. பு. 13)

பூப்பெயர்முன் வல்லினம் புணர்தல்

பூப்பெயர் முன்னின மென்மையுந் தோன்றும். 29

(நன். உ. ஈ. பு. 14)

மெய்யீற்றின்முன் உயிர் புணர்தல்

உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே. 30

(நன். மெய்யீற்றுப் புணரியல் 1)

தனிக்குற்றெழுத்தின் முன்பு உயிர்வந்து புணரல்

தனிக்குறில்முன் ஒற்று உயிர்வரின் இரட்டும் 31

(நன். மெ. ஈ. பு. 2)

ன, ல, ண, ள முன் த, ந வந்து புணரல்

னலமுன் றனவும் ளணமுன் டணவும்
ஆகுந் தநக்கள் ஆயுங் காலே. 32

(நன். மெ. ஈ. பு. 34)

# பொருளட்டவணை

## உசாத்துணை நூல்கள்


1. இலக்கணச் சுருக்கம் — ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்
2. இலக்கண விளக்கம் — க. வீரகத்தி
3. இறையனாரகப்பொருள் — கழக வெளியீடு
4. செந்தமிழ் இலக்கணம் — பொன்னம்பலம் இராமநாதன்
5. சொல்லின் செல்வம் — நா. பார்த்தசாரதி
6. தமிழ் வரலாறு — ஞா. தேவநேயன்
7. தமிழ் வரலாற்றிலக்கணம் — டாக்டர் ஆ வேலுப்பிள்ளை
8. தொல்காப்பியம் - எழுத்ததிகாரம் - நச்சினார்க்கினியம்
9. ,, - சொல்லதிகாரம் — சேனாவரையம்
10. நன்னூற்காண்டிகையுரை — ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்
11. நன்னூல் இலகுபோதம் - எழுத்ததிகாரம் ) ஆ. முத்துத்
    ,, ,, - சொல்லதிகாரம் ) தம்பிப்பிள்ளை
12. நன்னூல் உதாரண விளக்கம் — ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை
    பதிப்பாசிரியர் க. வீரகத்தி
13. பாரதீபம் - முதலாம் பாகம் ) பண்டிதமணி க. க. நவ
14. ,, - இரண்டாம் பாகம் ) நீதகிருஷ்ணபாரதிபார்
15. மொழியியல் — ரா. சீனிவாசன் எம். ஏ.
16. மொழி வரலாறு — டாக்டர் மு. வரதராசன்


---

## பிழைதிருத்தம்

| பக்கம் | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 2 | 'இதனை' | இதனை |
| 26 | நயந்துவே | நயந்ததுவே |
| 27 | Editoria | Editorial |
| | ம்,கள | கள் |
| 29 | பெயர் பகுதி | பெயர்ப்பகுதி |
| | பெயர்ப் பகுதி | பெயர்ப்பகுதி |
| | ஓது + ஆன், | ஓது + (வ்) + ஆன் |
| 33 | 'மை' | 'தாமரை' |
| 36 | வேண்டியதும் | வேண்டியது |
| 38 | உருபாகவும் பயனுதல் | உருபாகவும் பயனுகும் |
| 45 | வேற்றுமையைக் | வேற்றுமையை |
| 54 | உறுப்புக்களாய் | உறுப்புக்களாய் |
| 56 | பெயரெச்சகம் | பெயரெச்சம் |
| 63 | நடந்து | நடந்தது |
| 69 | பெற்று செய்த | பெற்றுச் செய்த |
| | எதிர்மறைக் குறிப்புவினைப் பெயரெச்சம் | குறிப்புவினைப் பெயரெச்சம். (தலைப்பிலும் பந்தியிலும் திருத்துக) |
| | பெயரெச்சங்குளாம் | பெயரெச்சங்களாகும் |
| 70 | 'படத்த பாம்பு' என்பதன்கீழ் தலைப்பு இல்லை | 'எதிர்மறைக் குறிப்பு வினைப் பெயரெச்சம்' என்பதைச் சேர்க்க |
| 72 | ஈற்றுயிர்மெய்க்குமுன் வரும் 'ப்', 'ந்' ஆதல் | ஈற்றுயிர் மெய்க்குமுன் 'ந்' தோன்றல் |
| 80 | படுத்திடுந்தான் | படுத்திருந்தான் |
| 88 | இடைச் சோற்கள் | இடைச்சொற்கள் |
| 89 | புதுமைச் | புதுமை |
| 92 | இ உ | இ |
| 99 | திரித்தான் | தரித்தவன் |
| 104 | கைக்காந்தன் | கைக்காந்தள் |
| | சாரிகை | சாரிகை, |
| 106 | வருமொழி தொடக் | வருமொழித் தொடக் |
| 127 | கையாள்வதுவும் | கையாள்வதும் |
| 128 | உரைநடைபும் | உரைநடையும் |
| 129 | புலி செயப்படுபொருளா? | புலி. அது செயப்படு பொருள். |
| | பயனிலையா? | தவிர்க்குக. 'கொன்றது என்பது' முடிக்கும் சொல் என்ற வாக்கியத்தைச் சேர்க்குக. |
| 130 | கொலலலாகிய | கொல்லலாகிய |
| | ஓசைகிசைய | ஓசைக்கிசைய |
| 131 | கருத்து, | கருத்து |
| 136 | புடவை | புடைவை |
| | தெரிநிலைவினைமுற்றுப் | தெரிநிலைவினைமுற்றும் |

## இந்நூல்:....

""இலக்கணச் சுருக்கம், க. பொ. த. ப. உயர்தர மாணவர்களுக்குப் பாடநூலாக அமைகின்றது. அந்நூல் கூறும் இலக்கண விதிகளை விளங்கிக்கொள்வதிலே பல மாணவர்கள் அவதியுறுகின்றனர்; அவர்களுக்கு அவ்விதிகளை இலகுமுறையிலே இக்கால நடைமுறையிலிருக்கும் உரைநடையிலே விளக்கம் கூறும் ஒருநூல் பயனளிப்பதாகும். அத்தகைய பயன்பாடுடைய நூலாக 'இலக்கணத் தெளிவு' அமையும் என்பது திண்ணம்.''

கலாநிதி அ. சண்முகதாஸ்